# திருக்குறள் வியாச மஞ்சரி

6811

## பொருட்பால்

MAHAMAHOPADHYAYA
DR. U. V. S. IYER LIBRARY
BESANT NAGAR :: MADRAS

கணபதி கம்பெனியார்
புத்தக வியாபாரிகள்
பிரம்பூர், சென்னை.

ரைட்]

[விலை அணா 10

# நான்முகம்

நாட்டின் வளர்ச்சிக்கு இளைஞர் இன்றியமையாதவர். கல்வி கேள்வி விடாமுயற்சி பெருந்தன்மை முதலியவை சிறுவர்களுக்குச் சீரிய வணிகளாம். அவ்வணைத்துக்கும் கல்வி அடிப்படை. ஒருவன் தன் மனக் கருத்தைக் கல்வி யறிவா னன்றிப் பிறர்க்கு விளக்க முடியாது. அவ்வறிவு பேசல் எழுதல் என்று இரண்டு வகைப்படும். இரண்டிலும் திருந்துவதற்கு இந்தப் புத்தகம் இருந்து தீரவேண்டும். இதில் விளக்கப்பட்டுள்ளவை திருக்குறளிற் சுருங்கி யிருப்பவைகளே யாகும். நம் தமிழ் நாட்டில் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் என்ற அழகுக்குத் திருக்குறளினும் வேறு சிறந்த நூல் இல்லை. உத்தம வொழுக்கங்களை வரை யறுப்பதில் திருக்குறள் ஒப்புயர் வற்றது.

இந்தப் புத்தகம் திருக்குறளின் பொருளதிகார விஷயங்களை வியாசமாகவும், புராண கதைகளை உதாரணமாகவும், கொண்டு முடிந்திருக்கின்றது. உதாரணங்களை உடன்பாடு எதிர்மறை என்ற இரு வழியிலும் எடுத்துச் சொல்வது எந்நாளிலும் இயற்கை. அப்படிப்பட்டவற்றை ஆசிரியர் தாம் வித்தியார்த்திகளுக்கு விளங்க வைக்கவேண்டும்.

இங்ஙனம்:

**கணபதி கம்பெனியார்.**

DR. U. V. ... MADRAS-600 090

# விஷய அட்டவணை

# திருக்குறள் வியாச மஞ்சரி

## இரண்டாவது பொருட்பால்

### காப்பு

உருக்கிள நயர்கதி நுதாச னன்மதித்
திருக்கிளர் நயன்மாச் சிறந்த நாயகன்
மருக்கிளர் மறைகமழ் வனஜத் தாண்மலர்
திருக்குறள் வியாசமஞ் சரியைச் சேர்க்குமால்.

மருட்பால் வையம் மயக்க முறவகை
தெருட்பா லாக்கித் திகழும் திருக்குறள்
பொருட்பா லுக்குப் புகல்வான் கயானன்
விருப்பாற் காதை வியாசமு மோங்கவே.

## அரசியல்

### 39—அதிகாரம் இறைமாட்சி :— மநுச் சோழன்

இறைமாட்சி யெனபதற்கு நல்ல குணங்களாலும், நல்ல தொழில்களாலும உண்டாகின்ற அரசனுடைய பெருமை யென்பது பொருள். எல்லா வுலகங்களையும காத்து வருகின்ற திருமால் முதலான தேவர்கள் போல, எல்லா வுயிர்களையும அறத்தில் வழுவாமல் காப்பாற்றி வருவதனால், அரசனுக்கு இறைவன் என்று பெயர் உண்டாயிற்று. இறைமை-பெருமை. நாடு, காவல், அமைச்சு, பொருள்,

படை, நட்பு என்ற ஆறையும் அரசனுக்கு அங்கம் என்பார்கள். அங்கத்தின் சிறப்புக்குத் தக்கபடி ஆளுகையும் சிறப்புப் பெற்றிருக்கும்.

தொழில் செய்வதில் விடாமுயற்சியும், செய் தொழிலில் மனம் தளராமையும், படைவீரர்க்கு வெகுமதி யளித்தலும், பேரறிவும் என்ற நான்கும் அரசனுக்கு இயல்பில் இருக்க வேண்டும். பெரியவர், படைக்கலம் பயிலுதல், பகைவரை அழிக்குதல், பல்லுயிர் ஓம்புதல் முதலானவற்றை அரசன் தொழில்கள் என்று சொல்லுவர். நாட்டைக் காக்கின்ற மன்னவன் நாளும் கவனிக்கவேண்டிய தொழில்கள் நான்கு. அவை :—பொருள் வரும் வழிகளை மேலும் மேலும் பெருக்குதல், அங்ஙனம் பெருக்கியவற்றை ஒரு வழியில் திரட்டுதல், அங்ஙனம் திரட்டியவற்றைப் பிறர் கொள்ளா வண்ணம் காப்பாற்றுதல், அங்ஙனம் காப்பாற்றியவற்றை அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் செலவிடுதல் என்பன வாகும். செலவு செய்வதில் தேவர், அந்தணர், வறியவர் என்பவர்களுக்கு அறம் கருதிக் கொடுக்கின்றவற்றை அறக் கொடை என்றும், படைகளைப் பெருக்கும் பொருட்டுக் கொடுக்கின்றவற்றைப் பொருட் கொடை என்றும், பூஞ் சோலை, செய்குன்று, அரண்மனை முதலானவற்றை அழகு பெற அமைக்கும் பொருட்டுக் கொடுக்கின்றவற்றை இன்பக் கொடை என்றும் இயம்புவார்கள்.

அரசன் இனிய முகத்தோடு நாளும் கொலுவில் அமர்ந்து, முறையை விரும்பியும், குறையை விளம்பவும் வருகின்றவருக்கு எளிதில் காட்சி யளித்தும், அவர்கள் விண்ணப்பங்களைப் பொறுமை கொண்டு கேட்டும், அவர்களுக்கு இன் சொல் சொல்லியும், நீதி நடத்தவேண்டும். குடிகள் நடந்து கொள்ளவேண்டிய நல்லொழுக்கங்களுக்கு அரசன், தான் மேல்வரிச் சட்டம் என்பதை மறக்க லாகாது.

அமைச்சர்களோடு நன்ருக ஆலோசனை செய்யாமல், அற்பத் தொழில்தானே யென்று, தானுக ஒன்றையும் செய்ய லாகாது. அமைச்சரிற் சிலர் வெறுப்பனவற்றைச் சொன்ஞலும், அவர்களை இகழ லாகாது. வீணைக்குத் தந்தியும், மலருக்கு மணமும் போல அரசர்க்கு அமைச்சர் அவசிய மானவர்கள். அந்தணர் தவக் கோலும், வணிகர் துலைக் கோலும், வேளாளர் உழவு கோலும், அரசருடைய செங்கோலின் அமைதியில் ஆட்சி பெறவேண்டும். செங்கோல் கோணிஞல், அந்த மூன்றும் கோணிக் குறைந்து போய் விடும்.

முன்னர்த் திருவாரூரில் மநுச்சோழன் என்று ஒரு மன்னவன் இருந்தான். அவன் மகனுக்கு வீதி விடங்கன் என்று பெயர். அந்தச் சிறுவன் ஒரு நாள் தியாகராஜப் பெருமானைத் தரிசனம் செய்வதற்குத் தேரில் ஏறிச் சென்ருன். வீரர்களும் நண்பர்களும் வாகனங்களில் அமர்ந்து, அரச குமாரனை அடுத்துச் சென்ருர்கள். அச்சிறுவன் அரச வீதியிற் செல்லும் பொழுது மிகவும் இளைய பசுவின் கன்று ஒன்று தாயைப் பிரிந்து, செல்லும் இடம் தெரியாமல் நடுவிற் புகுந்து ஓடிற்று. தேர்க் குதிரைகள் அதனைக் கண்டு மருண்டு, பாகனுக்கு அடங்காமல், வேகமாய்ச் செல்கையில், ரத சக்கரம் அவ் விளங்கன்றின்மீது உருண்டு போய் விட்டது. அதனுல், உடல் நசுங்கி, மாமிசமும் குடரும் வெளியில் வந்து அந்தக் கன்று இறந்து போயிற்று.

அரச குமாரன் அவ் வலங்கோலத்தைக் கண்டு, பைத்தியம் பிடித்தவன் போலப் பலவாறு புலம்பினுன். அணிகளையும் ஆடைகளையும் அகல வீசி யெறிந்தான். தலையில் அறைந்தும், தலை மயிரைப் பிய்த்தும், நிலத்தில் விழுந்து புரண்டான். 'இறந்துபோன கன்றுக்குத் தான் என்ன காரியம் செய்தால், ஆறுதலாகும்' என்று, என்ன வென்னவோ எண்ணினுன். முடிவில், தனக்கு உலக வறிவு நிரம்பாததா

லும், நீதி நுட்பங்கள் தெரியாததாலும், அவற்றை அறிந்த நான்மறை வேதியர் 'நுவலுகின்ற வண்ணம் நடப்பதுவே நியாயமாகும் என்று நினைத்து, அவர்களை நாடிப் போனான் பிற்பாடு, தாய்ப் பசு கன்றைத் தேடிக்கொண்டு அரச வீதிக்கு வந்தது. அங்குக் குடர் பிதுங்கி இறந்து கிடக்கின்ற கன்றைக் கண்டு, கண்ணீர் வடித்தும், கதறிப் புலம்பியும், வருந்தித் துடித்தும், சற்றுநேரம் வரையில் துக்கம் கொண்டாடிற்று. அப்புறம், அந்தப் பசு வெறி பிடித்ததுபோல மன்னவன் சபைக்கு வேகமாய்ச் சென்று, அங்குத் தொங்கிக் கொண்டிருந்த கயிற்றை வாயில் கௌவிக்கொண்டு, ஆராய்ச்சி மணியைக் கணகண வென்று அடித்தது.

மநுச் சோழன் மணி யோசையைக் கேட்டு மனக் கலக்கமடைந்து, மந்திரிகளை நோக்கினான். அறிக்கைக்காரர்கள் ஆவின் கன்று ஆவி யிழந்த செய்தியை அறிவித்து வணங்கினார்கள். அரசன் நெருப்பு மிதித்தவர்போலத் துணுக்குற்று வருந்திச் "சிவ சிவா! அரியணையில் இருந்து, அவனியை ஆளப் பிறந்த அருமை மகன் ஆவின் கன்றை அதம் செய்து விட்டானே; இந்தப் பெரும் பாதகத்தை எப்படிப் போக்கிக் கொள்ள முடியும்? கமலாலயத்திற் செய்த கோவதை எங்கும் கழியமாட்டாதே; அமைச்சர்களே! நான் இப்பொழுது செய்ய வேண்டிய தென்ன? அரச நீதிக்கும், ஆவின் கன்றுக்கும், அரிய பசுவுக்கும் என்ன காரியம் செய்தால், இயைவுள்ளதா யிருக்கும்? ஆராய்ந்து சொல்லுங்கள்" என்று கேட்டான்.

அவர்கள் "கோவதை செய்தவர்க்குக் கங்கையிற் படிதலும், காசினியை வலம் வருதலும், பிராயச்சித்தம் என்று நூல்கள் நுவலுகின்றன; இள வரசருக்கு அவற்றில் ஒன்றை யாவது, அல்லது இரண்டையு மாவது கட்டளை யிடுங்கள்; சீக்கிரம் செய்து சுத்தராய் வரட்டும்" என்று கூறினார்கள்.

சோழ மன்னவன் அதனை அங்கீகரிக்க வில்லை. அவன் "நேர்மை யுள்ளவர்களே! நான் பக்ஷம் பாராட்டிச் "செங் கோலைக் கடக்க மாட்டேன்; பூவலம் வருதலும், புண்ணிய நீரிற் படிதலும், பாபத்துக்குப் பிராயச்சித்த மாகுமே யன்றி, இறந்த கன்றுக்கேனும, இரங்கும் பசுவுக்கேனும், ஆறுதலை அளியா; எனக்கு இறந்துபோன கன்றை எழுப்பித் தருகின்ற தெய்வ வல்லமை இராமற் போனாலும், நீதி நடத்தும் நேர் மைகூட இராமற் போக வில்லை. தாய்ப் பசுவைப் போலவே நானும் வருந்துவதுதான் நியாயமானது" என்று சொல்லித் தன் மகன் வீதி விடங்கனைத் தெருவிற் படுக்க விட்டு, அவன் மார்பின்மீது தேர்ச் சக்கரத்தைச் செலுத்தி, நீதியை நிலை நிறுத்தினான். என்ன ஆச்சரியம் பாருங்கள்! மகன் என்றும் பாராமல், நீதியை நிறுத்தின மநுச் சோழ மன்னவன் அதனாற்றான் மாநிலத்தில் இன்னமும் மதிப் படைந்து வருகிறான்.

—பெரிய புராணம்.

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

## 40—கல்வி :—கம்பர்

கற்றற்கு உரிய நூல்களைக் கற்பதற்குக் கல்வி என்று பெயர். கல்வி, வி-விகுதி பெற்ற தொழிற் பெயர். நூல்களாவன-மநு முதலான அற நூல்களும், சாணக்கியம் முதலான நீதி நூல்களும், யானை, குதிரை, தேர், படை என்ற இவற்றின் நூல்களு மாகும். கற்பவற்றில் ஐயப்பாடு கூடாது. ஐயம் இருந்தால், அது பல விபரீத வுணர்ச்சிக ளுக்கும் வித்தாகி, இம்மை மறுமை என்ற இரண்டையும் கெடுத்துவிடும்.

ஒருவனுக்குக் கல்வி ஊழ்வினையினால் உண்டாகின்ற எழுவகைப் பிறப்பின் கண்ணும் சென்று உறுதி செய்கின்றது. அதனால், செல்வர் முன்னிலையில் தரித்திரர் நிற்பதுபோல, ஒருவன் ஆசிரியர் முன்னிலையில் அடக்கமாய் நின்று ஆசையோடு கற்க வேண்டும். அங்ஙனம் கற்ற கல்வி இறைக்குந்தோறும் சுரக்கின்ற மணற்கேணியே போலக், கொள்வாருக்குக் கொடுக்கக் கொடுக்க, பெருகி வளர்ந்து பெருமை பெற்றிருக்கும். தாயத்தார், கள்வர், வலியவர், அரசர், நெருப்பு என்ற இவர்களால் அபகரிக்க முடியாத பெருமை பெற்றபடியினால், கல்வி ஒருவனுக்குச் செல்வத்தைக் காட்டிலும் சிறந்ததாகின்றது.

கல்விக்குக் கரை இல்லாதபடியினால், கற்பவன் தனது உடல் வலிமையையும், இடம் பொருள் ஏவல் முதலான துணை வலிமையையும் அறிந்து, தக்கவற்றை ஆராய்ந்து கற்க வேண்டும். அங்ஙனம் கற்ற கல்வி தன்னை உடையவனுக்கு இம்மையில் பொருள் புகழ் பூசனை முதலானவற்றைக் கொடுத்து, அறத்தை ஆக்குவித்து, மறுமையில் வீட்டையும் அடைவிக்கின்றது. இன்னமும் உலகமும் உலகப் பொருள்களும் கல்வி யுடையவனுக்கு உரிமை யாகின்றன. கல்விக்கு ஒழுக்கமும், ஒழுக்கத்துக்கு மதிப்பும், மதிப்புக்குப் பொருளும், பொருளுக்கு அறமும பயன்களாம. உயர்ந்த அரசரும், கற்றவர் வீட்டுக் கடைவாயிலிற் சென்று, அவர்களோடு சம்பாஷிக்கச் சமயம் கருதிக் காத்திருப்பார்கள்.

முன்னொரு சமயத்தில் உறையூர்ப் பட்டணத்தில் இருந்த குமார குலோத்துங்கன் என்ற சோழ மன்னவனும், கவி சக்ரவர்த்தியாகிய கம்பரும், ஒரு சோலையில் உலாவச் சென்றார்கள். அப்பொழுது, எல்லா விதத்திலும் சிறப்புப் பெற்றிருந்த சோழ மன்னவன் "புலவர் பெருமானே! இந்தச் சோழநாடும், இந்நாட்டு உயிர்களும் எனக்கு அடிமைகள்

அல்லவா?'' என்று கேட்டான். கம்பர் அரசன் அறியாமைக்கு வருந்தி, "ஆம், மகா ராஜாவே! இந்த நாட்டு உயிர்கள் தங்களுக்கு அடிமையா யிருப்பனவும், அப்படிப்பட்ட தாங்கள் புலவனுகிய எனக்கு அடிமையா யிருப்பதுவும், ஆச்சரியம்தான்'' என்று சிரித்துக் கொண்டு சொன்னார். அதுஅரசனுக்கு அங்கீகார மாகவில்லை. அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு, அப்பாற் போய் விட்டான். புலவர் பெருமானும் வேறு வழியாக வீடு போய்ச் சேர்ந்தார்.

மற்றை நாள் அரசன் தன் பணிப் பெண்ணுகிய பொன்னியென்பவளை ஏவித் 'தாசி பொன்னிக்குக் கம்பன் அடிமை' என்று, அவளை எழுதித் தரச் செய்து, அதனைச் சபையில் அனைவருக்கும் காட்டிச் சிரித்தான். கம்பர் "அரசர் சிங்கமே! தாங்கள் பொருள் தெரியாமல் புகன்று மகிழ்கிறீர்கள்; நான் 'உலக மாதாவாகிய ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு அடிமை' என்று, எழுதித் தந்திருக்கிறேன்; இதில் அவமானம் ஒன்றையும் காணேமே?'' என்று சொன்னார். அரசன் அந்த வேற்றுப் பொருளைக் கேட்டு மனம் புழுங்கி, 'இனி நீங்கள் இஷ்டமான விடத்துக்குச் செல்லுங்கள்' என்று பதற்றமாய்ப் பேசினன். கம்பர், "அரசர் தலைவரே! தாங்கள் கவுரவித்ததை நினைந்து, நான் தமிழைக் கற்க வில்லை; என்னை ஏற்றுக் கொள்ளும் அரசர் உலகத்தில் இராமற் போகவும் இல்லை; நான் தங்கள் போன்ற ஒருவரை அடைப்பைக் காரனுய்க் கொண்டு இங்குத் திரும்பி வருகிறேன் பாருங்கள்!'' என்று சொல்லி, வெளியில் சென்று விட்டார்.

அப்புறம், கம்பர் வழியில் பலவிதமான வருத்தங்களை நுகர்ந்து, சேர வரசனுக்கு அடைப்பைக் காரனுக அமர்ந்தார். அவ்வரசன் சபையில் சிலர் கம்பர் செய்த ராமாயணத்தைப் பிரசங்கித்து வந்தார்கள். அவர்கள் சொல்லும் பொருள்

அடைப்பைக்காரனுக்குச் சுவை தராமற் போயிற்று. அவன் முகத்தைச் சுளித்தும், தலையைக் கவிழ்ந்தும், தன் வெறுப்பை விளக்கிக் காட்டினன். அரசன் காரணம் கேட்டதற்கு "வேந்தர் பெருமானே! இந்தப் புலவர்கள் கம்பர் பாட்டுக்குச் சரியான முறையில் பொருள் சொல்ல வில்லை; இவர்கள் பொருள் கம்பர் கருத்துக்கு முரண் படுகின்றது" என்று கூறினன். மன்னவன் "அடக்க மற்றவனே! நீ புலவர் பெருமக்களை அவமதிக்கின்றனை; நீ அவர்களைக் காட்டிலும் புலமை பெற்றிருந்தால், தவறிப்போன விடங்களை எடுத்து விளக்கப் பார்" என்றான். உடனே அடைப்பைக்காரன் 'தவறின விடங்கள் இவை இவை' என்றும், 'பிரசங்கிக்கும் விதம் இப்படி இப்படி' என்றும், அனைவரும் ஆச்சரியப் படும்படி அற்புதமாய்க் கூறினன். அரசன் முதலானவர் வியப்பின் மிகுதியினல் மெய்ம் மறந்து போனார்கள். அன்று முதல் அடைப்பைக்காரனுக்குப் பிரசங்கிக்கும் பெருமை உரிமையாய்ப் போயிற்று. புகழையும் பொருளையும் ஒரு மிக்க விழுந்த புலவர்கள் அடைப்பைக்கார னிடத்தில் அழுக்காறு கொள்வதில் அப்புறம் ஆச்சரியம் இல்லை யல்லவா!

ஒருநாள் புதுப் புலவன் சபைக்கு வரும்பொழுது மயிர் வினைஞன் ஒருவன் அவனை இடைவெளியில் சந்தித்து "அண்ணா! அறியாப் பருவத்தில் குடும்பத்தைத் துறந்து தேசாந்தரம் சென்றது தம் போன்றாருக்குத் தருமமாகுமா? நான் அரசர் அரண்மனையில் அன்று முதல் இருந்து, வருந்தி வருகிறேன்; தாங்கள் மெள்ள மெள்ள அரசர் தயையை அடைந்து விட்டீர்கள்; இனித் தங்களாற்றான் நம் குலத்துக்குப் பெருமை வளரவேண்டும்; வாருங்கள் வீட்டுக்குப் போகலாம்" என்றான். புதுப் புலவன் 'தம்பீ! சொந்த வீட்டுக்குச் செல்ல எவர்தாம் சந்தோஷிக்க மாட்டார்கள்?' என்று சொல்லி, அம்பட்டனைத்

தொடர்ந்தான். அந்தப் புலவனுக்கு அம்பட்டன் வீட்டில் அதிக மரியாதை நடந்தது. புலவன் அதனை அங்கீகரித்துக் கொண்டு, 'தம்பி! இத்தனை நாட்களாக நீ அரண்மனையில் வேலை செய்து வந்தனை; இனிச் சிலநாள் அந்த வேலையை நான் பார்த்து வருகிறேன்; வா! அரசர் சமுகம சென்று அநுமதி பெற்று வரலாம்' என்று, அவனுடன் சபைக்குத் திரும்பினன். அப்புறம் புலவன், கொற்றவனைக் கும்பிட்டுத் தான் தொழில் செய்வதற்குச் சம்மதம் பெற்றுக்கொண்டு, "அண்ணலே! பிதிர்தனமாக எங்களுக்கு ஒரு ஜதைப் பொற் சிலம்பு உண்டு; கால வேறுபாட்டினல் அதன் ஒற்றையை நான் எடுத்துச் சென்று விட்டேன்; மற்ருென்று இவனிடம் இருந்து வருகின்றது; எங்கள் வீட்டுப் பெண்களுக்கு அவ்வுபர்ந்த சிலம்பு ஒருநாளும் பயன் படாது; தாங்கள் அவ்வொற்றையையும் தருவித்துக் கோப்பெருந் தேவிக்குக் காலணி யாக்குங்கள்" என்று சொல்லி, மிகவும் அழகிய இரத்தினச் சிலம்பு ஒன்றை இறைவன் முன்னர் வைத்தான்.

கண் ணொளியைக் கூசுவிக்கின்ற அந்தச் சிலம்பை அரசன் கண்டு வியந்து, அம்பட்டனை வினவினன். அம்பட்டன், அஞ்சி நடுங்கி, 'அண்ணலே! புலவர்களுக் கன்றி, எங்கள் குலத்துக்கு இவ்வுயரிய சிலம்பு எப்படிக் கிடைக்கும்?' என்று சொல்லிவிட்டான். பிற்பாடு, அரச பரிசாரகர் அம்பட்டனை வருத்தி 'உண்மையை உரை' என்று, உறுக்கிக் கேட்டார்கள். மயிர் வினைஞன் தண்டத்துக்குப் பயந்து, அவைக் களத்துப் புலவர்களின் தூண்டுதலைச் சொல்லி, தன்னை மன்னிக்கும்படி வேண்டினன். அரசன், அடாச் செயலில் தூண்டிய அறிஞர்களுக்கும், அவர்கள் பொருளுக்கு அடிமையான அம்பட்டனுக்கும் தண்டனை விதித்துப் புதுப் புலவனைக் கம்பர் என்று தெரிந்து, அன்புடன் ஆதரித்து வந்தான்.

அப்புறம், குலோத்துங்க மன்னவன், தான் கம்பருக்குச் செய்த குற்றத்துக்கு வருந்தி, ஒற்றர்களினால் அவர் இருக்கையை அறிந்து 'தன் பிழையைப் பொறுத்துப் பட்டணம் திரும்பவேண்டும்' என்று, அவரிடத்துக்கு அமைச்சர்களை அனுப்பினான். கம்பர், சேர மன்னவன் தந்த பரிசிற் பொருள்களோடு உறையூருக்குத் திரும்பி, அந்தச் சேர மன்னவன் ஒருநாள் தமக்கு அடைப்பைக்காரனாகி, வெற்றிலை மடித்துத் தரச் சிறப்புப் பெற்று விளங்கினார். ஆதலால், படித்தவர்களுக்கு எல்லா நாடும் சொந்த நாடே யாகும். அவர்கள் எல்லா விடங்களிலும் சிறப்புப் பெற்று விளங்குவார்கள்.

—விநோதரச மஞ்சரி.

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

## 41—கல்லாமை :—சங்கத்தார்

கல்லாமை யென்பது கற்றலைச் செய்யாமை. கல்லாமை—மை விகுதி பெற்ற எதிர்மறைத் தொழிற் பெயர். விலங்கு பறவை முதலான உயிர் வர்க்கங்களைக் காட்டிலும், அறிவினாலேயே மனிதப் பிறப்பு மாண்பு பெறுகின்றது. அவ்வறிவைப் பெற்றுக்கொள்ளாதவன் விலங்கு முதலியவற்றிலும் இழிந்தவனாகிறான். படியாதவனுக்குப் பகுத்தறிவு இருப்பதில்லை. கற்றலைச் செய்யாதவன் புலவர் சபையில் பேச விரும்புவது, பிறவிக் குருடன் பெரிய ரத்தினத்தைப் பரிக்ஷித்து மதிப்பது போலாகும். அவன் ஆடை அணிகளினால் தன்னை அலங்கரித்துக் கொண்டாலும், அவை பிரதிமை அலங்காரத்திலும் பெருமை கெட்டிருக்கும். களர் நிலம் உயிர்களுக்கு உணவு முதலானவற்றை உதவாதது போலக் கல்லாதவன் மதிப் பழிந்து, தனக்கே யன்றிப் பிறர்க்கும்

பயன்படாமற் போகின்றன். அவன் பெருமை, கற்றவர் முன்னார்க் குற்றமாய் விளங்கும். கல்லாதவன் பெற்ற செல்வமும், கற்றவர் வறுமையைக் காட்டிலும், சிறுமை பெற்றிருக்கும். எப்படி யென்றால், கற்றவர் வறுமை அவர்களைக் கெடாமல், ஒழுக்கத்தில் நிறுத்திக் காத்து வருகின்றது. கல்லாதவர் திருவோ அவர்களைப் பாவச் செயலிற் றூண்டி, இம்மையில் அரச தண்டத்துக்கும், மறுமையில் தீய நரகத்துக்கும் உரிமை யாக்குகின்றது. நெற்பதரும் ஆட்டதரும் போன்ற கல்லாக் கசடர்களை ஒரு உயர்ந்த குலம் உடைத்தா யிருப்பதைக் காட்டிலும், அந்தக் குலம் சந்ததி யில்லாமல் சுருங்கிக் குறைவதுவே சாலவும் சிறந்த தாகும்.

கல்லாதவ ரிடத்தில் ஒரோவழிக் காண்கின்ற லௌகிக ஞானமகூட, நீர்மே லெழுத்துப் போல நிலை பெறாமலும், ஒருகால் நிலைபெற்ற விடத்திலும் பேய்த்தேர் போலப் பொய்த் தோற்றம் தந்து, பயன் படாமலும் போகும். மக்கள் பிறப்பை மடியப் பண்ணுவது கல்லாமை என்னும் கொடுங் குற்றமே யாகும். அந்தக் குற்ற முள்ளவர்கள் கற்றவர் சபைக்குச் செல்லாமலும், ஒருகால் செல்ல நேரும்பொழுது அவர்கள் முன்னர் வாய் திறவாமலும் இருக்கப் பழக்கிக் கொள்ளவேண்டும்.

முன்னர்த் திருவள்ளுவர் என்ற தெய்வப் புலவர் திருமயிலையில் நெசவு தொழில் செய்து ஜீவனம் பண்ணி வந்தார். அவர் தம் பெயரை நிறுத்தக் கருதியும், நண்பர்களின் தூண்டுதலைத் தழுவியும், ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களினால் இந்தப் பரந்த வுலகத்துக்கு என்றும் பயன் படக்கூடிய நீதி நூல் ஒன்றை இயற்றியருளினார். அந்தக் காலத்தில் மதுரைப் பட்டணத்தில் கடைச் சங்கப் புலவர் இருந்து, தமிழ்ப் பயிரை வளர்த்துப் பெருமை பெற்றிருந்தார்கள். வள்ளுவர் தம் நூலை அவர்க

-ளிடம் சென்று அரங்கேற்ற விரும்பினர். பழைய காலத்தில் பிரயாணம் செய்வதற்குப் பாதைகளும், ஊர்தி முதலான துணைக் கருவிகளும், இந்தக் காலம் போல எளிதில் அமைந் திருக்க வில்லை. அவர் நெறியின் அருமையைப் பொருள் பண்ணுமல் நடந்து, மெள்ள மெள்ள மதுரையை அடைந்து, புலவர்களைக் கண்டு, தம் நூலையும், அதனைக் கொணர்ந்த காரணத்தையும் விண்ணப்பித்துக் கொண்டார்.

குலத்திலும் கல்வியிலும் கருவித்திருந்த புலவர்கள் அவர் குலச் சிறுமையை இகழ்ந்து, அநாதரவு செய்தார்கள். வள்ளுவர் அதனை மனத்திற் கொள்ளாமல், மிகவும் அமரிக்கை யோடு "புலவர் பெருமக்களே! தங்கள் தொழில் தமிழ் ஆராய்ச்சியே யன்றிக், குல வாராய்ச்சியும் மத வாராய்ச்சியும் அன்று; நான் தங்களிடத்தில் என் குலத்தை ஆராய்ச்சி செய்யக் கூறிக்கொள்ள வில்லை; எனது நூலுக்குத் தங்கள் அபிப்பிராயத்தை அறிய வந்திருக்கிறேன்; கடவுள் அருளிய தெய்வப் பலகை தங்களுக்குத் துணை புரிகின்றது; தாங்கள் பலகையில் அமர்ந்த பிறபாடு, எனது எட்டுச் சுவடியையும் அதில் இடப் பண்ணுங்கள்; பொற்பலகை அங்கீகரிக்கு மாகுல், பின்னர் ஆராய்ச்சி செய்து, அபிப்பிராயம் தாருங்கள்; அஃது அங்கீகரியா விட்டால், என் நூல் குற்றம் உள்ள தென்று, நானே தெரிந்துகொண்டு சென்று விடுகிறேன்" என்றுசொன்னர்.

புலவர்கள் அதனை அங்கீகரித்துப் பலகையில் அமர்ந்தார் கள். அப்புறம், வள்ளுவர் நூல் அதன்கண் வைக்கப்பட்டது. உடனே தெய்வப் பலகை, சிறிய அளவினதாய்ச் சுருங்கித், திருக்குறளை மாத்திரம் தூக்கிக்கொண்டு மிதந்து நின்றது. புலவர்கள் பொற்றாமரைப் பொய்கையில் அமிழ்ந்தி, அவ மானத்தோடு அரிதில் கரை யேறினர்கள். பின்னர் அவர் கள் புத்தாடை உடுத்தி வந்து, அந்தப் புத்தகத்தை ஆராய்ச்சி

செய்ய லானார்கள். அவ்வாராய்ச்சியில் அவர்கள் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவு கிடையாது. அவர்கள் அனைவரும் "அந்நூல் தூய்மை பெற்ற தெய்வ வாக்கு; குறள் வெண் பாவில் அத்தனை ஆழ்ந்த கருத்துக்களை அமைத்துப் பாட வேறு எவருக்கும் திறமை அமையாது; திருக்குறள் எங்கள் செருக்கைக் குறைத்து விட்டது; வள்ளுவர் செய்த முப்பால், எங்களுக்கு நல்லறிவைக் கொளுத்தி, நாற்பாலையும் தந்தது; இனி நாங்கள் முன்னர்ப் போலத் தெய்வப் பலகையில் அமர்ந்து, தமி ழாராய்தல் தகாது" என்று, புகழ்ந்து கூறினார் கள். அப்புறம், அவர்கள் அனைவரும் வள்ளுவரை வாயாரப் புகழ்ந்து, தங்களை மன்னிக்கும்படியும் வேண்டிக கொண் டார்கள். அதற்குப் பிறபாடு, சங்கப் புலவர்களுக்கு அந்தத் தெய்வப் பலகை இருக்க இடம் தர வில்லை. திருவள்ளுவர் புகழ் பூசனை முதலானவற்றோடு திருமயிலைக்குத் திரும்பி வந்து சேர்ந்தார். சங்கப் புலவர் தந்தருளிய சாற்றுக் கவிகளைத் தாம் 'திருவள்ளுவ மாலை' என்பார்கள். ஆதலால், ஒருவன் குலத்தில் இழிந்தவனா யிருந்தாலும், கல்வி மாத்திரம் இருந் தால், உலகத்தில் பெருமை யடையலாம்.

—புலவர் புராணம்.

> மேற்பிறந்தா ராயினும் கல்லாதார், கீழ்ப்பிறந்தும்
> கற்றா ரனைத்திலர் பாடு.

## 42—கேள்வி :—பரிக்ஷித்து

கேள்வி யென்பது கற்றறிந்த பெரியவர்க ளிடத்தில் கேட்கப்படும் நூற் பொருள்களை அவர்கள் கூறக் கேட்ட லாகும். கேள்வி—வி விகுதி பெற்ற தொழிற் பெயர். தளர்ச்சி, வறுமை, அறிவின்மை என்ற மூன்று காரணங் களாலும், ஒருவன் கற்க வேண்டிய உறுதி நூல்களைக் கல்லா

மற்போனாலும், ஒழுக்கத்தை யுடைய உயர்ந்தவர்களிடத்தில் கேட்டலை யாவது செய்யவேண்டும். நூற் கேள்விகளால் தொளைக்கப்படாத செவி, கேவலம் ஒலியை மாத்திரம் உணர்கின்ற இயற்கைத் தொளைகளினால் இம்மியும் பயன் பெறாது. ஏனென்றால், ஒலியானது, கேள்வியைப் போல மனத் தோட்டத்தில் பதிந்து, காலமும் இடமும் கைகூடின பொழுது கிளைத் தெழுந்து பலன் தருவ தில்லை. இன்னும் செவித் தொளை விலங்குகளுக்கும்கூட இருந்து வருகின்றது.

ஒருவன் ஒரு நாளில் நிமிஷ நேரத்தையாவது உறுதிப் பொருளைக் கேட்டலில் செலவு செய்ய வேண்டும். அந்தக் கேள்வி, மிகவும் சிறியதா யிருந்தாலும், வழுக்குதலை யுடைய சேற்று நிலத்திற் செல்கின்றவனை ஊன்றுகோல் விழாத வண்ணம் நிறுத்துகின்றது போல, லௌகிகம் வைதிகம் என்ற இரு வழிகளிலும் சென்று, மனம் தளர்ச்சி யடைந்த காலத்தில் திடீரென்று தோன்றித் துணை புரிந்து நிற்கும். உடலுக்கு உறுதி செய்கின்ற உணவைப்போ லல்லாமல், இம்மை மறுமை என்ற இரண் டிடத்துக்கும் உறுதி செய்கின்ற கேள்வியை உயர்ந்தவர் செவி யுண வென்று சாற்றுகின்றார்கள். செவி யுணவின் சுவையை நுகர்ந்து கொண்டிருக்கும் பொழுது, வயிற்றுப் பசி வந்து வருத்த மாட்டாது. அக்கேள்வி குறைந்த பொழுதுதான் பசி வாதனை செய்யத் தொடங்கும். மனத்தைத் தூய்மை செய்யும் தொழில் செவிப் புலன் ஒன்றுக்குத்தான் சாலவும் பொருந்தி யிருக்கின்றது. பல கலைகளையும் கற்றுப் பண்டிதராகும் பாக்கியத்தைப் பலரும் பெற்றுக் கொள்ள முடியாது. ஆனால், அந்தப் பண்டிதர் சொல்கின்றவற்றைக் கேட்டுப் பயன் பெறுவதை மாத்திரம் பலரும் பெற்றுக் கொள்ளலாம். கலைகளைக் கற்றலினாலேயே ஒருவனுக்குக் கல்வி நிறைந்து விடுவ தில்லை.

அரைப்பாகம்தான் மனத்தில் அமைகின்றது. ஒழிந்த அரைப் பாகத்தையும் கேள்வியினுற்ருன் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும். நாய் பசு முதலான வீட்டு விலங்குகளும், கிளி நாகணவாய் முதலான வீட்டுப் பறவைகளும், வீட்டார் பேச்சைக் கேட்டு, அவர் சொல்வனவற்றைத் தெரிந்து, தொழில் செய்கின்றன வென்ருல், உயர் பிறப்பினை யுடைய மனிதன் நூற் கேள்விகளால் பயன் பெற மாட்டானு? இதன் அருமையைத் தெரிந்துதான் ஔவையும் 'கேள்வி முயல்' என்ருர்.

ஆதி நாளில், அபிமன்யுவின் புததிரனுன பரிக்ஷித்து மன்னவன் ஒரு சமயத்தில் வேட்டைக்குச் சென்றிருந்தான். அவன் காட்டில் நெடு நேரம் வரையில் எதிர்ப்பட்ட விலங்குகளைக் கொன்று, திரும்பும் தருணத்தில் புள்ளிமான் ஒன்று அவன் கண்ணெதிரில் துள்ளிக் குதித்துச் சென்றது. அதன் கரிய விழியும், சிறிய வாயும், நெறித்த செவியும், நீண்ட கழுத்தும், பொன் போன்ற வுடம்பும், உடுக்கள் போன்ற புள்ளிகளும், சிறுத்து வளர்ந்த தாள்களும், நீலமணியை நிகர்த்த குளம்புகளும் அரசனுக்கு ஆச்சரியத்தை அளித்தன. அந்த மிருகம் தன் குளம்புகளினுல் புழுதியைக் கிளப்பி, மேகத்தில் மறையும் மின்னற் கொடிபோலப் புதர்களின் நடுவில் புகுந்து போய்விட்டது. அரசன் அவ்விலங்கின் அடிச் சுவடுகளை ஆராய்ந்து கொண்டு சென்று, அருமறை முனிவர் ஒருவரைக் கண்டான். அவர் கண்களை விழித்துக்கொண்டு யோகத்தில் ஊன்றி யிருந்தார். மன்னவன் அவரை வணங்கி "முனி நாதா! நான் அத்தின புரத் தரசன்; என்னைப் பரிக்ஷித்து என்று பகர்வார்கள்; புள்ளிமான் ஒன்று இத்தனை தொலைவு வரையில் என்னை இழுத்து வந்து விட்டது; தெரிந்திருந்தால், அது சென்ற வழியை எனக்குத் தெரிவியுங்கள்" என்ருன். முனிவர் நிஷ்டையில் இருந்தபடியினுல், மன்னவனுக்கு

விடை கிடைக்க வில்லை. அரசன் 'அம் முனிவர் தன்னை அலக்ஷ யம் செய்கிறார்' என்று, மனம் வருந்தித் திரும்பினான். வழி யில் பெரும் பாம்பு ஒன்று இறந்து கிடந்தது. பரிக்ஷித்து மன்னவன் காலத்தின் தூண்டுதலினால் அந்தப் பாம்பை அம் பால் குத்திக் கொணர்ந்து, முனிவர் கழுத்தில் மாலை போலப் போட்டு மகிழ்ந்து போய்விட்டான்.

இரண்டு நாட்கள் வரையில் முனிவர் நிஷ்டை கலைய வில்லை. பாம்பும் கழுத்தில் போட்ட வண்ணமே கிடந்தது. மூன்றாம் நாள் முனிவர் குமாரன் தந்தையைக் காண வந்தான். அவன் கழுத்திற் கிடந்த பாம்பைக் கண்டு பயந்து, வேறு முனி குமாரர்களினால் அது சக்ரவர்த்தியின் செய லென்று தெரிந்து, கோபத்தினால் துடித்து 'இக் கொடுந் தொழில் செய்த கொற்றவன் இன்றைக்கு ஏழாவது நாளில், தக்ஷகன் என்ற தெய்வப் பாம்பினால் கடியுண்டு மரண மடையட்டும்' என்று சபித்தான். முனி குமாரரிற் சிலர் சாபத்தின் கடுமை யைச் சக்ரவர்த்திக்குச் சொன்னார்கள். மிகவும் அற்பம் என்று கருதிச் செய்த விளையாட்டுச் செயல், அவ்வரசனுக்கு மாற்றிக்கொள்ள முடியாத மரணத்தைக் கொண்டு தந்தது.

அவ்வுண்மை மன்னவன் பிறபாடு, அதன் பொருட்டு அங்கலாய்க்க வில்லை. நிமிஷத்தை வீணாக்கவும் இல்லை. தன் புத்திரன் ஜனமேஜயன் என்பவனைச் சிங்காதனத்தில் இருத்திச் சுக முனிவரைச் சரணம் அடைந்து, அவரிடத்தில் திரு மாலின் திருவிளையாடல்களைத் தெரிவிப்பதாகிய ஸ்ரீ பாகவதத் தைக் கேட்டு வரத் தொடங்கினான். அதனால், அந்தக் கொற் றவனுக்கு மகா யோகிகளுக்கும் கிடைத்தற் கரிய கடவுள் உலகம் உரிமையாயிற்று. சுக முனிவரிடத்தில் ஸ்ரீ பாக வதத்தைக் கேளாதிருந்தால், அவ்வரசன் அந்த வுயர்ந்த பதத்தை அடைய முடியா தல்லவா! ஆதலால், ஒழுக்கத்தில் உயர்ந்த பெரியவர்களின் உபதேசம் ஒருவனுக்கு என்றும் உறுதியை உண்டு பண்ணும். —பாகவதம்.

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

## 43—அறிவுடைமை :—அர்ச்சுனன்

அறிவுடைமை என்பதற்கு உண்மை யறிவை உடையவ னாதல் என்று பொருள். ஒருவனுக்குக் கல்வியினாலும், கேள்வியினாலும் உண்டாகின்ற அறிவோடு உண்மை யறிவும் உடைமை யாகவேண்டும். பெரியவர், நூல்களாலும், நூற் கேள்விகளாலும உண்டாகும் அறிவைச் செயற்கை அறிவென்றும், உண்மை யறிவை இயற்கை அறிவென்றும் இயம்புவர். செயற்கை அறிவை நிச்சயம் செய்வதற்கு இயற்கை யறிவு துணை செய்கின்றபடியினால் ஒருவனுக்கு அறிவுடைமை சாலச் சிறந்தது. இன்னமும், அவ்வறிவு பகைவர்களாலும் பிளந்து தள்ள முடியாத பேரரண் போன்றது. மனத்தைத் தீய வொழுக்கத்தில் திரிய விடாமல் திருப்பி, நல்லொழுக்கத்தில் நிலைக்கப் பண்ணுவதற்கு, யானையைத் திருப்பும் அங்குசம்போலப் பேரறிவு பயன் படுகின்றது.

இராஜஸம், தாமஸம், சாத்துவிகம் என்ற மூன்று குணங்களும் மனிதர்க்கு மாறி மாறி வந்து கொண்டே யிருக்கும். அதனாற்றான் சில சமயங்களில் உயர்ந்த பொருள் இழிந்தவர் வாயிலும், இழிந்த பொருள் உயர்ந்தவர் வாயிலும், உறுதிப் பொருள் பகைஞர் வாயிலும், கெடு பொருள் நட்பினர் வாயிலும் வெளி யாகின்றன. ஒருவன் தான் கேட்கத் தொடங்குகின்ற பொருள்களின் குண தோஷங்களைச் சீர்தூக்கி, அந்தப் பொருள்களின் மெய்யான பயனைத் தெரிந்து தெளியவேண்டும். அங்ஙனம் அறியும் ஆற்றலுக்குத்தான் உண்மை யறிவு என்று பெயர். சொல்லும் விஷயம் கடினமாயிருந்தாலும், கேட்பவர்க்கு விளங்கச் சொல்லுதலும், கேட்கும் சொற்கள் எவர்க்கும் பொருள் காண அரியதா யிருந்தாலும், அவற்றின் பொருளை எளிதில் உணர்ந்துகொள்ளுதலும், உண்மை யறிவின் இலக்கணம். இன்னும் அவ்வறிவு,

பழி, பாவம், கேடு முதலானவை காரணமாக அஞ்சப்படுவன வற்றிற்கு அஞ்சியும், உலகத்தில் வேறுபடாமல் ஒத்து விளங்கியும் வரும்.

உண்மை யறிவினர் தமது அறிவின் முதிர்ச்சியினால் வரத் தக்கனவற்றை முன்னரே எண்ணி யறிந்தும், கேட்டின் காரணங்களை எண்ணி விலக்கியும், உலகம் கலங்கினும் உள் ளம் கலங்காமல் நிற்பார்கள். அவருக்கு உலகப் பொருள் களில் ஒன்றும் இல்லாதிருந்தாலும், எல்லாம் இருப்பன போலவே யாகும். அஃது இல்லாதவர் தமக்கு எல்லாம் எளி தில் கிடைக்கப் பெற்றிருந்தாலும், அறிவில்லாத காரணத்தி னால் ஒன்றும் இல்லாதவரே யாவர். அறிவுடையவரை நடுங் கச் செய்கின்ற துன்பநோய் உலகத்தில் ஒன்றும் இல்லை. அறிவுடைமை ஒன்றுதான் உடைமை என்று பெயர் பெறும். ஒழிந்த வுடைமைகள் அறிவுடைமையினால் படைக்கவும் காக்கவும் அழிக்கவும் படுகின்றன.

முன்னர்ப் பாண்டவர் மச்ச நாட்டு மன்னவனான விராடன் வீட்டில், மறைந்து கழிக்கும் காலத்தைக் கழித்த பிற்பாடு, உபப்பிலாவியம் என்ற பட்டணத்தில் இருந்து அரவ கேதனன் அபிப்பிராயம் காண ஆவல் கொண்டார்கள். அவன் முன்னைய உடன்படிக்கையின்படி அவர்கள் உரிமைகளை உதவ உடன் படவில்லை. சமர் செய்வதன் பொருட்டுச் சேனை களைச் சேர்க்கத் தொடங்கி விட்டான். பாண்டவர் அதனை அறிந்து, தாங்களும் படைகளைத் திரட்ட லானார்கள். அரசர் களிற் பலர் அரவ கேதனனுக்கும், சிலர் பாண்டவர்க்குமாகத் துணை சேர்ந்தார்கள். அப்போது வீடுமர், துரியோதனனை விளித்து "அடக்க மற்றவனே! எங்கள் பேச்சுக்களைப் புறக் கணித்துப் பாண்டவர்களைப் பகைத்துக் கொண்டனை; வெற்றி ஊழ் வினையின் வச மானாலும் முயற்சியில் சோம்ப லாகாது; நீ துவாரைப் பதி சென்று, கண்ணனைத் துணை

விரும்பிக் கொள்; அவரைப் பெற்றவர் வெற்றி பெறு திரார்" என்று சொன்னர். பாம்புக் கொடியோன் பதுமைக் கேள் வனைக் காணப் புறப்பட்டுப் போனுன்.

அதே சமயத்தில் அர்ச்சுனனும் கண்ணனைத் துணை விரும்பிச் சென்றுன். கண்ணன் 'அவர்கள் வந்தால், அறிவியாமலேயே அனுப்பிவிடுங்கள்' என்று காவலருக்குக் கூறித், தாம் ஒரு பள்ளியிற் படுத்துப் பொய்த் துயில் பூண்ட னர். முதலில் துரியோதனன் துவாரகையைச் சேர்ந்தான். வாயிற் காவலர் அடியில் விழுந்து வணங்கித் "தாங்கள் தாராளமாய்ச் செல்லலாம்; தம் போன்றவருக்கு முன் னறிக்கை முக்கியமான தன்று" என்று முகமன் சொல்லி அனுப்பி விட்டார்கள். அம்மூடன் காவலர் முதல் தனக்குச் செய்யும் கவுரவத்துக்குக் களித்து, அந்தப்புரத்தில் நுழைந் தான். அங்குக் கண்ணனது அகால வுறக்கத்தையும், இடையில் எழுப்ப லாகா தென்ற அறத்தையும், ஒருகால் எழுப்பின், அச்செயல் வந்த வினைக்கு விபரீதம் செய்யு மென்ற சகுனத்தையும் சிந்தித்து 'இயற்கையில் எழட்டும்' என்று, அவர் தலைப்புறத்தில் இருந்த ஆசனம் ஒன்றில் அமர்ந்தான். அப்புறம், அர்ச்சுனன் அவ்வறையில் நுழைந்து, கண்ண னுடைய திருவடிகளை வருடினுன். பொய் யுறக்கத்தின் காரணமே பார்த்தன் வரவாதலால், கண்ணன் அவன் கரம் பட்டதும் கதுமென வெழுந்து 'அர்ச்சுன! எப்போது வந்தனை? செய்தியும் அனுப்பாமல் வந்த காரணம் என்ன? அனைவரும் சுகமா?' என்று கேட்டார். கிரீடி "அருட் கடலே! யுதிஷ்டிர சக்ரவர்த்தி அனுப்பினுர்; அவர் இனி நடக்க விருக்கும் சமரில், தங்கள் துணையை விரும்பி யிருக்கின்றனர்" என்றுன். கண்ணன் 'நான் சக்ரவர்த்திக்குச் சொந்த மானவன்; என்னைப் பயன் படுத்திக்கொள்ள அவ ருக்குப் பல விதத்திலும் பாத்தியம் உண்டு' என்று கூறினுர்.

பின்னர்ப் பார்த்தன் 'அண்ணு துரியோதனர் அமர்ந்திருப்பதனை அறியவில்லை போலும்?' என்று கேட்டான். கண்ணன், 'என்ன! துரியோதன மகாராஜாவா? எங்கேயிருக்கிறார்?' என்று திரும்பி "என்ன துரியோதனு? நீயாவது சொல்லி யனுப்ப லாகாதா? வருவாரை விளம்பவும் காவலர் மேவிணு ரில்லை; முழுச் சோம்பேறிகள்; என்னவோ நேற்றெல்லாம் வேலை; அலுப்பு அதிகமா யிருந்தது; சற்றுப் படுத்துவிட்டேன்; படுத்தால்தான் என்ன? எழுப்பினுல் போகின்றது; உனக்கு என்னை எழுப்ப உரிமை இல்லையா? எப்போது வந்தாய்? பட்டணத்தை விட்டு எத்தனை நாட்கள் ஆயின? பாட்டனுர் தந்தை சகோதரர் முதலானவர் சவுக்கியமா? அந்தப்புரத்தில் அனைவரும் க்ஷேமமா?" என்று கேட்டார். அம்மூடன் அவ்வளவில் மகிழ்ந்து 'கிருஷ்ணு! நமக்குள் சொல்லி யனுப்புவானேன் என்று வந்தேன்; நாழிகை ஆகவும் இல்லை; நான் வேறுபாடாக நினைத்துக் கொள்ளவும் இல்லை; அனைவரும் வலியர்தாம்; தம் துணையைச் சமருக்குத் விரும்பி வந்தேன்' என்று சொன்னுன்.

கண்ணன் "ஆ! என்ன வாச்சரியம் பார்! உன் கண் முன்தானே 'யுதிஷ்டிரர் துணை விரும்பி யிருக்கிறார்' என்று அர்ச்சுனன் கூறினுன்; நானும் ஒப்புக்கொண்டு விட்டேனே; வந்ததும் தெரிவித்திருந்தால், உனக்கு 'வரமாட்டேன்' என் பேணு? எனக்கு இருவரும் ஒன்றுதான்; இரண்டொரு நாளைக்கு முன்னர், அண்ணு பலராமர்கூட இதனைக் கேட்டார்; நான் 'அவர்களுக்குள் வருத்த மிருந்தால், நமக்கு என்ன வந்தது? நமக்கு இருவரும் ஒன்றுதான்; முதலில் விரும்புகின்றவருக்கு உதவி செய்யலாம்' என்றேன்; நீ இங்கு வந்து ஒன்றும் பெருமற் போவதுவும் ஒழுங்கா யிருக்க வில்லை; ஒன்று சொல்கிறேன் கேள்; சக்ரவர்த்தி 'தம்மைச் சமருக்குத் துணை விரும்புகிறார்' என்றுதான் அர்ச்சுனன் அறைந்தான்.

அவன் மொழிப்படி நான் மாத்திரம் துணை செய்யச் செல்கிறேன்; என்னை ஒழிந்த யாதவ வீரர்களையெல்லாம் நீ உதவிக்கு அழைத்துக்கொண்டு போ! நான் ஒருவன் வந்து செய்யும் உதவியைக் காட்டிலும் அவர்கள் செய்யும் உதவி உனக்கு அதிகமாகவே யிருக்கும்" என்று கூறினார்.

அரவ கேதனன் அகம் களித்துக் 'கிருஷ்ணா! தம் நடுவு நிலைமை நியாய மானது; அங்ஙனமே அழைத்துச் செல்கிறேன்; தாம் அமர் முகத்தில் ஆயுதம் ஏந்த லாகாது; இவ் விருப்பம் மாத்திரம் நிறைவேற்றப் படட்டும்' என்று சொன்னான். கண்ணன் புன்சிரிப்போடு 'அர்ச்சுனா! நான் இப்போது தரும சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு விட்டேன்; அமரில் ஆயுதம் எடாமல் நான் சக்ரவர்த்திக்குச் செய்யும் காரியம் என்ன விருக்கின்றது?' என்று கேட்டார். அர்ச்சுனன் 'என் அரிய நண்பரே! அப்படி நினைக்க வேண்டாம்; தாம் ஆயுதம் எடுத்துச் செய்யும் உதவியைக் காட்டிலும், ஆயுதம் எடாமற் செய்யும் உதவியே அதிகமானது; என் தேர்க்குத் தாங்கள் சாரதியாகி நின்றால், பகைஞரை வென்று இவ்வுலகத்தை யுதிஷ்டிரருக்கு உரிமை யாக்கிவிடுவேன்' என்று எழுந்து கூறினன். கண்ணன் 'உன் விருப்பமும் நிறைவேறட்டும்; இருவர் வரங்களும் அளிக்கப்பட்டன; துரியோதனா! நீ படைவீரர்களைப் பெற்றுக் கொண்டுபோ!' என்று சொல்லி யனுப்பி விட்டார்.

அரவ கேதனன் அத்தினபுரம் அடைந்து, வீடுமரை வணங்கி நடந்தவற்றை நவின்றான். அவர் "புத்தி யற்றவனே! உனக்கு நீயே கேட்டைக் கூப்பிட்டுக் கொண்டனை; அஃது உன் ஊழ்வினையும் அறியாமையு மாகும்; தனஞ்சயனுக்குக் கண்ணன் சாரதியாய்ச் சார்ந்தால், விண்ணவர்க் கிறைவனாலும் அவனை வெல்ல வியலாது; அதன் உண்மையைச் சமரில் தெரிகுவை" என்று சலிப்புற்றுக் கூறினார். பிற்பாடு, பாரதப்

போரில் அர்ச்சுனன் அவ்வண்ணமே அனைவரையும் வென்று, தரும புத்திரருக்குத் தரணியை உரிமையாக்கினான். ஆதலால், அறிவுடைமையையும், அஃதில்லாமையையும், அநுமகேதனன் அரவகேதனன் என்ற இருவரிடத்திலும் எளிதில் தெரிந்து கொள்ளலாம்.

—மகாபாரதம்.

> அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார்
> அஃதறி கல்லா தவர்.

## 44—குற்றம் கடிதல் :—பொற்கைப் பாண்டியன்

குற்றம் கடிதல் என்பது தன்னிடத்தில் உள்ளதாகிய குற்றங்களை அறிந்து, அவற்றை நீக்குதலாகும். குற்றம என்பதற்கு ஒருவன் புகழைச் சிறுமை செய்வதென்பது பொருள். இஃது அம் விகுதி பெற்ற பண்புப் பெயர். மனம் அறியாமையினால் புலன்களைத் துணைகொண்டு, தீ நெறியைத் தொடர்ந்து செய்யும் தொழில்களைக் குற்றம் என்று கூறுவர். தொழிலின் வேறுபாடு நோக்கி, அந்தக்குற்றத்தைக் காமம், வெகுளி, கடும்பற் றுள்ளம், மானம், உவகை, மதம் என்று அறுவகைப் படுத்துவார்கள். இவற்றில் காமம் என்பது சிற்றின்பத்தில் அளவு கடந்த பற்று. வெகுளி—பெருங் கோபம். கடும்பற்று—உலோபத் தன்மை. அஃதாவது, பொருள்களின்மேல் பிறக்கின்ற பேராசை. அஃது அவசியமாய்ச் செலவு செய்ய வேண்டிய விடத்திலும் அங்ஙனம் செய்ய வொட்டாமல் தடுக்கும். மானம் என்பது குலம், கல்வி, ஆண்மை, அதிகாரம் முதலானவை காரணமாக எழுகின்ற பெருமை. தாய் தந்தை சான்றோர் முதலான வணங்கத் தக்கவர்களையும் வணங்கச் செய்யாமல் கெடுத்து விடுவதனால், மானம் குற்ற மாகின்றது. உவகை என்பது கழி கண்ணோட்

டம். அது, பழகினவர்களைக் கண்டால், அவர்கள் சொல்லிய வற்றை மறுக்க மாட்டாத தன்மை. நீதி நடத்துவதை நசிக்கப்பண்ணுகின்றபடியினால் உவகையும் குற்றமாகின்றது. மதம்—செல்வச் செருக்கு. தம்மை உடையவனுக்குப் பாவம், பழி, கேடு முதலானவற்றை விளைப்பதனால், புகழ் பெற விரும்புகின்றவன் இந்த ஆறு குற்றங்களையும் அகற்றிக் கொள்ள வேண்டும். ஆனால், உலகத்தில் துறவிகளுக் கல்லாமல் முறைசெய்கின்ற மன்னவர்களுக்கும், இல்வாழ்க்கையில் இருந்து இன்பம் துய்ப்பவர்களுக்கும், காமம்,வெகுளி,உவகை என்ற மூன்றும் முற்றக் கடியும் குற்றங்கள் ஆகா. அவர்கள் உலகத்தையும் குடும்பத்தையும் ஆளுகை செய்வது போலவே அந்த மூன்றையுங்கூட அறத்தின் எல்லையைக் கடக்க வொட்டாமல், அடக்கி ஆண்டு வரவேண்டும்.

இந்தக் குற்றங்களை அறிந்து காவாதவன் வாழ்க்கை, பற்றி யெரிகின்ற பெரு நெருப்பின் முகத்தில் உள்ள வைக்கோற் போர்போல விரைவில் அழிந்து போகும். பாவம் பழிகளை அஞ்சுகின்றவன் தன்னிடத்தில் தினையளவு குற்றம் இருப்ப தாய்க் கண்டாலும், அந்தக் குற்றத்தைப் பனையின் அளவாக மதித்துப் பரிகரித்தலைச் செய்வான். பிறர் குற்றம் கடிந்து முறைசெய்கின்ற மன்னவன் தன்னிடத்தில் அந்தக் குற்றங் களைத் தங்கவிட லாகாது. இந்த அறுவகைக் குற்றங்களையும் களைந்து புகழ் பெற்றாலுங்கூட, அந்தப் பெரும் புகழ் காரண மாகத் தான் பல வழியிலும் சிறந்திருப்பதாய் மதித்துத், தன் னைத் தானே மதித்துக் கொள்ளாமலும், 'எதுவரினும், எது போகினும், கருதிய வொன்றைக் கடைபோக முடித்தே தீர வேண்டும்' என்ற பிடிவாதத்தைக் கொள்ளாமலும், இருந்து வரவேண்டும்.

முன்னொரு காலத்தில், மதுரைப் பட்டணத்தைப் பாண் டிய வரசன் ஒருவன் பரிபாலித்து வந்தான். அவன் சில

சமயங்களில் குடிகளின் உண்மை நிலையைக் காணப் பொய் யுருப் புனைந்து பட்டணம் சுற்றித் திரிவான். ஒருநாள் இரவு அந்த மன்னவன் பார்ப்பனத் தெருவி லுள்ள ஓரில்லத்தில் பேச்சரவம் கேட்டு நின்றான். அவ்வொலி "'நானும் வரு கிறேன்; என்னையும் அழைத்துச் செல்லுங்கள்' என்றால், 'வழியில் வருத்தம் பலவுள; மதுரை முதல் வாரணாஸி வரையிலும் வழிகளின் இருபுறங்களிலும் நிழல் தரும் மரங் களை வளர்த்துக், கற்பொடி பரப்பிச் செப்பனிட் டிரார்கள். கடுங் காடுகளையும், கான் யாறுகளையுமே பெரும்பாலும் கடந்து போகவேண்டும்; உணவும் சில விடங்களில் கிடைக்கும்; சில விடங்களில் கிடைக்காது; வெயிலில் வருந்தியும், பனிரில் நடுங்கியும், மழையில் நனைந்தும், வருந்திச் செல்ல வேண்டும்; நீ இளம் பிராயத்தினை; என்னைத் தொடர முடியாது; நான் மாத்திரம் சென்று திரும்பி வந்து விடுகிறேன்' என்று சொல்கிறீர்கள்; அறியாதவளும், தங்களை யன்றித் துணையும் திறனும் அற்றவளுமான என்னை, இந்தப் பெரும் பட்டணத் தில் கவனிப்பாரும் காப்பாற்றுவாரும் யாவர்? வீட்டைவிட்டு வெளிப்பட் டறியாத நான் அவ்விரண்டுக்கும் இங்கு இருந்து கொண்டு என்ன செய்து வருந்துவேன்" என்று கேட்டது.

மற்றொரு குரல் "நாயகி! நீ சொல்லிய வனைத்தும் உண்மை யானதுதான்; ஆனால், காப்பாற்றுகின்றவர் மாத் திரம் இராமற் போக வில்லை; நாட்டைக் காப்பாற்றுவதற் குப் பாண்டியன் நன்றா யிருக்கிறான்; நாம் அவனுடைய மது ரைப் பட்டணத்திலேயே இருந்து வருகிறோம்; அவன் ஆளு கையில் உன்னை வருத்துகின்றவர் இல்லை; பெண்களுக்கு மனக் காவலை யன்றி, வேறு காவல் விரும்பத் தக்க தன்று; நீ வீட்டில் நிர்ப்பயமா யிரு; அரசன் காவல் அனைத்தினும் சிறந்தது; நான் விடியற் காலையில் விடைபெற்றுச் செல் கிறேன்" என்று எழுந்தது. அப்புறம், ஒன்றும் எழ வில்லை.

பார்த்திபன் பின்னும் சில பக்கங்களைப் பார்த்துக்கொண்டு அரண்மனையை அடைந்தான்.

அவ்வரசன் மற்றை நாள்முதல் அந்த ஒரு வீட்டுக்கு மாத்திரம் அன்ன மளிக்க ஆசை யுள்ளவனு யிருந்தாலும், அங்ஙனம் அளிப்பது பார்ப்பனிக்குப் பழிப்பைத் தரும் என்று கருதி, அந்தத் தெருவில் உள்ள அந்தணர் அனைவருக்கும் ஒரு சீராக உணவை உதவி வந்தான். அங்ஙனம் இரண்டாண்டுகள் அகன்றன. பிற்பாடு, வாராணஸிக்குச் சென்ற வேதியன் வீடு வந்து சேர்ந்தான். பாண்டியன் வழக்கம் போலப் பொய்யுருப் புனைந்து போகையில், அவ் வீட்டில் பேச்சரவம் கேட்டது. அரசன் அத்தனை நாளும் இல்லாமல் அன்று மாத்திரம் எழுந்த அந்தப் புதுத்தொனியை, அந்நீதியில் நுழைந்த ஒரு அயலான் குரல் என்று கொண்டு, தெருக் கதவைத் தட்டினுன். உள்ளே யிருந்தவன் 'என் வீட்டுக் கதவை யார் தட்டுகின்றவர்?' என்று, அதிகாரம் விளங்கக் கேட்டான். கொற்றவன், குரலின் போக்கினுல் அவனைக காசிக்குச் சென்றவன் என்று தெளிந்து, தான் ஆராயாமற் செய்த குற்றத்துக்கு வருந்தி, அந்தணன் ஐயம் அகலுவதன் பொருட்டு, அவ் வீதியின் எல்லாக் கதவுகளையும் அப்படியே தட்டிக் கொண்டு அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

மற்றை நாள் அந்தத் தெருவின் அந்தணர் தங்கள் வீட்டுத் தெருக கதவுகள் நள்ளிரவில் தட்டப்பட்ட செய்தியைப் பாண்டியன் சபையில் புகன்றூர்கள். பாண்டியன் "முத்தீச் செல்வர்களே! அநாவசியமாக உங்களுக்கு அச்சத்தைக் கிளப்பின குற்றவாளி அகப்படுவா னுல், அவனுக்கு நீதி நூல் விதிக்கும் நியாய தண்டனை என்ன?" என்று கேட்டான். அந்தணர் 'கையைக் குறைப்பதுதான் குற்ற மற்ற நீதி' என்று கூறினுர்கள். அந்தத் தருமவரசன் உடனே வாளை உருவித் தன் கரத்தைக் குறைத்துக் கொண்டு, அங்கு உள்ள

வர்கள் ஆச்சரியம் அடையும்படி ஆதி முதல் நடந்த அதன் சம்பந்தமான சரித்திரங்களை விளக்கினான்.

அந்தணர் தம்மைக் காக்கும் பொருட்டுக் கொற்றவன் கரம் குறைந்து போனதற்குக் கலங்கி, அப்பொழுதே வேள்வி யொன்று செய்து, அதன் முன்னிலையில் அந்தப் பாண்டிய னுக்கு ஒரு பொற்கையை உண்டாக்கிப் பொருந்தப் பண்ணி னார்கள். அன்று முதல் அந்தப் பாண்டியன் 'பொற்கைப் பாண்டியன்' என்று பெயர் பெற்று விளங்கினான். ஆதலால், அறிவுள்ளவர் தங்கள் குற்றம் அற்பமா யிருந்தாலும் அதிக குற்றம் செய்தவர் போல நாணி, அதற்குப் பரிகாரம் செய்து கொள்வார்கள். —பழமொழி.

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழி நாணுவார்.

## 45—பெரியாரைத் துணைக்கோடல்:—சுக்ரீவன்

பெரியாரைத் துணைக் கோடலாவது காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்று, நாற்பத்து நான்காவது அதிகாரத்தில் கூறிய ஆறு குற்றங்களை யும் கடியும் முறைமையை அறிந்து கடிந்தவன், தன்னைத் தீ நெறியினின்றும் விலக்கி நன்னெறியிற் செலுத்தும் பெரியவர் களைத் துணை கொள்ளுதலாகும். அரசர்க்கும் பிறர்க்கும் தெய்வத்தாலும் மனிதராலும் துன்பம் வாராமல் காத்தலுக்கு உரியவர்களான அமைச்சர் புரோகிதர் என்பவர் பெரியவ ராவார்.

தெய்வத்தால் வரும் துன்பங்க ளாவன:—மழை யின்மை, மழை மிகுதி, காற்று, தீ, பிணி என்ற இவற்றால் உண்டாவன. மக்களால் வரும் துன்பங்க ளாவன :—பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில் செய்வார் என்ற இவர்களால்

உண்டாவன. தெய்வத்தால் வருகின்றவற்றைக் கடவுளரை யும் தக்கோரையும் நோக்கிச் செய்கின்ற சாந்தி, பூஜை முதலானவற்றாலும், மக்களால் வருகின்றவற்றைச் சாமம் பேதம் தானம் தண்டம் என்ற உபாயங்களாலும் அறிந்து நீக்கவேண்டும். தெய்வத்தால் வருவனவற்றை உற்பாதங்க ளால் உணர்ந்தறிவதும், மக்களால் வருவனவற்றை அவர் குணம் இங்கிதம் செயல் என்ற வேறுபாட்டால் உணர்ந்தறிவ தும் பெரியவர் இலக்கணம். இங்கிதம் என்பது மனிதரிடத் தில் குறிப்பில் நிகழும் உறுப்பின் தொழிலாகும்.

பெரியவர் என்பவர் அறிவு சீலம் காலம் என்ற மூன்றிலும் மூத்திருக்க வேண்டும். ஈங்கு அறிவென்பது உலகியல் அறிதலையும், தருமநூல் அறிதலையும் தெரிவிக்கும். சீலம் என்பது ஒழுக்கம். காலம் என்பது வயது. வயதில் மூவாதார்க்கு அநுபவம் மூவா வென்பது வெளிப்படை. அதனால், பெரியவ ராவதற்கு மூன்றும் பிரதான மாயின. அரசர்க்கு மேற்சொல்லிய இருவகையிலும் எழுகின்ற துன்பங்களை அறிந்து நீக்குவதற்கும், இனியும் அவ்வகைத் துன்பங்கள் வந்து துன்பம் செய்யாதபடி தடுப்பதற்கும் அறிவுடையவர் நட்பு அவசிய மானது.

அளவிறந்த தொழில் அரசர்க்கு அமைந் திருப்பதா லும், முக்குணங்களில் மயங்குவது மனிதர்க்கு இயற்கை யாத லாலும், ஆண்மை அதிகாரம் செல்வம் முதலானவற்றுக்கு அறிவை மயக்கும் ஆற்றல் அமைந் திருப்பதாலும், அரசர்கள் அறத்தில் வழுவுதலில் ஆச்சரியம் இல்லை. அப்படிப்பட்ட தருணங்களில்தான் அறிவிலும் அநுபவத்திலும் முதிர்ந்த பெரியவர்களும் அமைச்சர்களும் சென்று அரசர் கோபத்தை அஞ்சாமல் திருத்த வேண்டும். அங்ஙனம் திருத்துகின்றவர் களைக் கொண்ட அரசனுடைய ஆற்றலைப் பகைவர்கள் புகுந்து பிளந்து கெடுக்க முடியாது.

முன்னர் ஆதித்தன் குலத்தில் அம்பரீஷன் என்னும் அரசன் புருஷமேதம் என்ற வேள்வியை நடத்த விரும்பினான். வேள்விப் பொருள்கள் வேண்டும் அளவு விரைந்து கூட்டி யாயின. வேள்விப் பசுவாகிக் கொலை யுண்ப தற்கு மாத்திரம் எவரும் குறிக்கப்பட வில்லை. விலை கொடுத் தேனும் ஒருவனை விரும்பிக் கொள்ளவேண்டும் என்று, அவ் வரசன் நாட்டின் நான்கு பக்கங்களிலும் சென்றான். ஒரு வரும் கிடைக்க வில்லை. பின்னர்க் கங்கைக் கரையில் தவம் செய்து கொண்டிருந்த ரிசீகர் என்ற முனிவரை வணங்கி, வந்த காரியத்தை விளம்பினான். அம்முனிவர்க்கு மூவர் மக்கள் இருந்தனர். அவர்களில் இடையிற் பிறந்தவன் பெயர் சுநச்சேபன் என்பது. அவன் எழுத்தின் மணத்தை இன்ன தென்று அறியாதவன். முனிவர் அந்தச் சிறுவனை வேந்த னுக்கு விலைப்படுத்தி விட்டனர்.

அம்பரீஷ மன்னவன் சுநச்சேபனைத் தேரில் வைத்துக் கொண்டு வருகையில், கவுசிக முனிவர் இருக்கையில் இளைப் பாறுவதற்கு இறங்கினான். அப்போது சுநச்சேபன் அவ்விரு டியை வணங்கி. "முனிநாதா! நான் ரிசீக முனிவர்க்கு இரண் டாம் புத்திரன்; என்னைச் சுநச்சேபன் என்பார்கள்; தாயும் தந்தையும் அம்பரீஷ மன்னவருக்கு வேள்விப் பசுவாக என்னை விலைப் படுத்தி விட்டார்கள்; அந்தணனாய்ப் பிறந்தும் அகால மரணத்துக்கு அடிமையா யிருக்கிறேன்; நான் மூத்தவனாக, அல்லது இளையவனாக, அல்லது கல்வி யுள்ளவனாக இருந்தால், பெற்றவர் என்னைப் பரிந்து விற்றிரார்; இஃது என் வினைப் பயன்" என்று கண்ணீர் சொரிந்து கூறினான். கௌசிகர் அவன் நிலைமைக்குப் பரிதபித்துச் "சிறுவனே! வருந்தா திரு; நான் உனக்கு ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன்; உன்னைக் குளிப்பாட்டி, அணி ஆடைகளைப் பூட்டி, வேள்விச் சாலையில் விளங்க நிறுத்துவார்கள்; நீ அவநம்பிக்கை அடையாமல்

மந்திரத்தைச் சிந்தித்துக் கொண்டிரு; உன் உயிர் காப் பாற்றப்படும்" என்று சொல்லி, உயர்ந்த மந்திரம் ஒன்றை உபதேசம் பண்ணி யனுப்பினார். சுநச்சேபன் கண் பெற்ற குருடன் போலக் களித்துக், கொற்றவனோடு சென்றான்.

பிற்பாடு, ஒரு நல்ல முகூர்த்தத்தில் யாகம் ஆரம்பிக்கப் பட்டது. ரிசீகர் கவுசிகர் என்ற இருவரை யல்லாமல, வனத் தில் இருந்த முனிவர் யாவரும் வேள்விச் சாலைக்கு வந்திருந் தார்கள். வேள்விச் சடங்குகள் விதிப்படி நிறைவேறி வந்தன. அந்தணர் சுநச்சேபனை அலங்கரித்துக் கொணர்ந்து, அக்னி யின் எதிரில் அழகாய் நிறுத்தினார்கள். அந்தச் சிறுவன் மரண பயத்தினால் மந்திரத்தை விடாமல் சிந்தித்துக் கொண் டிருந்தான். வேள்விப் பசுவை வதைக்கும் சமயம் வந்து சேர்ந்தது. அதற்கென்று நியமனம் பெற்ற அத்வரியு என்ற அந்தணன் ஒருவன் வேதம் வாயில் தொனிக்க, வாள் கையிற் சிறக்கச், சிறுவன் சமீபத்தில் வந்தான்.

அப்போது, தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் திடீ ரென்று தோன்றிச் 'சிறுவனைக் கொல்ல வேண்டாம்' என்று சொல்லித் தடுத்து, அம்பரீஷ மன்னவனை நோக்கித் 'தரும வரசனே! உன் விருப்பம் நிறைவேறட்டும்; சிறுவனை விட்டு விடு; இவன் கொல்லத்தக்கவ னல்லன்; இனி, உலகத்தில் நரமேத வேள்வி நிந்திக்கப்பட்ட தாகுக' என்று சொல்லிச், சுநச்சேபன் கட்டைக் களைந்து 'சிறுவனே! உனக்கு இஷ்ட மான விடத்துக்கு இப்பொழுதே போய்ச்சேர்! நீ மகிமை பொருந்திய விசுவாமித்திர முனிவரால, மன்னிக்கப்பட் டிருக்கிறாய்' என்று சொல்லி, விண்ணில் மறைந்துபோனான். ஆதலால், பெரியவர்களைத் துணைகொள்வதைக் காட்டிலும் ஒருவனுக்குப் பெரும்பேறு வேறு கிடையாது.

—இராமாயணம்.

**அரியவற்று ளெல்லாம் அரிதே; பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்.**

## 46—சிற்றினம் சேராமை:—கைகேயி

சிற்றினம் சேராமையாவது சிறியவர் இனத்தைச் சேரா திருத்தலாம். சிறுமை+இனம்=சிற்றினம். சிறுமைக் கண் புகுவிக்கும் இனம் சிற்றினம். சேராமை—எதிர் மறைத் தொழிற் பெயர். நல்லவற்றினுல் உண்டாகின்ற நலனும், தீயவற்றினுல் உண்டாகின்ற தீமையும், இல்லை யென்று சாதிக்கின்றவர்களும், சிற்றின்பத்தையே பொரு ளென்று சொல்லுகின்றவர்களும், கொடுந்தொழில் செய்யும் தூர்த்தர்களும், மனம் வேறு தொழில் வேருக நடித்தலில் வல்ல நடர்களும் சேர்ந்த ஒரு கூட்டத்துக்குச் சிற்றினம் என்று பெயர். இப்படிப்பட்டவர் ஒருவன் இயற்கை அறி வைத் திரித்து, இருமையையும் கெடுப்ப ராதலால், இவர் களைச் சேரலாகாது என்று பெரியவர் சொல்லுவர். சிற்றினத் தைக் கண்ட மாத்திரத்தில் பெருந்தன்மையான வொழுக்கங் கள் தாமே அஞ்சி, அகன்று போய்விடும். உடனே தீய வொழுக்கங்கள் அதனைச் சுற்றம் என்று, சுற்றித் தொடர்ந்து நிற்கும்.

கல்வியினுலும் கேள்வினுலும் தூய்மை கொண்ட மன வுறுதியை முற்றிலும் கெடுத்துத் தீய வழியில் புகுவிக்கச் சிற்றினத்துக்குத் திறமை இருக்கின்றது. உதாரணமாக நிலம், மழைநீருக்குச் சுவையையும் நிறத்தையும் தந்து, மாற்றி விடுகின்றது. இன்னமும், நாம் நாள்தோறும் இரவில் காணுகின்ற இன்ப மயமான கனவையும், நமது நோயற்ற வுடம்பையும், மிகவும் சிறிய கொசுகு ஒன்று சங்கீதம் பாடி வந்து, தன் கடியினுல் அழித்தும், நோய்களில் நலிவித்தும் நாசம் செய்கின்றது. மெல்லிய வாழைத்தண்டு பெரிய வாளின் கூர்மையைக் கெடுத்து, வழு வழுப்புச் செய்து விடுகின்றது. எறும்பு ஊரக் கல்லும் தேயும்.

சிற்றினச் சேர்க்கையினால் குலப் பெருமை குலைந்து, கீழ்மைப் பட்டவர்கள் கணக்கில் அடங்க மாட்டார்கள். ஒரு வனுக்கு வினைத் தூய்மை மனத்தின் தூய்மையாலும், மனத் தின் தூய்மை பெரியவர் கேண்மையாலும் கிடைக்கின்ற படி யினால், சிற்றினம் அந்த மூன்றையும் அடியோடு அகற்றி விடும். சிற்றினச் சேர்க்கையினால் உயர் வடைந்தவர்களும், நல் லினச் சேர்க்கையினால் தாழ் வடைந்தவர்களும், எக்காலத்தி லும் இல்லை. மனத் தூய்மையை வளர்த்துப் பயன்படுத்து வதற்கு இனத் தூய்மை எருவைப் போன்றது. ஒரு சமயத்தில் வினை வசத்தினால் மனத் தூய்மை மாறுபட்ட விடத்திலும், இனத் தூய்மை முற்பட்டு நின்று, அவனை முற்றிலும் கெட வொட்டாமல் மடக்கி, முன்னைய வழியிற் செலுத்தும். உயர் வடைய விரும்புகின்றவன் சிற்றினப் பழக்கத்தைச் சிந்திக்க லாகாது.

ஆதிநாளில் அயோத்திப் பட்டணத்தில், தசரத சக்ர வர்த்திக்கு மூன்று மனைவிகள் இருந்தார்கள். கைகேயி யென்பவள் அவர்களில் ஒருத்தி. அவள் அழகில் சிறந்தவள். ஒழுக்கத்தில் உயர்ந்தவள். அழகின் மகிமையினாலேயே அவள் தசரதர்க்குத் தார மாயினாள். அவளை மணந்த பிற்பாடு, கௌஸல்யை சுமித்ரை என்ற கற்பரசிகளையுங்கூட அந்தக் கொற்றவர் கருதுவ தில்லை. தசரதர்க்கு அந்தப்புரமே அமரர் சோலை. கைகேயியின் காட்சியே கடவுள் தரிசனம். அவள் வார்த்தையே வேத வசனம். முடிவாய்ச் சொல்வோ மானால், கைகேயி எல்லா விதத்தினாலும் அவ்விறைவருக்கு இன்றி யமையாதவளா யிருந்தாள்.

கைகேயி மந்தரை என்ற ஒரு தாதி யிடத்தில் மிகவும் அன்பு கொண்டிருந்தாள். அந்த மந்தரை அற்பத் தனத்துக்கு ஆலய மானவள். முருட்டுத்தனமும், பிடிவாத குணமும்,

அவள் முகத்தில் நடனம் செய்துவரும். தனக்குப் பயனில்லா மற் போனாலும், பிறர் துன்பம் கண்டு மகிழ்தலையே இன்பம் என்று எண்ணுகின்றவள். சக்ரவர்த்தி அவள் குணத்தை அறிந்து கைகேயியை நோக்கிப் "பெருமை யுள்ளவளே! என் வார்த்தையைக் கேள்; மந்தரையை உன் அருகில் அணுக விடாதே; அவள் கீழ்க்குலப் பாவை; ஒழுக்க மும் உயர்ந்திருக்க வில்லை; அவள் அணுக வணுக, அற்பத் தனமும் ஆபத்தும், உன்னைத் தொடர்ந்து தொந்தரை செய்யும்; அவள் உள்ளத் தோட்டம் முள்ளிப் புதர் அடர்ந்த கள்ளிக் காடு; அவள் பசுத்தோல் போர்த்த பெரும் புலி; நீ அவள் பழக்கத்தில் எச்சரிக்கை கொண்டிரு" என்று அடிக்கடி சொல்லுவார். கைகேயி அவ்வசனங்களை அலக்ஷியம் செய்து வந்தாள்.

தசரதர்க்கு இராமன், பரதன், இலக்ஷமணன், சத்ருக்கன் என்று நான்கு புத்திரர் இருந்தார்கள். ஒரு சமயத்தில் அவர், தம் மூத்த மகனுக்கு முடி கவிக்க முகூர்த்தம் நிச்சயித் திருந்தார். பட்டணம் முழுவதும் தூசு துடைத்தும், சுண்ணம் தீற்றியும், சுத்தம் செய்தாயிற்று. மாளிகைச் சிகரங்களில், அரசரது அடையாளக் கொடி காற்றில் அசைந்து, அழகாக ஆடிக் கொண் டிருந்தது. ஜனங்கள் பந்தர் விரித்தல், தோரணம் தூக்கல் முதலான சித்திரத தொழில் களில் திறமை காட்ட லானார்கள். முடிசூட்டும் தினத்தின் முதல் நாள் மாலையில் மந்தரை கைகேயியைக் காண வந்தாள். மந்தரையின் முகம் பொலிவு குன்றிக் கிடந்தது. பொருளை இழந்த வறிஞன்போல அவள் மனம் துன்பச் சூறுவளியில் சுழன்று வருந்திற்று. கைகேயி அதனை அறிந்து "சகி! நாளை இராமனுக்கு மகுடாபிஷேக நாள்; அயோத்தி யடங் கலும் ஆநந்த வயிர்தத்தை அள்ளிப் புசிக்கின்றன; ஆனால், நீமாத்திரம் வருத்தமுற்று விளங்குகின்றனை; எனக்குத்

தெரிந்தவரையில் உன்னை வருத்துகின்றவர் இல்லை; உற்றதை ஒளியாமல் உரை" என்று உசாவினாள்.

மந்தரை "அரச குமாரி! உன் பேதைமையே என் துன்பத்துக்குக் காரணம்; நீ தொடரும் துன்பத்தைத் தெரியாமல் இருக்கின்றனை; உன் செல்வ நுகர்ச்சி அதனைத் தெரிய வொட்டாமல் மறைக்கின்றது; சக்ரவர்த்தி பெரிய நய வஞ்சகர்; அவர் பொய்யன்பு காட்டி. உன்னைப் பசப்பிக் கெடுத்துவிட்டார்; வெயிலில் வெளியாகி இரவில் மறைந்து போகின்ற பேய்த்தேர் போல, அவர் காட்டுகின்ற பொய்யன்பு உன் காட்சியில் வெளியாகி ஒருபயனையும் செய்யாமல், ஓடி யொளிக்கின்றது; கௌஸல்யை தனது விடா முயற்சியினால் தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் உறுதி தேடிக் கொண்டனள்; அவள் மகன் நாளைமுதல் இந்தப் பரந்த வுலகத்துக்குப் பேரரசன் அல்லவா?" என்று கூறினாள்.

கைகேயி "கெட்டவளே! நாவை அடக்கிக் கொள்; பிறர் அறிந்தால், தண்டனை தப்பாது; சக்ரவர்த்தி அக்கிரமம் செய்ய வில்லை; நீதியைத்தான் நடத்தி யிருக்கிறார்; செங்கோலும் கிரீடமும் சீதை நாயகனுக்குச் சொந்தமானவை; அவை பரதனுக்கு அங்கனம் ஆகா; ஏனென்றால், மன்னவர் மக்களில் மூத்தவனுக்குத்தான் மா நிலம் உரிமையானது; உன் அறியாமையினால் உன்னையும் என்னையும் ஒரு மிக்கக் கெடுக்காதே" என்று சொன்னாள். மந்தரை "அறிவற்றவளே! ஆழ்ந்து யோசனை செய்து பார்; சக்ரவர்த்தி உன்னைக் கைப் பற்றும்பொழுது, உன் தந்தை 'உன் வயிற்றில் பிறக்கும் புத்திரனுக்குப் பட்டம் கட்டுவதானால் உன்னைத் தர முடியும்' என்று சொன்னார். சக்ரவர்த்தி உன்னை விட மனம் இல்லாமல் 'பிதாவின் கலியாணத்தில் பிறக்கப்போகும் பிள்ளையின் உரிமையை ஒழுங்கு செய்வது உறுதி யாகாது; அப்பொழுது வந்து கவனப் படுத்துங்கள்'

என்று சொல்லி யிருக்கிறார் ; இப்போது பரதனும் ஊரில் இல்லை ; உன் தந்தைக்கும் செய்தி யனுப்ப வில்லை ; உன் தந்தை வந்தா லன்றிப, பரதன் உரிமையைப் பகர்கின்றவர் இல்லை; நீ அரச சுகத்தில் அமிழ்ந்தி, அதனை மறந்துபோய் விட்டனை; அரச குமாரீ! நெஞ்சில் நினைவு கூர்ந்து கொள்; காற்றுள்ள பொழுதிலேயே தூற்றிக் கொள்ளவேண்டும்'' என்று சாற்றினாள்.

அப்புறம், கைகேயி அதனை அங்கீகரித்துக் கொண்டாள். அவள் மந்தரையை நோக்கி "அன்புள்ளவளே ! நான் உன் அறிவை விரும்புகின்றேன் ; இப்பொழுது என்ன காரியம் செய்தால், பரதனுக்கு இளவரசு கிடைக்கும் ? ஆலோசனை செய்து சொல்'' என்றாள். மந்தரை தன் எண்ணம் பலித்து விட்டதென்று மகிழ்ந்து "அரச குமாரீ ! இன்னும் முற்றிலும் கெட்டுப்போக வில்லை; என் வார்த்தையைக் கேள்; சம்பரன் சமரில் உனக்குச் சக்ரவர்த்தி இரண்டு வரம் தந்திருக்கிறார்; அவற்றில் ஒன்றினால் உன் மகனுக்குச் சிஙகாதனத்தைச் சொந்த மாக்கிக் கொள்; மற்றொன்றினால், இராமனைப் பதி னான்கு வருஷம் வரையில் பெரிய வனத்தில் போக்கு'' என்று, உபாயம் உரைத்துக் கொடுத்தாள்.

கைகேயி அதனைக் கடைப்பிடித்து, அன்றிரவு அரசர் தன்னிடம் வந்தபொழுது, ஆதிநாளின் வரத்தை அவருக்கு நினைப்பூட்டி 'ஒன்றினால் பரதனுக்கு நாட்டையும், மற்றொன் றினால் பதினான்கு வருஷம் வரையில் இராமனுக்குக் காட்டை யும் கொடுக்கவேண்டும்' என்று கேட்டாள். சக்ரவர்த்தி தம் மால் முடியுந்தனையும் 'அவ்விரண்டும் அநியாயம்' என்று சொன் னார். அது பயன் படவில்லை. அப்புறம், அவர் "துஷ்டையே! இஃது உனக்குக் கூனியின் கூட்டுறவால் வந்த கேடு ; அவள் அற்ப புத்தியும் பிடிவாத குணமும் உன்னை அடைந்திருக்கின் றன; உன்னை அறியாமல் நான் ஒன்றையும் ஒளித்துச் செய்ய

வில்லை; நீ இவ்வரங்களை இரண்டொரு நாளைக்கு முன்னமே ஏன் விரும்பி யிருக்கலாகாது; நீ பரதனுக்கு அரசை விரும்புவதில் நான் வெறுப்புக்கொள்ள வில்லை; இராமனைக் காட்டுக்கு ஓட்டுவானேன்? அவன் உனக்காவது, அல்லது உன் மகன் பரதனுக்காவது, என்ன தீங்கு செய்தான் ? இது கொடுமையில் மிகுந்த கூனியின் போதனை யல்லவா? இதனால் வரவிருக்கின்ற இழிவை நீ இம்மியும் எண்ணிப் பார்க்க வில்லை; கூனியின் கூட்டுறவினால் உண்டான வினையின் விளைச்சலை இனி நீயே யிருந்து களி" என்று சொல்லி, அவள் விரும்பின அவ்விரண்டு வரங்களையும் கொடுத்து, அப்பொழுதே மரணமடைந்து போனார். ஆதலால், கீழ்மக்களின் சேர்க்கை ஒருவனுக்கு என்றும கேட்டையே உண்டு பண்ணும்.

—இராமாயணம்.

> சிற்றின மஞ்சும் பெருமை ; சிறுமைதான்
> சுற்றமாச் சூழ்ந்து விடும்.

## 47—தேரிந்து செயல்வகை :—நிருகன்

தெரிந்து செயல் வகையாவது அரசன் தான் செய்யக் கூடிய தொழில்களை ஆராய்ந்து செய்யும் திறமையாம். காலமும் இடமும் வலியும் என்ற மூன்றையும் கருதித் தொழில் செய்யவேண்டும். இவற்றுள் வலி யென்பது அறிவு ஆண்மை பெருமை என்று மூன்று வகைப்படும். பெருமை என்பது பொருளாலும் படையாலும் உண்டாவது. ஒருவன் தனக்குப் பெருமை தரும் காரியத்தைப் பெரியவர்களுடனும் தனித்தும் இருந்து, தீர்க்கமாக ஆலோசிக்கும் பொழுது, முடிக்கும் உபாயத்தையும் முன்னரே தீர்மானித்துக் கொள்ளவேண்டும். தொழிலைத் தொடங்கின பிற்பாடு, ஆலோசிக்க லாகாது. ஏனென்றால், முடிக்கும் வகையை முன்

னர் நினைக்காமல் தொடங்கிவிட்ட தொழிலைப், பிற்பாடு துணைவர் பலர் நின்று காத்தலைச் செய்தாலும், அந்தக் காரியம் நிறைவேற மாட்டாது. அஃது இடைநடுவில் சிதறுண்டு போவதோடு தொடங்கினவனுக்கு இகழ்ச்சியையும் ஈட்டித் தந்துவிடும்.

காரியம் தொடங்கும்பொழுது 'நிகழ் காலத்தில் அந்தக் காரியத்தின் பொருட்டு இழக்க வேண்டியதும் அதன் மதிப்பும் எவ்வகை? காரியம் முற்றுப் பெற்றால், எதிர் காலத்தில் அதனால் வரத்தக்க ஊதியமும் அதன் மதிப்பும் எவ்வகை? அதனை நிறைவேற விடாமல், இடையில் நின்று தடுப்பவர் யாவர்? அவர் பெருமை சிறுமைகளுக்கும் தன்னுடைய பெருமை சிறுமைகளுக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை? இன்னும், அவர் துணைவலியும் தனது துணைவலியும் எவை? அவர் முயற்சியும் தன் முயற்சியும் எவை? ஒரு சமயம் காரியம் இடையில் முரிந்து போவதா யிருந்தால், தனக்கு உண்டாகும் அழிவும் அதன் மதிப்பும் எப்படிப்பட்டவை?' என்ற இவை யெல்லாவற்றையும் தீரத் தெளியச் சிந்தித்துக் கொள்ளவேண்டும். அழிவைக் காட்டிலும் ஆவது அதிகமா யிருந்தா லன்றிக், காரியம் தொடங்கக் கூடாது.

அறிவுள்ளவர்கள் தொழிலில் வர விருக்கின்ற ஊதியப் பொருளை நினைந்து, தாம் உடைத்தா யிருக்கின்ற முதற் பொருளை முற்றிலும் இழக்க மாட்டார்கள். தொழிலை நிறைவேற்றுவதற்கு இன்சொற் சொல்லல், வேறு படுத்தல், கொடுத்தல், ஒறுத்தல் என்ற நான்கும் உபாயங்கள் ஆகும். இவற்றை வடமொழியில் சாமம், பேதம், தானம், தண்டம் என்று சொல்லுவர். ஆனால், இவ்வுபாயங்களையும்கூட எதிரியின் தாரதரத்தை அறிந்துதான் உபயோகிக்க வேண்டும். நல்வினையா யிருந்தாலும், தன்னால் முடியுந்தனையும் முதலில் எண்ணி யறிவதுவே முக்கியமானது.

நெடுங் காலத்துக்கு முன்னர் வைவஸ்வத மநுவுக்கு இக்ஷ்வாகு நிருகன் என்று, இரண்டு புத்திரர் இருந்தார்கள். அவர்களில் நிருகன் என்பவன் புஷ்கரத் துவீபத்தைப் பரிபாலித்து வந்தான். அவன் தருமம் தெரிந்தவன். பராக்கிரமம் பரந்தவன். வேதத்திற் சொல்லிய வேள்வி அனைத்தையும் விதிப்படி செய்தவன். அவன் தினமும் அந்தணருக்குத் தானம் தரும் பொருட்டுக் கையிற் பெய்து கொள்கின்ற மந்திரநீர் பெருகிப் புரண்டு, அரண்மனை வாயிலில் திருக்குளமாகத் தேங்கிக் கொண்டிருக்கும்.

அந்த மன்னவன் ஒருநாள் சில கறவைப் பசுக்களைச் சுசீலர் என்ற ஒரு அந்தணருக்குக் கொடுத்தான். சில மாதங்களுக்குப் பிற்பாடு, அவற்றில் இரண்டு பசுக்கள் விடுபட்டு வந்து, அரசன் மந்தைகளோடு கலந்து போய்விட்டன. சுசீலர் அவற்றைத் தேடிக் கொண்டிருந்தார். மற்றொரு சமயத்தில் அந்த நிருக மன்னவன் அர்த்தோதய புண்ணிய காலம் ஒன்றில் ஆயிரம் கறவைப் பசுக்களை அந்தணர்களுக்குத் தானம் பண்ணினன். அவற்றில் பத்துப் பசுக்களைக் காத்தியாயனர் என்றவர் பெற்றார். அவர் அந்தப் பசுக்களை ஓட்டிக்கொண்டு வருகையில், சுசீலர் இடையில் வந்து தடுத்து, அவற்றில் இரண்டு பசுக்கள் தமது என்றும், அவற்றைத் தம்மிடம் ஒப்புவிக்கவேண்டும் என்றும், சொன்னார். காத்தியாயனர் 'ஐயா! தாங்கள் சொல்வது சரியன்று; நான் இந்தப் பத்துப் பசுக்களையும் இப்பொழுதுதான் தானம் பெற்று வருகிறேன்; தருமம் தெரிந்த அரசன் தங்களுக்குத் தந்தவற்றையே திரும்பவும் எனக்குத் தந்திரான்; ஒரு சமயம், காணாமற்போன தங்கள் பசுக்களும், இவ்விரண்டு பசுக்களும், ஒரே சந்ததியிற் பிறந்திருக்கக் கூடும்; என்னைச் செல்லவிடுங்கள்" என்று கூறினர்.

சுசீலர் 'என் கண்கள் என்னை மோசம் செய்யா திருந்தால், இவ்விரண்டும் என் பசுக்கள்தாம்; நான் இவ்விரண்டையும் எழெட்டு நாட்களாகத் தேடித் திரிந்து வருகிறேன்; என் பசுவின் அடையாளம் எனக்குத் தெரியாமல் இருக்குமா? நான் தருமத்தைச் சொல்லி உங்களைத் தடுக்கிறேன்; பசுக்களை ஒப்புவித்துச் செல்லுங்கள்' என்று சொன்னார். காத்தியாயனர் 'நான் கொடேன்; வாருங்கள் இருவரும் அரசனிடம் சென்று அறிவித்துக் கொள்ளலாம்; அவன் தீர்ப்பு இருவர்க்கும் பிரமாணம் அல்லவா?' என்றார். சுசீலரும் 'சம்மதம்' என்று சொன்னார்.

அப்புறம் 'வழக்கு, வழக்கு' என்று அவ்விருவரும் நெடுநேரம் வரையில் கூவியும், சபையில் ஒருவரும் அவர்களைக் கவனிக்க வரவில்லை. பொழுது மறையும் தருணத்தில் ஒரு வேலைக்காரன் வந்து 'ஐயா! நாளை வாருங்கள்; அவசரமான ஒரு தொழிலின்மீது அரசர் அரண்மனை சென்று விட்டார்' என்றான். அவ்விருவரும் அப்படியே மறுநாள் கொலுவுக்குச் சென்றார்கள். அன்றும் அவர்கள் வழக்கு விசாரிக்கப்படவில்லை. 'மறுநாள் வாருங்கள்' என்று தவணை தரப்பட்டது. பொறுமையுள்ள அந்த இரண்டு அந்தணரும், மறுநாளும் மறுநாளுமாகச் சென்றும்கூட, அரசன் அவர்களுக்குத் தரிசனம் தரவில்லை. 'நாளை வாருங்கள்! நாளை வாருங்கள்!!' என்ற சொல்லையே அவர்கள் நாளும் கேட்டு வந்தார்கள்.

அவ்வந்தணர்களுக்கு அப்புறம், அலுப்பும் ஆத்திரமும் அதிகரித்தன. அவர்கள் கோபம் கொண்டு கொற்றவனைக் கண்டு 'மநு புத்திரனே! நீ உயர் குலத்திற் பிறந்தவன்; உலகத்துக்குச் சக்ரவர்த்தி; நற்குணங்களுக்கும் நிதி; இவ்வளவு இருந்தும் இராஜஸ குணத்தால் உண்டான பெருமிதம் உன்னைப் பேய்க் கோலம் கொள்கின்றது; அதுதான் ஏழைகளுக்கு எளிதில் காட்சி யளிக்க வொட்டாமல் உன்னைத்

தடை செய்கின்றது ; அந்தோ ! அந்த வொன்றுமாத்திரம் உன்னிடம் இல்லாதிருக்கு மாகுல், உன் கீர்த்தி இன்னும் அதிகமாக உலகத்தில் உயர்ந்து விளங்கும் ; எங்கள் வழக்கு இன்றி யமையாதது ; எங்களில் ஒருவர்க்குக் கொடுத்த பசுக் களையே திரும்பவும் மற்றொருவருக்குத் தானம் தந்திருக்கின் றனை ; அதனை அறிவிக்கும் பொருட்டு இரண்டு வாரத்துக்கும் அதிகமாக நாங்கள் இருவரும் 'வழக்கு வழக்'கென்று அலைந்து வருகிறோம் ; நீ விசாரிப்பதற்குக்கூட வெளியில் வரவில்லை ; ஏழைகளுக்கு எளியனுகாத குற்றத்தினுல், நீ இன்றுமுதல் பச்சோந்தியாக மாறிப் போய்விடு ; இதுதான் உன் பெரு மிதத்துக்குப் பலன் " என்று சபித்தார்கள்.

அரசன் பரபரப்போடு அவர்களை வணங்கிப் " பூஜ்யர் களே ! ஒருவருக்குக் கொடுத்த பசுக்களை மற்றொருவருக்குத் தானம் செய்த குற்றம் என்னைச் சேராது ; ஏனென்றால், என் பசுக்கள் என்றும், பிறர் பசுக்கள் என்றும், எனக்கு எப்படித் தெரியும் ? அதனைக் கோபாலகரைக் கொண்டு நீங் களே நிதானித்துக் கொள்ளலாம் ; இரண்டாவது குற்றத்துக் குத் தண்டனை அதிகம் ; அதனைக் குறைத்துக் கொடுங்கள்" என்று வேண்டினுன். அந்தணர் இருவரும் " அரசனே ! சாபத்தை அநுபவிக்க வேண்டியதுதான் ; இந்தச் சாபம் கமலைக் கேள்வன் இனிக் கொள்ளப்போகின்ற கிருஷ்ணுவ தாரக் காட்சியினுல் குறைந்து மறைந்து போகும்" என்று அநுக்கிரகம் செய்து போனுர்கள். அன்று முதல் அந்த மன்ன வன் பச்சோந்தி வடிவத்தோடு வனத்தில் வசித்து வருந்தி வந்தான். ஆதலால், நற்செயலா யிருந்தாலும்கூட ஒவ்வொன் றையும் ஆராய்ந்து பார்த்து ஒழுங்காகச் செய்யவேண்டும்.

—பாகவதம்.

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

## 48—வலியறிதல் :—பரசுராமர்

**வலியறிதலாவது** உபாயம் நான்கிலும் ஒறுத்தலைக் குறித்தவன் நால்வகைப்பட்ட வலிகளையும் அளந்தறிதல் என்பதாம். நால்வகை வலியாவன :—தொழிலின் வலி, அதனைச் செய்து முடிக்கின்ற தன் அறிவு பொருள் முதலானவற்றின் வலி, அதனை விலக்க வருகின்ற பகைஞர் வலி, இருவர்க்கும் துணை செய்ய நிற்பவர் வலி, என்பனவாம். பகைஞர் வலி தன்னிலும் மிகுந் திருக்குமானால் தோல்வியும், ஒத்திருக்குமானால் வெற்றியில் ஐயமும் உண்டாகும். அதனால் அவ்விருவகையிலும் ஒறுத்தல் துன்பம் தரும் தொழிலாம். ஒற்றர் முதலானவர்கள் அரசருக்குப் பகைஞர் வலியை அறிவிக்கும் கருவி யாவார்கள்.

தன் வல்லமையை அறிந்தவன் முயற்சியினால் கிடைத்த மொத்த வருமானத்தை நான்கு கூறு செய்து, இரண்டைத் தன் செலவுக்கும், ஒன்றைச் சேம தனத்துக்கும் ஆக்கி, மிகுந்த வொன்றைப் படை வீரர்களுக்குப் பகிர்ந் தளிக்க வேண்டும். உலகத்தில் ஒருவன் வலிக்குப் பொருளே முதற் காரண மானதால், வருமானம் அளவிற் சுருங்கினாலும், செலவு மாத்திரம் வருமானத்தை மிஞ்சலாகாது. வருமானத்தின் அளவைக் கடந்து செலவு செய்கின்றவன் வாழ்க்கை முதலில் உள்ளது போலத் தோன்றி, உண்மையில் இல்லாதாகிப், பின்னர் அந்தத் தோற்றமும் கெட்டுத் தொலைந்து போய்விடும்.

அரசன் தன் வலியின் குறையையும், அதன் அளவையும் அறியாமல், பேராசை கொள்ளக் கூடாது. வலியில் மிகுந்தவரோடு பகைத்துக் கெட்டவர் பலர். நட்புச் செய்ய வேண்டியவர்களைப் பகைத்தவன் விரைவில் கெட்டழிந்து போவான். பகைஞர் வலியினும் தன் வலி மிகுந்திருந்தா

னும், அளவு கடந்து செல்லக் கூடாது. ஏனென்றால், மரத்தின் நுனியில் ஏறி நின்றவன் அதில் அமையாமல், மேலும் மேலும் ஏறிச் செல்ல முயன்றால், அம் முயற்சி அவன் உயிர் முடிவிற்கே ஏதுவா யிருக்கும். அரசனுக்கு உண்மையில் வல்லமை யிருந்தாலும், பலர் பகையை ஒருமிக்கக் கொள்ளக் கூடாது. சிற்றெறும்புகள் பல ஒன்று சேர்ந்து, பெரிய அரவத்தையும் கடித்துக் கொன்று விடுகின்றன வல்லவா!

முன்னாள் வனத்தில ஜமதக்னி முனிவருக்குப பரசுராமர் என்று ஒரு புத்திரர் இருந்தார். அவர் வேதம் முதலான அந்தணர் கல்விகளையும், வில்வித்தை முதலான வேந்தர் கல்விகளையும், ஐயம் இல்லாமல் கற்றார். ஒரு சமயத்தில் ஹேஹய தேசத்து அரசனை கார்த்தவீரியன் என்பவன் ஜமதக்னி முனிவருடைய தெய்வப் பசுவை அபகரித்துக்கொண்டு போனான். அதனால், பரசுராமர் அமரில் அவ்வரசனைக் கொன்று, ஆவை மீட்டுவந்தார். மற்றொரு சமயத்தில் கார்த்தவீரியன் புத்திரர் பரசுராமர் அப்பாற் சென்றிருந்த பொழுது மறைந்து வந்து, ஜமதக்னி முனிவரைக் கொன்று போய்விட்டார்கள். முனிவர் மனைவி புத்திரன் வந்த பிற்பாடு "குழந்தாய் பரசுராமா! நான் உன்னை மகனாய்ப் பெற்றும், கணவனை இழந்து கைம்பெண் ஆயினேன்; உன் தந்தையின் மரணம் மிகவும் அநியாயம்; அந்தணரில் ஒருவரும் அப்படிப்பட்ட மரணத்தை அடைந்தது கிடையாது; உனக்காவது, அன்றிக், கடவுளுக்காவது, கார்த்தவீரியன் மக்கள் பயப்பட வில்லை; துடுக்கு மிகுந்து துன்பம் இழைத் திருக்கிறார்கள்" என்று துக்கத்தினால் இருபத்தொரு முறை தன் மார்பில் அறைந்து கொண்டாள்.

பரசுராமர் "அம்மா! இறந்தவரைப் பிழைப்பிக்கின்ற தெய்வ சக்தி எனக்கு இல்லாமற் போனாலும் பழி தீர்க்கும்

சக்திகூட இல்லாமற் போகவில்லை; என் தந்தையைக் கொன்ற வர்களையும், இன்னும அவர்கள் குலத்திற் பிறந்தவர்களையும், இருபத்தொரு தலைமுறை வரையில் கொன்று, அவர்கள் உதிரத்தை மடுவாய்த் தேக்கி, இறந்துபோன என் தந்தைக்குத் தர்ப்பணம் பண்ணுகிறேன்" என்று சபதம் கூறினார். பின்னர் அவர், தந்தையின் பிரேதச் சடங்கை நிறைவேற்றின பிற்பாடு, கார்த்தவீரியன் மக்களையும், கதிரவன் குலத்தில் பிறந்த கொற்றவர்களையும் கடுமையாய்க் கொன்று, கம் சபதத்தை நிறைவேற்றிக் கொண்டார். அவர் தேக்கின உதிர மடுவுக்குத்தான் ஸ்யமந்தபஞ்சகம் என்று பெயர் புகல்வார்கள். அந்தக் காலத்தில் இன குலத்திற் புகுந்த அரச குமாரிகள் அத்தனை பெயரும் அமங்கலிகளாகி, அனலிற் குளித்து விட்டார்கள். கார்த்த வீரியர்களின் அநீதியை அந்தக் குலத்தில் பிறநதவர்கள் அநுபவிக்கலாயிற்று. அப்புறம், பரசுராமர் தம் பராக்கிரமத்தினால் உரிமையாக்கிக் கொண்ட இந்தப் பரந்த வுலகத்தைக் காசிப முனிவர்க்குத் தானம் பண்ணிவிட்டு, மேல் கடலைத் தூர்த்துக் கேரள தேசத்தைப் படைத்து, அங்கிருந்துகொண்டு தவம் செய்து வந்தார்.

நெடுங் காலத்துக்குப் பிற்பாடு, அவ்வின குலத்தில் இராமன் என்பவன் தசரதர்க்குப் புத்திரனாய்ப் பிறந்தான். அவன் தன் இளம் பிராயத்திலேயே எல்லாக் கலைகளையும் எழுத்தெண்ணிப் படித்துக், கொற்றவன் கட்டளையினால் ஒரு சமயத்தில் கவுசிக முனிவர்க்கு உதவி செய்யச் சென்றான். அங்குக் கானகத்தில் தன்னை எதிர்த்துவந்த தாடகை முதலானவர்களைக் கொன்று, முனிவர் வேள்வியை முடித்து, அப்புறம் அவரோடு மிதிலைப் பட்டணம் போனான். அந்த நாட்டுக்கு அரசன் தன் மகள் சீதை என்பவளுக்குக் கன்யா ஸுல்கமாக ஒரு உயர்ந்த வில்லை வைத்திருந்தான். இராமன் முனிவர்

கட்டளையின்மீது அந்த வில்லை முரித்து வைதேகியை மணந்து, அவளுடன் அயோத்திக்கு வந்துகொண் டிருந்தான். அப்பொழுது, நடுவழியில் பரசுராமர் வந்துசேர்ந்தார். அவர் முகத்தில் கோபமும் ஆத்திரமும் குடிபுகுந் திருந்தன, சடைக் கற்றைகள் செக்கர் வானத்திலும் சிவந்து புரண்டன. ஒரு தோளில் பரசு வென்ற கோடரியும், மற்றொரு தோளில் மிகவும் நீண்டதொரு வில்லும் தொங்கிக்கொண் டிருந்தன. மலையிற் புரளும் அருவிப் பெருக்குப்போல, அவர் மார்பில் முப்புரி நூல் மின்னி விளங்கிற்று. தசரதரும் படை வீரர்களும் அவரைக் கண்டு அச்ச மடைந்துவிட்டார்கள்.

பரசுராமர் அவர்களைப் பொருள் பண்ணுமல், இராமன் எதிரில் வந்துநின்று 'சிறுவனே! நீதான் இராமன் போலும்; முனிவர்கள் உன்னை மிகவும் வியந்து சொல்கிறார்கள்; உன்னை நேரிற்காண விரும்பியே நானும் நெடுந்தூரத்திலிருந்து வந்தேன்; இவளைத்தான் ஜானகி யென்று சிந்திக்கின்றேன்; இருவரும் கேள்விக்கும் அதிகமாகவே அழகில் மிகுந்து விளங்குகின்றீர்கள்; என்னைப் பரசுராமன் என்பார்கள்; வைதேகியை மணக்கப் பரமசிவத்தின் பழைய வில் ஒன்று பணையமாய்க் கிடந்த தன்றோ? அந்த வில்லை வளைத்துத்தான் நீ மைதிலியை மணந்திருக்க வேண்டும்; அவ்வில்லின் பெரு மையும், உன் வயதின் சிறுமையும், ஒன்றுக் கொன்று முரண் படுகின்றன; எனக்கு இப்பொழுது அவ் வையப் பாட்டை அகற்று; இது திருமாலின் பெரிய வில்; இதனை இப்பொழுது வளைத்து நாண் பூட்டிக் காட்டு" என்று சொல்லித் தம்மிடம் இருந்த ஒரு பெரிய வில்லைக் கொடுத்தார்.

இராமன் புன்சிரிப்போடு அந்தக் கோதண்டத்தை வளைத்துக் கோல் பூட்டி நிறுத்தி "அந்தணர் பெரும! தாங்கள் வேதத்திலும் வில் வித்தையிலும் சிறந்து விளங்குகின்றீர்கள்; நான் தங்கள் கட்டளையின் வண்ணம் வில்லில் கோல் தொடுத்

திருக்கிறேன்; இவ்வம்பை யாவர்மீது செலுத்த உத்தர விடுகிறீர்கள்" என்று கேட்டான். பரசுராமர் திடுக்கிட்டுத் திகைத்து "இராமா! நான் உன் பராக்கிரமத்துக்குப் பயப் படுகின்றேன்; நான் உன்னால் முற்றிலும் தோல்வி யடைந்து போனேன்; என் சபத காலத்தில் நீ இருந்திராதது எனது நற்காலமே யாகும்; கடவுள் என்னில் இருந்துகொண்டு, என் சபதத்தை நிறைவேற்றித் தந்தார்; எனக்கு வில்வேலை முடிந்து போயிற்று; உன் அம்புக்கு என் புண்ணியங்களைப் பெற்றுக்கொண்டு, என்னை விடுதலை செய்துவிடு" என்று விநயத்துடன் விளம்பினார். இராமன் 'அங்ஙனமே செய்யுங் கள்' என்று சொல்லி, அவர் தவங்களையும் வில்லையும் பெற்றுக் கொண்டு பட்டணம் வந்து சேர்ந்தான். பரசுராமர் எல்லாத் தவங்களையும் இமைப்பிற்குள் இழந்து எண்ணம் அழிந்து வருந்தி, இறைவனை நாடிச் சென்றார். ஆதலால், பகைஞர் பலத்தை அறியாமல், சமருக்குச் செல்லக் கூடாது.

—இராமாயணம்.

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

## 49—கால மறிதல் :—அமரர்கள்

**காலமறிதல்** என்பது வலியில் மிகுந்த அரசன் பகைவர் மேற் செல்லும்பொழுது, தனக்குத் தகுதியாகிய காலத்தை உணர்ந்து அறித லாகும். பகைவர்மேற் செல் கின்றவனுக்குக் காலம் அவசிய மானது. பகைவரை வெல்ல நினைக்கின்றவன் வலியில் மிகுந்திருந்தாலும், வெல்லும் காலம் வருகின்ற வரையிலும், ஆட்டுக் கிடாய் தன் பகை கெடப் பாய்வதன்பொருட்டுப் பின்னே கால்வாங்கிச் செல்லும் தன்மையை நினைந்து, பொறுத்திருக்க வேண்டும். அப்படிப்

பொறுத்திருக்கும்பொழுதும் சதுரர்கள் சும்மா விருக்க மாட்டார்கள். வெல்லும் உபாயத்தை நினைந்து, அதற்குத் தகுதியான தொழில்களைச் செய்துகொண் டிருப்பார்கள்.

அந்தத் தொழில்க ளாவன:—பகைவரை நட்பாக்குதல், அவருக்குப் பகையை உண்டுபண்ணுதல், அவர்மேல் படை யெடுத்தல், அவர் மதிலின் புறத்துத் தங்குதல், அவர் துணைவலியைப் பிரித்தல், தனக்குத் துணைகூட்டிக் கொள்ளு தல் என்று அறுவகை யாகும். பகைவரை வெல்வதற்குக் காலம் கைகூடாத பொழுது, அவர் தனக்குக் கேடு செய்த போதிலும், அவரைக் கோபித்துத் தன் பகையை வெளியாக்கிக் கொள்ளக் கூடாது. அவசியம் என்று தோன்றினால், பணிதலை யும் செய்யவேண்டும். ஏனென்றால், அந்தப் பணிவு பகை வர் தம்மை காத்துக்கொள்வதில் கவனக் குறைவைச் செய்யும். அந்தக் கவனக் குறைவே பிற்பாடு, அவரை அழிப் பதற்குத் துணைக் கருவி யாகும். பகற் காலத்தில் கூகைக் கூட்டங்களைத் தனித்திருந்து கொல்லும் காக்கை, இராக் காலத்தில் அவற்றால், இனத்தோடு தொலைவது எல்லாருக்கும் தெரியும்.

இனிப், போருக்கு ஆகும் கால மாவது :—நிலம் அளவு கடந்த வெம்மையும், அளவு கடந்த தண்மையும் கொள்ளாமல், தன்னுள் ஒத்துப், படைகளுக்கு நோய் செய்யா திருத்தலும், படை செல்லும் வழி தண்ணீரையும் உணவையும் நிழலை யும் உடைத்தா யிருத்தலும், இன்னும் இவை போல்வனவும் ஆகும். காலமும் துணைக் கருவிகளும் சரியானபடி அமைந் திருக்கும்பொழுது அரசர்கள் பகைஞரைத் தாக்கி வெற்றி பெற முயல வேண்டும்.

முன்னர்க் காசிப முனிவர்க்கு மாயையின் வயிற்றில் பிறந்த சூரன் என்பவன் சிவ பெருமானை வணங்கி, இறவா திருக்க வரம் பெற்றுக் கொண்டான். அசுர குருவான சுக்கி

ரர் ஆதி நாள் முதல் அமரர்கள் அசுரர்க்குச் செய்யும் அக்கிர மங்களையும், அவற்றால் அசுரர்கள் அடைந்த அலங்கோலங் களையும், அவனுக்குச் சொல்லி 'நீ எவ்விதத்திலும் தேவர் கூட்டங்களை ஏவல் கொள்ள வேண்டும்' என்று கூறினர். சூரன் வீர மாகேந்திரம் என்னும் பட்டணத்தை ராஜதானி யாய்க் கொண்டு, அசுரப் படைகளைத் திரட்டி அரசாட்சி செய்து வந்தான். அவன் முதலில் இந்திரன் முதலான இறையவர் பதங்களுக்குச் சென்று, அவர்கள் அனைவரையும் சமரில் தனக்கு அடிமை யாட்களாய்ச் செய்துகொண்டான்.

சூரனுக்கு அத்தேவர்கள் செய்யும் வேலைக ளாவன :— அக்னியும் அவனைச் சேர்ந்தவர்களும் சமையல் வேலைக் காரர்கள். இயமனும் இயம தூதர்களும் படைவீரர்கள். நிருருதியும் அவன் துணைவர்களும் உக்கிராண வேலையாட் கள். வருணனும் அவன் பரிவாரங்களும் தோட்ட வேலைக் காரர்கள். வாயுவும் அவன் கிங்கரர்களும் சுகாதார வுத்தியோ கஸ்தர்கள். குபேரனும் அவன் இனத்தாரும் வரி வசூலிப்ப வர்கள். இந்திரனும் அவனை உள்ளிட்டவரும் மீன்களையும் மாமிசங்களையும் கொணர்ந்து கொடுக்கின்றவர்கள். அரம்பை முதலானவர்கள் அசுரப் பெண்களுக்கு அடிமை வேலைசெய்யும் சேடிகள். ஒவ்வொரு தெய்வ பதந்தோறும் அசுரேந்திரன் கட்டளை பெற்ற அரக்கன் ஒருவன் இருந்து, அதிகாரம் செய்து வருவான். நிமிஷத்துக்கு நிமிஷம் நிறம் மாறுபடுகின்ற பச் சோந்தியைப் போலத் தங்கள் வடிவங்களை நினைத்தபடி மாற் றிக்கொள்வதில் வல்லவர்களான அசுர வொற்றர்கள் எல்லா வுலகங்களிலும் விரைந்து சென்று, அப்போதைக் கப்போது அசுரேந்திரனுக்கு விஷயங்களை அறிவித்து வருவார்கள். பிதா மகர் பஞ்சாங்கம் புகன்று, சூரன் கருணைக்கு சொந்தரா யிருந் தார். அமரர்களுக்கு அமுதம் பருகியும், ஆயுள் பெருகியும், ஆளுகையில் பழகியும்கூட அசுரனை அடக்க வாவது, அன்றித்

தங்கள் அடிமைத் தனத்தை விலக்க வாவது, ஆற்றல் அமைய வில்லை. அனைவரும் வெல்லுங் காலம் கருதி, அவன் இட்ட குற்றேவல்களைச் செய்து கும்பிட்டுக்கொண்டு வந்தார்கள். பின்னர் முருகக் கடவுள் அவதரித்த பிற்பாடு, அனைவரும் சேர்ந்து அவரைத் தெய்வப் படைகளுக்குத் தலைவராக்கிச் சூரனை யெதிர்த்துச் சண்டை செய்யப் பண்ணினார்கள். அந்தப் பெரும் போரில் தேவர்களுக்கு அநுகூலம் உண் டாயிற்று. சூரன் சுப்பிரமணியக் கடவுளின் தெய்வத் திற லுக்குத் தோற்று, அவருக்குக் கோழிக் கொடியும் மயில் வாகனமுமாக மாறிப் போய்விட்டான். உம்பர்கள் அப்புறம் உண்மையான வெற்றியை அடைந்து, தங்கள் தங்கள் தெய்வ பதங்களைப் பெற்றுச் சந்தோஷித் திருந்தார்கள். ஆதலால், காலம் வருந்தனையும் சதுரர்கள் தேவர்கள்போலத் தங்கள் பகைவர்களுக்குப் பணிந்து நடக்கவேண்டும். —ஸ்காந்தம்.

காலம் கருதி யிருப்பர்; கலங்காது
ஞாலம் கருது பவர்.

## 50—இட னறிதல் :—சுக்கிரீவன்

வலியும் காலமும் அறிந்து, பகைவரை வெல்ல எண்ணு கின்றவன் தான் வெல்லத் தக்க இடத்தை உணர்ந் தறிதல் என்பதாம். பகைவரை முற்றுகை செய்வதற்குத் தக்க விடத்தைப் பெற்றாலல்லாமல், வெல்வதற் காகிய சிறிய தொழிலையும் அவர்மேற் செய்யாமலும், அவரை அற்பம் என்று இகழாமலும், இருந்து வரவேண்டும். வாயில்களாலும், அந்தரங்கச் சுரங்கங்களாலும், பகைவர் உள்ளே புக முடியாததும், ஒரு சமயம் புகுந்தால், தப்பிப்போக முடியாததும், தானும் தன் படைகளும் தங்கி எதிர்க்கத் தக்கதுமான இடம் சிறந்த விட மாகும். ஒருவ

னுக்குப் பொருள் வன்மையைக் காட்டிலும் இட வன்மை சாலச் சிறந்தது. வலி யற்றவர்களும்கூடச் சொந்த நிலத்தில் நின்று, தங்கள் வலிய பகைவர்களை எதிர்த்து நிற்பார்கள். முதலை மிகவும் ஆழமான மடுவில் நின்றுகொண்டு, மதம் பொருந்திய யானையையும் இழுத்துச் சென்று கொல்வது எல்லாருக்கும் தெரியும்.

பகைவர் அற்பமானவர் என்று தனக்குச் சிறிதும் பொருந்தாத விடத்தில் நின்று போர் செய்யக் கூடாது. ஏனென்றால், பாகர்களுக்கு அடங்காமல் வேலாட்களைத் தனது கோட்டினுற் குத்தியும் கோபம் தணியாத கொடுங் களிறு, சேற்று நிலத்திற் சிக்கினுல் நரிக் கூட்டங்கள்கூட அதனை நிமிஷத்தில் நாசம் செய்துவிடும். ஒருவர்க்கு வெற்றி தருகின்ற இடம் வேருருவர்க்கும் அங்ஙனமே வெற்றியைத் தாராது. நிலத்தில் நெடுந்தூரம் செல்லும் வலிய வுருளைகளைக் கொண்ட தேர், நீந்துவதற்கு உரிய கடலிலும், அங்ஙனமே பாய் வலித்துச் செல்லும் பெரிய மரக்கலம் நிற்பதற்கு உரிய நிலத்திலும் செல்லத்தக்க தன்று.

முன்னர் இந்திரனுக்கு ருக்ஷ ரஜஸ் என்ற பெண் குரங்கி னிடத்தில் வாலி யென்பவனும், சூரியனுக்கு அதே குரங்கி னிடத்தில் சுக்கிரீவன் என்பவனும் பிறந்தார்கள். வாலி வானர வரசனுகிச் சுக்கிரீவனோடு கிஷ்கிந்தையில் இருந்து கொண்டு கோல் செலுத்தி வந்தான். அவனுடன் சண்டை செய்வதற்கு எவரும் சக்தி யுள்ளவர் அல்லர். ஒரு சமயத்தில் துந்துபி யென்னும் அரக்கன் வாலியோடு திமிரினுல் சண்டை செய்ய வந்தான். அவன் அசுரச் சிற்பியான மயன் என்பவன் புத்திரன். இருவர்க்கும் பலநாள் வரையில் பெரும் போர் நடந்தது. அவர்கள் சண்டை யிரைச்சல் திசைகளையும் பயப் படுத்தித், தரணியையும் நடுங்கப் பண்ணிற்று. அப்புறம் அசுரன்

பலம் குன்றிப் பகைவன் கையிற் சிக்கினான். வாலி துந்துபியைக் குத்திக் கொன்று, அவன் சடலத்தை வீசி யெறிந்து விட்டான். அது வெகுதூரம் வரையில் வானத்தில் வேகமாய்ச் சென்று ருஶ்யமூகம் என்னும் மலையில் வந்து விழுந்தது. அங்கு அவ் வரக்கன் உடல் அடக்கம் செய்யப்படாமல் பல நாள் வரையி லும் அப்படியே கிடந்து நாற்ற மெடுத்துப் போயிற்று. அம் மலையில் மதங்கர் என்ற முனிவர் ஒருவர் தவம் செய்து வந்தார். அவருக்குப் பிண நாற்றம் பொறுக்க முடிய வில்லை. அதனால் அவர் கோபித்துக்கொண்டு 'இவ்வுடலத்தை எறிந்து, என் தவத்துக்குத் தீங்கு செய்தவன் இந்த மலைக்கு வந்தால், தலை பிளந்து இறந்து போகட்டும்' என்று சாப மிட்டார். வாலி அந்தச் சாபத்தை அறிந்து, அன்றுமுதல் அம்மலைக் குச் செல்வ தில்லை.

நெடுங் காலத்துக்குப் பிற்பாடு, துந்துபியின் சகோதர னான மாயாவி யென்பவன் வாலியுடன் சண்டை செய்ய வந்து சேர்ந்தான். பலத்தில் மிகுந்த வாலி அவனை எதிர்த்துச் செல் கையில், மாயாவி தோல்வி யுற்று உயிர் பிழைக்க வோடி, ஒரு குகையில் ஒளிந்துகொண்டு விட்டான். வாலி 'உன்னை விடுவ தில்லை' என்று, சுக்கிரீவனையும் அநுமான் முதலானவர்களையும் குகை வாயிலுக்குக் காவல் வைத்துவிட்டு, உள்ளே நுழைந்து சென்றான். இருபத்தெட்டு மாதம் வரையில் வாலி யாவது மாயாவி யாவது பிலத்திலிருந்தும் புறப்பட்டு வர வில்லை. குகையைக் காத்துக் கொண்டிருந்த அனுமான் முதலானவர்கள் வாலி சொலை யுண்டான் என்று துணிந்து, குகை வாயிலை மலைகளினால் தூர்த்துவிட்டுக், கிஷ்கிந்தைக்கு வந்து சுக்கிரீவனை அரச னாக்கினார்கள்.

அப்புறம், மாயாவியை வதைத்து வெளிப்பட்டு வந்த வாலிக்குச் சகோதரன்மீது துவேஷம் உண்டாயிற்று. அநுமான் முதலான அமைச்சர்கள் சுக்கிரீவன் தாய்

மைத் தன்மையைச் சொல்லிக் காட்டியுங்கூட வாலியின் மனம் தெளிவு பெற வில்லை. அவன் 'சுக்கிரீவன் என் பகைஞன்; நான் அவனைக் கொன்று லன்றிக், கோபம் தணிய மாட்டேன்' என்று சொல்லிச், சகோதரனைக் கொல்லத் தொடங்கி விட்டான். சுக்கிரீவன் 'அபயம் அபயம்' என்று அடியில் விழுந்து அழுதும், வாலி அங்கீகரிக்க வில்லை. அதனால், சுக்கிரீவன் தன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டு உலகத்தின் ஒவ்வொரு பாகத்திலும் சென்று ஒளிந்து வரத் தொடங்கினான். வாலி விடாமல் துரத்திக், கொல்ல முயன்றபடியினால் அநுமான் முதலானவர்கள் மதங்க முனிவர் சாபத்தைச் சொல்லிச், சுக்கிரீவனை ருஶ்யமூக மலையில் இருக்கப் பண்ணினார்கள். வாலி அந்த மலைக்குச் செல்ல முடியாமல் பற்களைக் கடித்துப் 'பயலே! வெளியில் வா! பார்த்துக் கொள்கிறேன்' என்று சொல்லிச் சென்றுவிட்டான்.

அன்று முதல் சுக்கிரீவன் அந்த மலையில் அச்ச மற்றுத் தங்கி, வாலியை வெல்ல ஆலோசனை செய்து வந்தான். அந்தச் சூழ்ச்சி இராமர் வரவால் நிறைவேறிற்று. இராமர் சீதையைத் தேடி வருகையில், சுக்கிரீவன் அவரை நட்புச் செய்து கொண்டு அவரால் வாலியைக் கொல்வித்தான். அதுபோலப் பகை களையக் கருதுகின்றவன் முதலில் தகுதியான விடத்தைத் தேர்ந்து அமைத்துக் கொள்ளவேண்டும்.

—இராமாயணம்.

**எண்ணியா ரெண்ண மிழப்பர்; இடனறிந்து**
**துன்னியார் துன்னிச் செயின்.**

## 51—தெரிந்து தெளிதல் :—துரியோதனன்

தெரிந்து தெளிதல் என்பது அமைச்சர் முதலானவர்களை அவர்கள் பிறப்பு அறிவு குணம் முதலியவற்றையும், அவர்கள் செயலையும், காட்சி கருத்து ஆகமம் என்ற அளவைகளால் ஆராய்ந்து தெளித லாகும். வலியறிதலும் கால மறிதலும் இட மறிதலும் என்ற மூன்றையும் அறிந்து, தொழிலை முடிக்க நினைக்கின்றவர்களுக்குத் தம் படைவீரர்கள் போரில் நிலைத்து நின்று பகைவரைத் தாக்குவதற்கும், நடுப்போரில் புறங் காட்டி ஓடா திருப்பதற்கும், உயிருக்குத் துணிந்து பொருது வெற்றி தருவதற்கும், அவர்களைத் தெரிந்து தெளிவது அவசிய மானது.

அறம் பொருள் இன்பம் உயிரச்சம் என்கின்ற நான்கு சோதனைகளினாலும் அவர்கள் மன வியல்பைத் தெளியலாம் என்று தெரிந்தவர் சொல்லுவர். அறத்தால் தெளிதல் என்பது புரோகிதரையும் நீதித் தலைவரையும் ஒருவனிடம் விட்டு 'இவ்வரசன் நாட்டுக்கும் நமக்கும் அக்கிரமம் செய்கின்ற படியினால் இவனை நீக்கித், தருமமும் உரிமையு முள்ள வேறொருவனை அரசனாக்க விரும்பி யிருக்கின்றோம்; இவ்விஷயத்தில் நீ எப்படி எண்ணுகின்றனை ?' என்று கேட்பித்து, அவன் விடையைக் கொண்டு தெளித லாகும். பொருளால் தெளிதல் என்பது சேனைத் தலைவனையும் அவனோடு இயைந்த சிலரையும் கொண்டு, அவரால் 'உயிருக்குத் துணிந்து பொருது, அரசைப் பெருக்கியும் ஆளுகையை நிலைக்கவும் செய்கின்ற நம்மிடத்திலும் கூட இவ்வரசன் உலுப்த னாகின்றபடியினால் இவனை நீக்கிக், கொடையும் உரிமையு முடைய வேறொருவனை வேந்தனாக்க விரும்பி யிருக்கின்றோம்; இவ்விஷயத்தில் உன் கருத்து எப்படி?' என்று ஒருவனைக் கேட்பித்து, அவன் விடையைக்

கொண்டு தெளித லாகும். இன்பத்தால் தெளிதல் என்பது அரண்மனைத் தாதிகளில் மூத்தவளான வொருத்தியை ஒருவனிடம் போக்கி, அவளால் 'அரசன் மனைவிகளில் இன்னாள் நின்னை விரும்பி என்னைத் தொந்தரிக்கின்றனள்; நீ அவளை அடைந்தால், இன்பமும் பொருளும் எளிதில் சித்தியாகும்' என்று சொல்வித்து, அவன் விடையைக் கொண்டு தெளிதலாகும். அச்சத்தால் தெளிதல் என்பது அமைச்சன் ஒருவனை ஒரு காரியத்தின் பொருட்டு அழைப்பித்து 'நாம் கொற்றவனுக்குச் கேடு சூழக் கருதுகின்றோம் என்று, நாயகன் நம்மை நசுக்க நினைப்பதனால், நாம் அவனுக்கு அதனை முன்னிட்டுச் செய்து, நமக்கு இனியனான வேறொருவனை வேந்தனாக்கிவிடலாம்; உன் னெண்ணத்தை ஒளியாமல் உரை' என்று கேட்பித்து, அவன் விடையைக் கொண்டு தெளித லாகும்.

அரசர்கள் இந்நான்கிலும் மாறு படாதவர்களைத் தெளிந்து அவர்களிடத்தில் தொழிலை ஒப்புவிப்பார்கள். பெரும்பாலும் உயர்குடிப் பிறப்பும், நாற்பத்து நான்காவது அதிகாரத்திற் சொல்லிய அறுவகைக் குற்றம் இல்லாமையும், பழிக்கு நாணுதலும் உடையவர்களாகி, எல்லா நூல்களையும் கற்றுத் தெளிந்தவர்கள் உத்தமர்களாகவே யிருப்பார்கள். குற்ற மற்றவர்களைக் காண்பது குவலயத்தில் அரியதான படியினால் ஒருவனிடத்தில் காணும் குற்றங்களையும் குணங்களையும் ஆராய்ந்து, இரண்டிலும் மிகுந்துள்ள பகுதியில் அவனைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். பிறப்பு குணம் அறிவு என்றவற்றால் மனிதர்கள் அடையும் பெருமையையும், அன்றிச் சிறுமையையும், அவரவர் ஒழுக்கங்களே உரைத்துக் காட்ட வல்ல உரைகல் லாகின்றது. பழிக்கு நாணுகின்றவர்கள் எப்பொழுதும் தாழ்ந்த தொழிலைச் செய்து, இருமையையும் கெடுத்துக்கொள்ள மாட்டார்கள்.

துரியோதனன் பாண்டவர்களைப் பகைத்தது பார் முழுவதும் தெரியும். திருதராஷ்டிர மன்னவன் தேரோட்டியான இராதன் என்பவனுக்குக் கங்கையாற்றில் ஒரு ஆண் குழந்தை கிடைத்தது. இராதன் அந்தக் குழந்தைக்குக் கர்ணன் என்று பெயரிட்டுக், கல்வி கற்பித்து வந்தான். அந்தக் கர்ணன் விற்போரில் வல்லமை பெற்றவன். துச்சாதனன் முதலானவர்கள் அஸ்திரக் கல்வியை ஆவல் கொண்டு கல்லாததாலும், பாண்டவர் அந்தக கல்வியில் அதிக தேர்ச்சியைக் காட்டுவதாலும், அவர்களைப் பகைப்பதற்கு அத்தன்மையான வொருவன் தனக்கு அவசியம் வேண்டும் என்று கருதி, அரவ கேதனன் கர்ணனை நண்பனுக்கிக் கொண்டான். 'கர்ணன் எந்தக் குலத்தினன்? அவனைப் பெற்றவர் யாவர்? அவன் இராதனுக்கு எப்படிக் கிடைத்தான்? நாம் அவனிடத்தில் அன்பு வைக்க லாகுமா?' என்ற இவை போன்றவற்றை அரவ முயர்த்தவன் ஆலோசிக்க வில்லை. அஸ்திரப் பயிற்சியின் சார்பாகக் கர்ணன் அடைந்த சாபமும் அவன் கருத்திற் பட வில்லை. கர்ணனை அன்புடன் நேசித்து அரசாட்சியிலும் அவனுக்கு அதிகாரம் கொடுத்து வந்தான்.

பின்னர்ப் பாந்தள் கொடியோன் பகை களைவதற்கு இன் சொற் சொல்லல் வேறுபடுத்தல் கொடுத்தல் என்ற மூன்று உபாயங்களையும் கொள்ளாமல், பலத்தினுல் ஒறுத்தலையே நடத்த உறுதி செய்துகொண்டான். அதன் பொருட்டு இந்தியாவில் இருந்த எல்லா வீரர்களும் துரியோதனனுக்கும் பாண்டவர்களுக்குமாகத் துணை கூடினர்கள். சூரர்களும் சமரில் சிறப்புற்ற வர்களுமான வீடுமர் துரோணர் கிருபர் அசுவத்தாமா என்ற நால்வரும் துரியோதனனுக்குத் துணை நின்றார்கள். ஆனல், துரியோதனன் மாத்திரம் அவர்களிடத்தில் அன்பு கொள்ள வில்லை. அவர்களில் பரித்தாமா வென்பவர் போராற்றல் பொருந்தியவர்; அதனுடன் இறவாத

வரமும் பெற்றவர் ; அவர் "துரியோதனா ! பாண்டவர் பெரிய சூரர்கள் ; தருமம் தவறாதவர்கள் ; கடவுள் கருணையைக் கைக் கொண்டவர்கள் ; நீ அப்படிப்பட்டவர்களைக் கர்ணனைக் கொண்டு வெல்ல விருக்கின்றனை ; கர்ணனும் கிரீடியும் இதற்கு முன்னர் இரண்டு மூன்று தடவைகளில் எதிர்த்து நின்று பெரும்போர் புரிந்திருக்கிறார்கள் ; அவற்றில் ஒரு தடவையிலாவது கர்ணன் வெற்றி பெறவில்லை. இனி யேனும் என் வார்த்தையை இயைந்து கேட்டு நட ; முதலில் என்னைப் படைத்தலைவனாக்கு ; நான் பாண்டவர்களை வென்று வாகை சூடிவருகிறேன்; அங்ஙனம் செய்யத்தவறின், நான் ஆசாரிய புத்திரன் ஆக மாட்டேன்" என்று சபதம் செய்து சொன்னார்.

அரவ கேதனன் "ஐயா ! கர்ணன் எனக்கு உயிர் நண்பன் ; அவன் என் பகைவரை வென்று வாகை சூடுவான் ; படைத்தலைவனாவதற்குப் பலர் இருந்து வருகிறார்கள் ; அந்தப் பெரும் பதவியைத் தங்களுக்குத் தர முடியாது ; தாங்கள் உடனிருந்து மாத்திரம் உதவி செய்யுங்கள் ; அதுவே எனக்குப் போதுமானது" என்று சொல்லி விட்டான். அந்தோ ! என்ன அறியாமை ! அவன் கர்ணனை உண்மையில் உணரவே யில்லை ; பார்த்தனை யன்றிப் பிறரைத் தாக்குவதில்லை என்றும், ஒருமுறை தொடுத்த கணையை மறுமுறை தொடுப்பதில்லை என்றும், கர்ணன் குந்திக்கு உறுதி கூறி யிருக்கிறான். அரவ கேதனன் கர்ணன் மடியுந்தனையும் அங்ஙனமே எண்ணியிருந்து, முடிவில் தானும் மரண மடைந்து போனான். ஆதலால், உயர்வடைய விரும்புகின்றவர்கள் தெளிந்தவரிடத்தில் சந்தேகத்தையும், தெளியாதவரிடத்தில் நம்பிக்கையையும் கொள்ளமாட்டார்கள். —மகாபாரதம்.

**தேரான் றெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்**
**தீரா விடும்பை தரும்.**

## 52—தெரிந்து வினையாடல் :—விசுவரூபன்

தன்னால் தெளியப்பட்டவர்கள் செய்யக்கூடிய தொழில்கள் இவை இவை என்று அறிந்து, அவற்றைச் செய்ய விட்டு, அவர்களை ஆளும் திறமைக்குத் தெரிந்து வினையாடல் என்று பெயர். அரசன் தொழில் அகம் புறம் என்று இரண்டு வகைப்படும். ஆளுகையைப் பெருக்கி அதனை நிறுத்தும் தன்மை யுள்ள தொழில் அகத் தொழில். வரி வசூலித்தல் தண்டித்தல் போல்வன புறத் தொழில். தூது சண்டை போல்வன பொது.

அரசன் ஒருவனுக்கு அகத் தொழிலை அளிக்க விரும்பினால், முதலில் பொது வினையைக் கொடுத்துப், பின்னர்ப் படிப் படியாக வுயர்த்தி வரவேண்டும். அரசனிடத்தில் அன்பும், அரசனுக்கு ஆவனவற்றை அறியும் அறிவும், அவற்றைச் செய்து முடிப்பதில் தெளிவும், அவற்றால் பொருள் பெருகின பொழுதும் அந்தப் பொருளின் மீது ஆசை யின்மையு மாகிய நான்கு குணங்களும் நன்றாய்ப் பொருந்தி யுள்ளவனிடத்தில் தான் அகத் தொழிலை விடவேண்டும். செய்யும் உபாயங்களைத் தெரிந்து, அவற்றைச் செய்யும்பொழுது உண்டாகின்ற துன்பங்களைப் பொறுத்துத் தொழில் முடிப்பவ னிடத்தி லல்லாமல், தன்னிடத்தில் பேரன்புடையவன் என்று ஒருவனிடத்தில் உயர்ந்த தொழில்களை ஒப்புவிக்க லாகாது.

ஒப்புவிக்கும் பொழுதும் செய் தொழிலின் அருமையையும், செய்பவன் திறத்தையும், செய்தற்காகிய காலத்தையும், சீர் தூக்கி யறிந்து ஒப்புவிக்கவேண்டும். 'இவன் இவ் வகை வலியினால் இந்தக் காரியத்தை முடிப்பான் என்று தெரிந்து, அந்தக் காரியத்தை அவன்பால் விடுவது முறை. ஒருவனை முறைப்படி தெரிந்து வினையை ஒப்புவித்த பிற்பாடு,

அவனிடம் ஐயம் கொள்ளக் கூடாது. கொண்டால், காரியம் கெடுவதோடு செல்வமும் தொலைந்துபோய்விடும். சில சமயங் களில் பல வகையாலும் தெளிந்து, வினையை ஒப்புவித்த பிற் பாடும் கூடத் தொழில் முடிக்கச் சென்றவன் பதவியும் அதி காரமும் பொருளும் பெற்ற பின்னர், மனம் வேறுபட்டு அற்பத் தனத்துக்கு அடிமையாகி அல்லல் இழைப்பதும் உண்டு. அப்படிப்பட்டவனை அரசன் தனது பேரறிவினால் அறிந்து அடியோடு நீக்கிவிட வேண்டும்.

ஒரு சமயம் இந்திரன் சுவர்க்கத்தில் கொலுக்கொண் டிருந்தான். தேவரும் தெய்வ வகுப்பினரும் சபையில் நிறைந் திருந்தார்கள். திருமாலின் தொடையில் தோன்றின உருப் பசி பரத சாஸ்திரத்தில் தனக்குள்ள சாமர்த்தியம் விளங்கச் சாதுரியமாக நடனம் பண்ணத் தொடங்கினாள். சித்திராங்க தன் முதலான கந்தருவத் தலைவர்கள் துணைக் கருவிகளைக் கொண்டு, அவள் நடனத்தை அழகு படுத்தினார்கள். அந்தச் சமயத்தில் பிருஹஸ்பதி வந்து சேர்ந்தார். ஆட்டத்தில் கருத்தா யிருந்தபடியினால், அவர் வரவை ஒருவரும் அறிய வில்லை. அவர் தேவகுரு. சபையின் அங்கத்தினர். நவக்கிரகங் களில் ஒருவர். அவ்வளவு பெருமை பொருந்தியவர் வலுவில் வந்தும்கூட ஒருவரும் கவனியாத படியினால், இனி அங்கு நிற்பது ஒழுங்கல்ல வென்று உடனே மறைந்து போய் விட்டார்.

ஆட்டக் கச்சேரி முடிந்த பிற்பாடு, அமரர் தலைவன் அரசியல் சம்பந்தமாகக் குருவைக் காணும் பொருட்டு அவர் அரண்மனைக்குச் சென்றான். அங்குக் குருவைக் காண வில்லை. அமரர்களைக் கொண்டு தேடினான். அதுவும் பயன் தர வில்லை. அப்புறம், சத்திய வுலகம் சென்று சதுர்முகக் கடவுளிடத்தில் செய்தியைத் தெரிவித்துக் கொண்டான். பிதாமகர் "சதமகனே! உருப்பசியின் நடன காலத்தில்

வியாழ பகவான் வலுவில் வந்திருந்தும், அனைவரும் அநாதரவு செய்து விட்டீர்கள்; அவர் அதன் காரணமாக மனம் வேறுபட்டு மறைந்து போயிருக்கிறார்; அவர் இருக்கும் இடத்தை உன்னால் அறிய முடியாது; ஒருகால் அறிந்தாலும் கூட அவர் இப்பொழுது திரும்பி வர விரும்பார்; அவர் மனவமைதி பெற்றுத் தாமாகவே வந்து சேருவார்; அவர்க்குச் சரியானவர் இராமற் போனாலும், துவஷ்டாவின் புத்திரனை விசுவரூபன் என்பவனை நீ அது வரையில் குருவாய்க் கொண்டிரு; அவன் எல்லாக் கலைகளையும் எழுத்தெண்ணிப் படித்தவன்; குலத்தில் பெரியவன்; குணத்திற் சிறந்தவன்; அறிவில் மிகுந்தவன்" என்று கூறினார். விண்ணவர்க் கரசன் விடை பெற்றுக்கொண்டு, விசுவரூபனைக் கண்டு வணங்கி, அமரர்களையும் தன்னையும் குரு பீடத்தில் அமர்ந்து அநுக்கிரகிக்கும்படி வேண்டினான். 'வளம் பெற வேண்டாதார் யார்?' யாரும் இல்லை யல்லவா! விசுவரூபன் அவ்வேண்டுகோளை அங்கீகரித்து, அமராவதி வந்து சேர்ந்தான். அப்புறம், தெய்வ சபையின் தொழில்கள் செம்மையாய் நடந்துவரத் தொடங்கின.

சிலகாலம் சென்ற பிற்பாடு, விபுதர் தலைவன் மேன்மை தரும் வேள்வி யொன்றை விரைந்து செய்ய விரும்பினான். அது தேவர்களின் செல்வத்தைச் சிறக்க வளர்ப்ப தாகும். விசுவரூபன் முன்னின்று வேள்வியை நடத்தி வரத்தொடங்கினான். அப்போது அசுரர்களிற் சிலர் அவனை மறைவில் வந்து கண்டு " அந்தணர் பெரும! தமக்கு அசுரர்கள் பரம்பரைச் சீடர்கள்; இப்போதுங்கூடத் தமது பாட்டனார் பார்க்கவர் தாம் அந்தப் பீடத்தில் பொலிவு பெற்று விளங்குகின்றனர்; அந்தப் பீடம் தமக்குப் பிதிர் தனம்; அசுரர்கள் செய்த அதிருஷ்டத்தினால் தாங்கள் இப்போது பிருஹஸ்பதியின் பீடத்தில் பொலிந்து விளங்குகின்றீர்கள்; இந்தப் பீடம் தங்களுக்கு உரிமையான

தன்று; வியாழ பகவான் வந்து சேர்ந்ததும் தாங்கள் விலகிப் போகவேண்டும்; அமரர்களை ஆக்கவும் அழிக்கவும் இப்பொழுது தங்களுக்குச் சுவதந்தரம் உண்டு; சமயத்தைச் சோரவிடாமல், பரம்பரை அடிமைகளான எங்களுக்கு ஒரு விதமான ஆதிக்கத்தை அளிக்கப் பாருங்கள்" என்று சொல்லி வணங்கினார்கள். விசுவரூபன் 'நல்லது போய் வாருங்கள்' என்று சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டான்.

எல்லாத் தேவர்களும் எல்லா முனிவர்களுமாக இருந்து செய்கின்ற அந்தப் பெரு வேள்வி பெரும்பாலும் முற்றுப் பெற்று விட்டது. விசுவரூபன் பூர்ணாஹுதிக்கு வேண்டிய பொருள்களைக் கையில் கொண்டு கிழக்கு நோக்கி நின்றான். விபுதர்களின் பெருமையை வளர்க்கின்ற மகா மந்திரத்தை முனி புங்கவர்கள் ஒரே குரலில் உரத்துச் சொல்ல லானார்கள். விசுவரூபன் அவர்களுடன் தானும் சேர்ந்து சொல்லாமல், அசுரர்களின் ஆதிக்கத்தை வளர்ப்பதான வேறொரு மந்திரத்தை வாய்க்குள்ளேயே மெதுவாக முணுமுணுக்கத் தொடங்கினான். சபையில் உள்ளவர்களுக்கு அவன் சூது தெரிய வில்லை. பாதிக்கு மேலும் மந்திரத்தைப் படித்தான பிற்பாடு, மாறுபாடான மந்திரத்தை முணுமுணுக்கிறான் என்று, இந்திரனுக்கு மாத்திரம் எப்படியோ தெரிந்து போயிற்று. தான் வருந்திச் செய்யும் வேள்வி தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் சிறிதும் பலன் தராமல், தன் பகைவர்களுக்கு முழுப் பலனையும் தரப்போகின்றதென்றால், சதமகனுக்குச் சம்மதமா யிருக்குமா? அதனால், விபுதர் தலைவன் கோபம் கொண்டு, வஜ்ரா யுதத்தினால் விசுவரூபன் சிரத்தை வெட்டித் தள்ளி விட்டான். நான்முகக் கடவுள் யோக்கியன் என்று சொல்லியும், தான் அழைத்து வந்த பிற்பாடு, பலதடவை பரிக்ஷித்தும், விசுவரூபன் மேன்மை பெற வில்லை. தனது அற்பத் தனத்தினால் அகால மரணத்தை

அடைந்து தொலைந்துபோனான். ஆதலால், எத்தனை வகையில் பரிக்ஷிக்கப் பட்டாலும், சவுகரியமும் சமயமும் கைகூடின பொழுது சிலர் தங்கள் இயற்கையை வெளிப்படுத்தி விடுவார்கள். —திருவிளையாடற் புராணம்.

எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்
வேறுதம் மாந்தர் பலர்.

## 53—சுற்றம் தழாஅல்:—விதுரர்

சுற்றம் தழுவல் என்பது கிளைஞரைத் தன்னைவிட்டு நீங்காமல் அணைத்துக் கொள்ளுதலாம். சுற்றி யிருப்பவர் சுற்றம். சுற்றம்—தொழி லாகுபெயர். தழா அல்—தழுவுதல். ஒருவன் செல்வம் தொலைந்து வறுமை யுற்ற காலத்திலும், தண்ணீர் சிறக்கச் சிறந்தும் அது சுருங்கச் சுருங்கியும் வளர்கின்ற தாமரை அல்லி முதலான நீர்ப்பூக்கள் போல, நீங்காமல் இருந்து உதவி செய்துவருவது சுற்றத்தாருக்குச் சிறந்த குண மாகும். ஒருவன் வறிஞனை பொழுதும் அவனிடத்தில் அன்பு நீங்காமல் அமர்ந்திருக்கின்ற சுற்றம் அவனுக்கு வளர்தலை யுடைய பலவகைச் செல்வங்களையும் பெருக்கித் தரும். ஒருவன் செல்வம் பெற்றதற்குப் பலன் தன் சுற்றத்தாரைத் தழுவி வாழ்தலே யாகும்.

சுற்றத்தாரோடு கலவாதவன் வாழ்வு கரை யில்லாத குளம் நீர் நிறைவது போலத், தாங்குவார் இல்லாத் தன்மையினால் அழியும் தன்மை பெறும். இன்சொல் சொல்லுதலும், வேண்டுவன நல்குதலும், வெகுளி யின்மையும், சுற்றம் வளர்க்கும் கருவிக ளாகும். ஒருவன் எல்லாச் சுற்றத்தாரையும் ஒரு தன்மையாகக் கருதிவிடக் கூடாது. அவரவர் தகுதிக்குத் தக்கபடி உறவு கொண்டாடி, உவக்கச் செய்யவேண்

டும். அங்ஙனம் செய்யாமற் போனால், பெருந்தன்மையும் மானமும் உள்ளவர்கள் 'மரியாதை தெரியாதவன்' என்று வெறுத்து, அவனை விட்டு விலகுவார்கள். காகங்கள் உணவை மறைந்து உண்ணாமல் இனத்துடன் உண்டு, இனிது வாழ்கின்றன வல்லவா!

உள்ளன்பு கொண்ட சுற்றத்தார் தீநெறி யொழுகுதல் வெறுப்பன செய்தல் முதலான குற்றங்களைக் கண்டபொழுது அவனை விட்டு விலகிச் செல்வார்கள். அந்தக் குற்றத்தை அகற்றினால், அவர்கள் வலிய வந்து உறவு கொண்டாடுவதில் ஐயப்பா டில்லை. அப்படிப்பட்டவர்களை அறிந்து, அவர்களுக்கு ஆவனவற்றைச் செய்து, தழுவிக் கொள்ளவேண்டும். அன்பு நீங்காத சுற்றத்தைக் காட்டிலும் ஒருவனுக்குப் பொருள் முதலானவை பலன் தரமாட்டா.

முன்னாப பாண்டவா தம கலவப பருவதததுல வீடும ரிடத்திலும் கிருபர் துரோணர்களிடத்திலும் படைக்கலம் பயின்று வந்தார்கள். அறிவின்மையாலும் ஊழ்வினையாலும் அரவ கேதனன் அவர்களைப் பகைஞர் என்று தீர்மானித்து, அன்னத்தில் விஷத்தைக் கலந்தும், கங்கையில் கழுக்களை நிறைத்தும், உபாயத்தினால் கொல்ல முயன்றான். பாண்டவர்களுக்கு அவற்றால் நாசம் நேர வில்லை. அவர்கள் நாள்தோறும் நல்லொழுக்கத்திலும் கல்வித்தேர்ச்சியிலும் நிகரற்று விளங்கி வந்தார்கள். அவற்றைக் காணுந்தோறும் காணுந்தோறும் அரவ கேதனனுக்குப் பொறாமையும் பகையும் பெருகி. வளர்ந்து வந்தன. அவன் குந்தி மக்களைக் கொன்றாலல்லாமல், தனக்கும் தன் சகோதரர்களுக்கும் சவுக்கியம் விளையா தென்று சிந்தையில் கொண்டுவிட்டான். பின்னர்ப் பிடிவாதத்தினால் மெள்ள மெள்ளத் தந்தையையும் தன் கருத்துக்கு இணக்குவித்துக் கொண்டான்.

அப்புறம், பாண்டவரும் தாயும் வாரணாவதம் என்ற பட்டணத்துக்கு வாசம் செய்யப் போனார்கள். வீடுமர் முதலானவர்கள் திருதராஷ்டிரன் பாண்டவரிடத்தில் பாராட்டி வருகின்ற பக்ஷத்தைப் பொய்ந் நடிப்பென்று புலத்திற் கொள்ள வில்லை. ஆனால், விதுரர் மாத்திரம் அதனை அரிதில் உணர்ந்து கொண்டுவிட்டார். அவர் தமமிடம் விடைபெற வந்த பாண்டவர்களுக்குப் "புத்திரர்களே! எல்லாம் தெரிந்த வுங்களுக்கு ஒன்றும் உரைக்க வேண்டிய தில்லை; ஆயினும் புத்திரர் பெருக்கத்தை விரும்பிப் புத்திரர்களைப் பெற்றவர் புத்தி புகலாமலும் இரார்; புதிய வேலைக்கார ரிடத்தில் எப்பொழுதும் நம்பிக்கை வைக்கக் கூடாது; நம்மைப் பாதுகாப்பதற்குப் பிறர் எப்பொழுதும் பயன் பட மாட்டார்கள்; தன் கையே தனக்கு உதவி; மனிதன் ஒவ்வொரு பிராணியையும் கவனித்து உத்தமமான விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும்; மிகவும அற்பப் பிராணியான எலியைப் பாருங்கள்! அது நிலத்தில் வளை கெல்லிக்கொண்டு நடுக்கில்லாமல் வாழ்ந்து வருகின்றது; உங்களுக்குத் துணை வருகின்ற புரோசன னிடத்தில் எப்பொழுதும எச்சரிக்கை கொண்டிருங்கள்" என்று சொல்லி யனுபபினார்.

பாண்டவர்கள் வாரணாவதம சென்ற பிற்பாடு, புரோசனன் அரசர் கட்டளை யென்று, அவர்களுக்குப் புதிய அரண்மனை ஒன்றைப் புதுக்கினான். சிற்பிகளும் சிறந்த வேலைக்காரர்களும் சிறிதும் இளைப்பாறாமல், முயன்று முடித்த அவ்வரண்மனை அனைவரும் கண்டு ஆச்சரிய மடையும்படி அற்புதமாக அமைந்து விளங்கிற்று. ஆனால், அந்தப் புது மாளிகை உலகத்து அரண்மனைகளைப் போல அமைந்திராமல், அரக்கு மெழுகு குங்கிலியம் முதலான அற்பப் பொருள்களைக் கொண்டு அமைந் திருந்தது. பாண்டவர்களும் தாயும் ஒரு நல்ல முகூர்த்தத்தில் அதில் குடி புகுந்தார்கள். விதுரர்

சிற்பிகளில் ஒருவனை வசம் செய்துகொண்டு, அம்மாளிகை நெருப்புக்கு உணவாகுமானல், பாண்டவர்கள் அபாயம் அடையாமல் அகன்று செல்லும்பொருட்டுச் சுரங்கம் ஒன்று கெல்லுவித்து, அதன் விவரத்தைப் பீமசேனனுக்கு மாத்திரம் புலப்படப் பண்ணி யிருந்தார்.

பீமசேனன் விதுரர் செய்யாமற் செய்த உதவிக்குச் சிந்தை மகிழ்ந்து, மாசுணக் கொடியோன் மகிழ்ந்து குறித்திருந்த முகூர்த்தத்தில் அந்த மாளிகைக்கு முன்னல் நெருப்பிட்டு விட்டுத், தாயையும் சகோதரர்களையும் சுமந்து கொண்டு சுரங்கத்திற் புகுந்து, கங்கைக் கரையை அடைந்தான். அந்த நடு நிசியில் ஆற்றைக் கடந்து செல்வதற்கு விதுரர் கட்டளையின் மீது விநோதமான படவு ஒன்று வந்திருந்தது. அந்த ஒப்பற்ற வீரர் ஐவரும் ஆற்றையும் ஆபத்தையும் தாயுடன் அநாயாசமாய்க் கடந்து அக்கரை சேர்ந்தார்கள். விதுரர் உதவி செய்திராவிட்டால், அரக்கு மாளிகையிலிருந்து ஐவரும் அகன்று செல்ல முடியா தல்லவா! ஆதலால், உண்மையான சுற்றத்தார் ஒருவனுக்கு உற்றவிடத்தில் ஊன்றுகோல் போல உதவி செய்வார்கள். —மகாபாரதம்.

விருப்பறாச் சுற்ற மியையின், அருப்பறா
வாக்கம் பலவும் தரும்.

## 54—பொச்சாவாமை :—வாலி

பொச்சாவாமை என்பது அரசரும் அரசர் போன்றவர்களும் அழகு செல்வம் ஆற்றல் முதலானவற்றில் மகிழ்ந்து தங்களைக் காத்துக் கொள்வதிலும், பகை வெல்லல் முதலான காரியங்களிலும், சோர்தலைச் செய்யாமையாகும். பொச்சாப்பு—மறதி. பொச்சாவாமை—எதிர்மறைத்

தொழிற் பெயர். பெரியவர் ஒருவனுக்கு உண்டாகின்ற அளவு கடந்த வெகுளியைக் காட்டிலும், அளவு கடந்த மகிழ்ச்சி கேட்டைத் தரும் என்று கூறுவர். ஏனென்றால், அளவு கடந்த வெகுளி சில சமயங்களில் பகைவர்களையும் கொடியவர்களையும் கூடக் கொல்லுதலைச் செய்யும். பெருஞ் செல்வம் பேரின்பம் பெருமிதம் என்றவற்றால் உண்டாகின்ற மறதி தன்னை உடையவனையே கொன்று ஓடிப் போய்விடும்.

ஒருவன் போறிவைத் தரித்திரம் கெடுத்துவிடுவது போலப் பெரும் புகழை மறதி மடியச் செய்துவிடும். மறதியுள்ளவன் நன்மைக்குக் காரணமான புகழைப் பெறுவதில்லை. அரசர்க்கும் அரசர் போன்றவர்களுக்கும் மறதி பெருஞ் சத்துரு. ஒருவன் செல்வத்தில் சிறந்து வாழும்பொழுதும், அன்றி, அதனில் சுருங்கித் தாழும் பொழுதும், மறவாமையை மறக்க லாகாது. மறவாமை எல்லாப் பெருமைகளையும் ஒருவனுக்கு எளிதில் எய்துவிக்கும். அரசர்க்கு இன்றியமையாதனவாகிய அறிவு ஆண்மை பெருமை என்ற மூவகை ஆற்றலும், இன்சொற் சொல்லல் வேறுபடுத்தல் கொடுத்தல் ஒறுத்தல் என்ற நால்வகை உபாயங்களும், பகைவன்மேற் செல்லல் அவன் மதிலை முற்றுகை செய்தல் அவன் நாட்டைக் கொள்ளல் அவனோடு பொருதல் அவனை வெல்லல் என்ற ஐவகைத் தொழில்களும், பகைவனை நட்பாக்கிக் கொள்ளல் அவன் துணையை அவனுக்கு உதவ வொட்டாமல் கெடுத்தல் அவன் மேற் செல்லல் அவன் மதிற் புறத்துத் தங்கல் பொருளினால் அவன் படைகளைப் பிரித்தல் அவர்களைத் தனக்குத் துணை கூட்டிக்கொள்ளல் என்ற அறுவகைக் குணங்களும் அமைந்துள்ள விடத்திலும், மறதியைக் கொள்ளக் கூடாது. கொள்ளின், மேற் சொல்லியவை சிறிதும் பயன் படாமற் போகும். சதுரர்கள் அதிக மகிழ்ச்சியில் அமிழ்ந்தி

யிருக்கும் பொழுதுகூட மறதியினால் கெட்ட முற்காலத்து மன்னவர்களை மனத்தில் நினைத்துக் கொள்ளவேண்டும். அங்ஙனம் நினைக்கின்றவர்களுக்கு மறதியின் காரணமான குற்றம் வந்து வருத்த மாட்டாது.

முன்னர் வாலி சுக்கிரீவனைப் பகைத்து, அவனோடு சண்டை செய்தான் என்று படித் திருக்கிறீர்கள். அவ்விருவரும் ஒப்புயர்வற்ற வீரர்கள். தங்கள் தோள்வலியை அல்லாமல் துணைவலியைச் சிறிதும் விரும்பாதவர்கள். ஆயினும், வாலிக்கு வரத்தின்பலம் அதிகமா யிருந்தது. அஃது எப்படி யென்றால், முன்னொரு சமயத்தில் அமரரும் அசுரரும் சேர்ந்து, அமிர்தத்தின் பொருட்டு அலைகடலைக் கடைந்தார்கள். அப்பொழுது, மத்தாக விருந்த மந்தர மலை வேலையில் அமிழத் தொடங்கிற்று. கயிற்றைப் பற்றிக் கடைந்து, மேல் மட்டத்தில் மத்தைக் கொணர்ந்து நிறுத்துவதற்கு முடியாமல், அவர்கள் அனைவரும் அல்லலுற்று வருந்தினார்கள். அச்சமயத்தில் அங்குத் தற்செயலாகச் சென்றிருந்த வாலி அவர்கள் பரிதாப நிலைமையை உணர்ந்து, தானும் தன் சகோதரனுமாகப் பாம்புக் கயிற்றைப் பற்றிக்கொண்டு கடைந்து, மலையை மேலெழப் பண்ணிக், கடலையும் நுரை கொள்ளச் செய்தான். இந்திரன் அவன் உதவியை மதித்துத், தன் கழுத்தில் இருந்ததும் வரத்தில் உயர்ந்ததுமான காஞ்சனம் என்ற மாலையைக் கழற்றி, வாலிக்கு வெகுமதி யளித்து விடைகொடுத் தனுப்பினான். மாலையின் பெருமை சமர் முகத்தில் எதிர்த்துச் சண்டை செய்ய நின்றவர் பலத்தில் சரி பாதியைப் பகிர்ந்து, தன்னை உடையவனுக்கு உரிமை யாக்குவிக்கும். அதன் சிறப்பினாற்றான் சுக்கிரீவன் தோல்வி யுற்று, ரிஸ்யமூகம் என்ற மலையில் வந்து ஒளிந்தான். வாலி அந்த மலைக்கு வர முடியாத படியினால் பற்களைக் கடித்துக் கோபித்துக் கொண்டு 'பயலே! எங்குத் தப்பினாய்? குடல் அறுந்த நரி;

வெளியில் வந்ததும் வேரறுத்து விடுகிறேன்' என்று, சொல்லிச் சென்று விட்டான்.

அரண்மனையில் நுழைந்த பிற்பாடு, அவன் சுக்கிரீவனை மறந்து, தாரை முதலான மனைவிமார்களோடு பூ விளையாட்டு புனல் விளையாட்டு முதலானவற்றில் மகிழ்ந்து, மனம் களித்திருந்தான். சுக்கிரீவனோ வாலியை வெல்ல வகை தெரியாமல் விழித்து, வருந்திக் கொண்டிருந்தான். அவன் நற்காலத்தின் அறிகுறியாக ராம லக்ஷ்மணர் இருவரும் சீதையைத் தேடிக்கொண்டு ரிஸ்யமூகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். சுக்கிரீவன் இராமர் துணையால் வாலியை வெல்லக் கருதினான். அது வாலிக்குத் தெரியாமலும் இருக்க வில்லை. சுக்கிரீவன் இராமரோடு நட்புப் பூண்டான் என்றும், அவர் உங்களை வெல்ல விருக்கிறார் என்றும், தாரை வாலிக்குக் கூறினாள்.

வாலி களிப்பின் மிகுதியினால் அச்சொற்களைப் பொருள் பண்ணாமல் "நாயகி! என்னைக் கொல்ல வல்லவன் இவ்வுலகத்தில் இல்லை; ஏனென்றால், காஞ்சன மாலை எதிர்க்கின்றவர் பலத்தில் எனக்குப் பாதியைச் சரியாய்ப் பங்கிட்டுத் தருகின்றது; குறைந்த பலத்தினால் நான் கொல்லத் தக்கவனல்லன்; மாலையின் மகிமையினால் சுக்கிரீவன் வல்லமை ஏற்கெனவே குறைந்து போய்க் கிடக்கின்றது; இனி, அவன் எனக்கு ஒரு வாழைப்பழமேதான்; அவன் எவனையாவது நட்புச் செய்து கொள்ளட்டும்; நீ அதன் பொருட்டுக் கவலை கொள்ள வேண்டாம்; சந்தோஷமா யிரு" என்று சொல்லிச், சுகத்தில் அமிழ்ந்தி யிருந்தான். பிற்பாடு வாலி, அந்த அலக்ஷ்ய புத்தியினாலேயே சுக்கிரீவனோடு சண்டை செய்து, இராமன் அம்பினால் கேடடைந்து போனான். அவன் பெருஞ் செல்வம் பேரின்பம் பெருமிதம் என்றவற்றில் அமிழ்ந்திக் களிப்படையா திருந்தால், அங்ஙனம் இறந்திருக்க வேண்டாம் அல்லவா!

ஆதலால், எவரும் பகைவரை எளியவர் என்று கருதி வெல் வதில் சோர் வடைய லாகாது.

—இராமாயணம்.

இறந்த வெகுளியிற் றீதே ; சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

## 55—செங்கோன்மை :—சகரன்

செங்கோன்மை என்பது அரசனால் செய்யப்படுகின்ற முறையின் தன்மையாம். ஒருபக்கத்தில் வளைந்து போகாமல் நேர்நிற்கும் கோல் போன்ற நீதிக்குச் செங்கோல் என்பது ஆகுபெயர். உயிர்கள் மழை வரவில் மகிழ்ச்சி கூர்வதுபோலக், குடிகள் கொற்றவன் செங்கோல் செய்வதில் களிப் படைவார்கள். தன்கீழ் வாழ்கின்றவர்கள் உயிரினும் சிறந்திருந்தாலும், அவர்கள் குற்றம் செய்த பொழுது அந்தக் குற்றத்துக்குச் சொல்லிய தண்டனையை அளவில் சுருக்காமற் செய்வதுதான் செங்கோலின் முறை யாகும். நடுவுநிலைமை தவறாமல் நீதி செலுத்துகின்ற அரசனுடைய நாட்டில் வானும் நிலனும் சோத் தொழில் பட்டுப், பருவ மழையும் குன்றா விளைவும் கொழித்துச் செழித்து வரும்.

வேதமும் அதிற் சொல்லும் அறங்களும் தங்கள் வளர்ச் சிக்குச் செங்கோலைத் துணை கொண்டிருக்கின்றன. நல்ல வரசனுக்கு வெற்றி தருவது அவன் பகைவர் முகம் பிளக்க வெறிகின்ற வேலாயுதம் அன்று. செலுத்தும் செங்கோலே யாகும். உலகத்தை அரசனும் அரசனை நீதியும் காத்து வரு வதனால், ஒரு நல்ல வரசன் முறை வேண்டினவர்களுக்கும் குறை வேண்டினவர்களுக்கும் எளிதில் காட்சி யளித்து, அவர் கள் சொல்வனவற்றைப் பொறுமை கொண்டு கேட்டு நீதி நடத்த வேண்டும்.

தன் கீழ்க் குடிகளைப் பிறர் வருத்தாமல் காத்தும், அவர்கள் பொருள் முதலியவற்றால் தளர்வு பட்ட பொழுது வேண்டுவன கொடுத்தும் ஆதரிப்பது, அரச நீதியின் முறை. ஆனால், அவற்றுடன் அரசன் தொழில் அடங்கிப் போக வில்லை. அவர்களைக் குற்றம் செய்ய விடாமலும், ஒரோவழிக் குற்றம் செய்யக் கண்டால், துன்பம் செய்தல் பொருள் கொள்ளல் உயிர் கொல்லல் என்கிற மூவகைத் தண்டனைகளில் அவர் செய்த குற்றத்துக்குத் தக்கவாறு தண்டித்தும், காத்துவர வேண்டும். அன்பும் ஆதரவும் உள்ள குடிகளைத் தண்டிப்பது அற வொழுங்கே யாகும். *நெருப்பு வைப்போர், நஞ்சிடுவோர், பொருள் பறிப்போர், பிறனில் விழைவோர், பொய் சொல்வோர் என்ற இவர்களைக் கண்டு பிடித்துத் தண்டியாமல் இருந்தால், இவர்கள் நாட்டில் உள்ள நல்ல குடிகளுக்கு நடுக்கத்தை விளைத்து, அறத்தையும் அமைதியையும் அறை வடிப்பார்கள். ஆதலால், நல்ல வரசன் தன் நன்மையையும், உலக நன்மையையும் நாடி நீதி செய்து வர வேண்டும்.

முன்னர்ச் சூரிய குலத்தில் சகர மன்னவனுக்குக் கேசினி சுமதி என்று இரண்டு மனைவிகள் இருந்தார்கள். அவர்களில் கேசினியின் வயிற்றில் அஸமஞ்சன் என்பவனும், சுமதியின் வயிற்றில் சகரர் என்ற அறுபதி னாயிரம் பிள்ளைகளும் பிறந்தார்கள். வயது வந்த பிற்பாடு, எல்லாப் பிள்ளைகளும் கல்வி கற்றுப் பலத்திலும் பராக்கிரமத்திலும் நிகரற்று விளங்கினார்கள். அஸமஞ்ச னிடத்தில் ஒருவகைத் தீக்குணம் இருந்து வந்தது. அவன் காலையிலும் மாலையிலும் சரயு வாற்றுக்குச் சென்று, அங்கு விளையாடுகின்ற சிறுவர்களைத் தூக்கி வெள்ளத்தில் எறிந்து விடுவான். அந்தச் சிறுவர்கள் புனலில் முழுகியும் கிளம்பியும் பரிதபிப்பது அவனுக்குப் பெரிய

* வடமொழியில் இவர்களுக்கு ஆததாயிகள் என்று பெயர்.

விநோதமா யிருக்கும். வேலையாட்கள் ஆற்றில் முழுகி அவர் களைத் தூக்கி விடுவார்கள்.

அஸமஞ்சனுடைய சகோதரர்கள் அங்கம் பதைத்து "அண்ணா! பிறருக்குத் துன்பையும் துயரையும் தருவது விளையாட் டாகாது; குடிகளின் அன்பைக் கொள்ள வேண் டிய நீங்கள் அவர்கள் பகையையும் வெறுப்பையும் பெற்றுக் கொள்கிறீர்கள்; உங்கள் தீ யொழுக்கத்தைத் தொலைத்துக் கொள்ளா திருந்தால், தந்தையின் நீதிக்குப் பங்கம் உண்டா கும்; உங்களை வேறொருவன் வெள்ளத்தில் எறிந்து விளை யாடுவதில் உங்களுக்கு விருப்பம் உண்டாகுமா? இனியே னும், இந்தக் கெட்ட வழக்கத்தை விட்டுத் தொலையுங்கள்" என்று சொன்னார்கள். அஸமஞ்சன் "சகோதரர்களே! நான் விளையாட்டுக்குச் செய்கின்றேனே யன்றிப், பகை பாராட்டிச் செய்ய வில்லை" என்று சொல்லி, முன்னர்ப் போலவே நடந்துவரத் தொடங்கினன். வேலை யாட்கள் நீந்திச் சென்று தூக்கிக் கொணர்வதற்குள் ஒன்று இரண்டு சிறுவர்கள் வெள் ளத்தில் அமிழ்ந்து இறந்தும் போவார்கள். ஒன்று இரண்டு சிறுவர்களை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டும் போய் விடும். சிறுவரை இழந்தவர் அஸமஞ்சனுடைய அக்கிரமச் செயல்களை அரசனிடத்தில் வந்து முறையிட்டுக் கொண்டார் கள். மன்னவன் மகனைக் கோபித்துக் கொண்டு 'இனி அங் ஙனம் செய்தால், இராஜாங்க வுரிமையை இழந்துபோய் விடு வாய்' என்று எச்சரிக்கை பண்ணினன்.

அஸமஞ்சன் அப்படியும் கேட்க வில்லை. அயோத்திப் பட் டணத்தில் அவன் கொடுமை அன்றாட்டம் அதிகரிக்கத் தொடங் கிற்று. சகர மன்னவன் தன் புத்திரன் பொருட்டுக் குடிகள் படுகின்ற வருத்தத்தைப் பொறுமல், அவனை ஒருநாள் சபை யில் நிற்க வைத்துத் "துஷ்டா! உன் ஒழுக்கம் மிகவும் கொடியது; நீ நர மாமிசம் புசிக்கின்ற அரக்கனுய்ப் பிறக்க

வேண்டும்; உன் விளையாட்டுத் தொழிலால் இரண்டொரு சிறுவர்கள் இறந்தும் போய்விட்டார்கள்; உன் ஒழுக்கத்தைத் திருத்திக் கொள்ளும்படி முன்னொரு தடவை எச்சரித்திருந் தும் நீ திருத்த மடைந்தா யில்லை; உன் மூடத் தனத்தினால் உனக்குச் சொந்தமான சூரிய வம்ச பாரம்பரியமான சிங்கா தன வுரிமையை இன்று முதல் இழந்து போய்விட்டாய்; இனி அயோத்தியை விட்டு, உனக்கு இஷ்டமான வேறொரு இடத் துக்கு விரைந்து போய்விடு; என் குடிகள் உன் தொந்தர வில்லாமல் இனியாவது இன்புற் றிருக்கட்டும்" என்று சொல்லி, அப்பொழுதே வெளியில் துறத்திவிட்டான். மூத்த மகனென்றும் பாராமல், முறை செய்த மன்னவனை ஜனங் கள் வியந்து புகழ்ந்து வீடுபோய்ச் சேர்ந்தார்கள். ஆதலால், அரசன் தமர் பிறர் என்று, தாக்ஷண்யம் பாராமல், நீதியை நடத்தி வரவேண்டும்.

—இராமாயணம்.

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

## 56—கொடுங்கோன்மை :—திரிபுரர்

கொடுங்கோன்மை என்பது அரச நீதி வளைந்து குடிகளுக்குக் கொடுமை செய்யும் தன்மை யாகும். வளைதல் எனவே நீதி யின்மை பெறப்பட்டது. இது செங்கோன்மைக்கு மறுதலை. பகை காரணமாகக் கொலைத் தொழில் கொண்டு ஒழுகுகின்ற ஒரு கொடியவனைக் காட்டி லும், முறை யல்லவற்றைச் செய்யும் மன்னவன் மிகவும் கொடியவ னுவான். வழிப்பறி செய்வோன் நடுக் காட்டில் வேலைக் கையில் கொண்டு, வழியில் செல்வாரை மறித்துப் 'பொருளைத் தந்து போ' என்பதற்கும், தண்டிக்கும் தன்மை

கொண்ட அரசன் குடிகளைப் பொருள் வேண்டும் என்று யாசிப்பதற்கும் வேறுபாடு கிடையாது.

நாட்டில் நடக்கும் தீமைகளை நாள்தோறும் ஆராய்ந்து, முறை செய்யாத மன்னவன் முன்னர்த் தேடிய பொருள்களையும், பின்னர்த் தேடுவதற்குக் கருவியாகிய குடிகளையும், ஒரு மிக்க இழந்து போய்விடுவான். முறையையும் குறையையும் விரும்பி வந்து நின்றவர்கள் அரசனுடைய கொடுங் கோன்மையைக் கண்டு அழுங்குகின்ற கண்ணீர் அவ்வரசனது பெரிய செல்வத்தைக் குறைத்து விடுகின்ற கூரிய ஆயுத மாகும். அரசனுக்கு வெற்றி கொடை முதலான ஏதுக்களினுல் நிலை பெறுகின்ற புகழ், அவன் செங்கோன்மையினுல் உண்டாக வேண்டுமே யல்லாமல், கொடுங்கோன்மையினுல் கொஞ்சமும் உண்டாகக் கூடியதன்று. கொடுங் கோலரசன் நாட்டில் பருவ மழை பெய்யும் காலத்தில் பெய்யாமலும், பெய்யாக் காலத்தில் அளவு கடந்து பொழிந்தும், உயிர்களுக்கு உபத்திரவம் செய்யும். அவ்வுபத்திரவங்களால் பசுக்களுக்குப் பால் வளம் குறையும். அக்குறையால், அந்தணர் வேதங்களையும் நூல்களையும் ஓதுதலையும் கற்றலையும் செய்யாமல், தாழ்ந்த தொழில்களில் தலைப்பட்டு நிற்பார்கள். ஆதலால், அரசன் நாட்டை நல்வழிப் படுத்துவதற்கு நீதியே முதன்மை யென்று நினைந்து, கொடுங் கோன்மையைக் களைந்தெறிய வேண்டும்.

முன்னர்த் தாரகாசுரனுக்கு வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்று மூன்று புத்திரர் பிறந்தார்கள். அவர்கள் வயது வந்த பிற்பாடு, தந்தையின் கட்டளைப்படி சிவ பெருமானை நினைந்து, இமயமலையின் கிழக்குத் திக்கில் உள்ள கிரவுஞ்சா ரணியத்தில் அமர்ந்து தவம் செய்தார்கள். அம்மூவரும் முதலில் தங்கள் பசிக்குக் காய் கனி கிழங்குகளை உண்டு, தவம் நிலைக்க நிலைக்க, அவற்றில் ஒவ்வொன்றாகக் குறைத்துக்

கொண்டு வந்து, முடிவில் தண்ணீரையும் காற்றையுமே உட்கொண்டு கடவுளைத் தியானித்து வந்தார்கள். அவர்கள் தவம் எல்லாத் தேவர்களாலும் எடுத்துச் சொல்லப்பட்டது.

நெடுங்காலம் சென்ற பிற்பாடு, கைலையங் கிரிக்குக் கொற்றவரான கறைமிடற் றண்ணல் வந்து "அசுர சகோதரர்களே! உங்கள் தவம் சித்தி பெற்றது; விருப்பத்தை வெளி யிடுங்கள்" என்று வினவினர். அசுரர்கள் "தலைவரே! எங்கள் மூவர்க்கும் மூன்று பெரிய பட்டணம் படைத்துத் தரல் வேண்டும்; அவை மண் கல் முதலான வற்றால் ஆகாமல், உலோகங்களினால் அமைந்தும், தெய்வ விமானங்கள் போல விண்ணிற் செல்லும் திறமை வாய்ந் தும், சிறந் திருக்கவேண்டும்; திருமால் முதலான தேவர் களினாலும் எங்களுக்குத் தீங்கு நேர லாகாது" என்று சொன்னார்கள். சிவ பெருமான் "தீரர்களே! உங்கள் வரம் உயர்ந்தது; அருந் தவம் செய்த படியினால் அடைந்து விட்டீர் கள்" என்று சொல்லி, அப்பொழுதே மறைந்துபோய் விட்டார்.

பின்னர், அவர்களுக்கு மயன் என்னும் அசுர சிற்பி பொன் வெள்ளி இரும்பு என்ற வுலோகங்களினால் மூன்று பெரிய பட்டணங்களைப் பிஞ்சகன் அருளைக்கொண்டு படைத் துக் கொடுத்தான். அவை உறுதியிலும் அழகிலும் உவமை யற்றிருந்தன. பறக்கும் யந்திரங்களும், பலமான ஆயுதங் களும், அந்த நகரத்தில் சரியான விடங்களில் அமைந்து சிறந் திருந்தன. அசுர சகோதரர் மூவரும் இன்னும் சில அசுர வீரர்களோடு அவற்றில் குடி புகுந்து, அனைவரையும் அடக்கி ஆடம்பரமாக அதிகாரம் செய்து வந்தார்கள். இந்திரன் முதலான இறையவர் பலரும் அவ்வசுரர்களின் வரத்தையும் பலத்தையும் கண்டு, எதிர்க்கச் சக்தி யில்லாமல், தங்கள் தங்கள் பதங்களை விட்டுப் பறந்துபோய் விட்டார்கள்.

அசுர சகோதரர்கள் அவ்வளவில் ஆநந்தம் அடைந்து, தங்கள் நகரங்களை நில வுலகத்திற்குச் செலுத்தி, அழகுள்ள பட்டணங்களின் மீதும், செழிப்புள்ள உத்தியானங்களின் மீதும் இறக்கி, அவற்றை நாசம் செய்து, நெடுங் காலம் வரையில் விரும்பிய சுகங்களை விரும்பிய வண்ணம் அநுபவித்து வந்தார்கள்.

அவர்கள் கொடுமையால் உயிர் வர்க்கங்களுக்கு உபத்திரவம் அதிக மாயின. உலக முழுவதும் 'கொலை கொலை' என்றும், 'நாசம் நாசம்' என்றும், 'ஐயோ ஐயோ' என்றும், கூக்குரல் கிளம்பின. இந்திரன் அவற்றைக் கண்டு மனம் தாளாமல், சிவ பெருமானிடம் சென்று, அசுரர் செய்யும் அக்கிரமங்களைச் சொல்லி 'ஆதரிக்க வேண்டும்' என்று, அடியில் விழுந்து பணிந்தான். கண்ணுதற் கடவுள் தமக்குத் தேவர்களைத் துணை யுறுப்புக்க ளாக்கிக்கொண்டு தேர்மீ தேறி வந்து, அசுர சகோதரர்களை எதிர்த்தார். அந்தக் கொடியவர் மூவரும் கடவுளின் முகத்திற் கிளம்பின முதற் சிரிப்புக்கும் முன்னிற்க முடியாமல், தங்கள் பட்டணங்களோடு ஒருமிக்க வுருகி, உருக் குலைந்து போனார்கள். அவர்கள் அவ்வளவு கொடுமை கொண்டு நடந்திராவிட்டால், அப்படி அழிந்திருக்க வேண்டாம் அல்லவா! ஆதலால், அவர்கள் போலக் கொடுந் தொழில் செய்து கெட்டவன் என்று பெய ரெடுக்கலாகாது.

—ஸ்காந்தம்.

**அல்லற்பட் டாற்ற தழுதகண் ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை.**

## 57—வெருவந்த செய்யாமை :—தாடகை

குடிகளும் அமைச்சர் முதலானவர்களும் அஞ்சுவ தாகிய கொடுந் தொழில்களைச் செய்யா திருப்பதற்கு வெருவந்த செய்யாமை என்று பெயர். வெருவரல்—பயப் படல். பகை பற்றியாவது அறியாமை பற்றியாவது பிறருக் குத் தீங்கு செய்தவன், பின்னும் அந்தத் தீங்கைப் பிறர்க்குச் செய்யா திருக்கும் பொருட்டு, அவனை அற நூல் சொல்லும் நெறியில் தண்டனை செய்வதனை அரச நீதி யென்று ஆன் றோர் அறைவர். அந்தத் தண்டனையை அளவில் பெருக்கிக், குடிகள் அஞ்சும்படி செய்வது வெருவந்த செய்தலின் வகைப் படும். குடிகள் அஞ்சும் செயலைச் செய்கின்ற கொடுங்கோ லரசன் ஒரு தலையாகக் கெட்டழிந்து போய்விடுவான். அரசன் செய்யும் அக்கிரமத்தினால் நெஞ்சு நொந்து நலிலுகின்ற குடி களின் இன்னாச் சொல், அவன் ஆயுளையும் செல்வத்தையும் அதம் செய்கின்ற வாளாகும்.

தன்னைக் காண விரும்புகின்றவர்களுக்குக் காட்சிக்கு அரியவனும், ஒருகால் கண்ட பொழுதிலும், கருணையைக் கைவிட்டுக் கடுஞ்சொல் சொல்கின்றவனு மாகிப், பல்லைக் கடித்துப் பய முறுத்துகின்ற பார்த்திபனுடைய பதவியும் செல்வமும் பேயால் பற்றப்பட்டதுபோலப் பயம் கொண்டதா யிருக்கும். அரசனுக்குப் பேராசையும், கடுஞ் சொல்லும், அளவு கடந்த தண்டனையும், சூதில் விருப்பமும், பொக்கி ஷங்களை நிரப்பிக் கொள்வதில் ஆசையும், குடியும், காமமும் என்ற இவ்வேழும், துன்பம் தரும் கருவிகளாம். இந்தக் குற் றங்களில் ஒன்றே அமைச்சர் முதலானவர்களையும் குடிகளை யும் அச்சம் செய்யப் போதுமானது. ஏழையும் ஒரு மிக்கக் கொண்டுவிட்டால், அவன் நாட்டுக் குடிகள் நெருப்பு மிதித்த வர் போல நெஞ்சம் துடித்து வருந்துவார்கள் அல்லவா !

செங்கோல் செலுத்துகின்றவன் இந்தக் குற்றங்கள் தன்னை நெருங்க வொட்டாமல் நீக்கிக்கொண்டு வரவேண்டும். வெருவந்த செய்கின்றவனைப் பெரியவர் வெறுத்து நீங்குவார்கள். நீதிகளைக் கல்லாத கசடர் அவனை நெருங்கி வந்து உறவு கொண்டாடுவார்கள். அப்படிப்பட்ட அரசனுக்குப் பாவமும் பழியும் உரிமையாக நின்று, புண்ணியமும் புகழும் புறங்காட்டிச் சென்றுவிடும்.

ஆதி நாளில் சுகேது வென்ற யக்ஷனுக்குத் தாடகை என்று ஒரு பெண் பிறந்தாள். சுகேது சுந்தன் என்பவனுக்குத் தன் மகளைக் கொடுத்து மணம் செய்திருந்தான். தாடகையின் வயிற்றில் மாரீசன் தோன்றினன். சில வருஷங்களுக்குப் பிற்பாடு, சுந்தன் தமிழ் முனிவர் தவம் செய்து கொண்டிருந்த சந்தன வனத்துக்கு வந்து, அங்குள்ள விலங்குகளை வேட்டை யாடி வதைக்கத் தொடங்கினன். அகஸ்தியர் விலங்கின் வதைக்கு வருநதிச், சுந்தனைக் கண்டு "இயக்கர் தலைவனே! இது தபோ வனம்; இங்குள்ள உயிர்கள் வதைக்குத் தக்கன வல்ல; அநுக்கிரகிக்கத் தக்கன; அவற்றைக் கொல்வது மிகவும் அக்கிரமம்; இனி, இவ்வனத்தில் வேட்டையை விரும்பாதே; விரும்பினல், ஆபத்துக்கு அடிமை யாவாய்" என்று, எச்சரிக்கை பண்ணினர். சுந்தன் அதனைப் பொருள் பண்ணமல், மறுபடியும் மறுபடியும் வந்து, மிருகங்களை வதை செய்து வந்தான். அவன் தீச் செயல் கும்ப முனிவருக்குக் கோபத்தைக் கிளப்பிற்று. அவர் உடனே விழித்து நோக்கினர். அந்த நோக்கில் உண்டான நெருப்பு சுந்தனை நிமிஷத்தில் நாசம் செய்து விட்டது.

கணவன் மரணத்தைக் கேட்ட தாடகை முனிவரை வணங்கி "அருந்தமிழ் முனிவரே! என்னை அமங்கலி யாக்க வேண்டாம்; என் கணவனை எழுப்பித் தாருங்கள்; உலகங்

களைத் திருப்பி யமைக்கின்ற திறமை பூண்டுள்ள தங்களுக்கு என் கணவனை எழுப்பித் தருவது மிகவும் எளிய காரியம்; நான் பிரமகன் வரத்தில் பிறந்தவள்" என்று, சொல்லிப் புலம்பினாள். தமிழ் முனிவர் "சுகேதுபுத்திரி! உன் வரலாற்றை நான் அறியா திருக்க வில்லை; உன் கணவனை இரண்டு மூன்று தடவை எச்சரித் திருக்கிறேன்; அவன் ஆஸ்ரம விலங்குகளைக் கொன்று அநியாயம் செய்திருக்கிறான்; அவனுக்குத் தண்டனை அக்கிரமம் அன்று; இறந்தவன் விஷயத்தில் எவ்விதமான அநுக்கிரகமும் பயன் படமாட்டாது" என்று சொல்லி விட்டார்.

தாடகைக்கு அவர் வசனம் அமைதியைத் தரவில்லை. அவள் தமிழ் முனிவரை எப்படியாவது கொன்று, பழிதீர்த் துக் கொள்ள வேண்டும் என்று, தன் புத்திரன் மாரீசனு டன் அவ்வனத்தில் இருந்த முனிவர்களையும் முனி குமாரர் களையும் அதட்டியும், வெருட்டியும், சிங்கம் புலி முதலான துஷ்ட விலங்குகளை விட்டும், இரவில் அவர்கள் நித்திரை யைக் கலைத்தும், ஹிம்ஸிக்கத் தொடங்கினாள். முனிவர் அனைவரும் தாடகையின் உபத்திரவத்துக்குப் பயந்து, தமிழ் முனிவரிடத்தில் வந்து தெரிவித்துக் கொண்டார்கள். அகஸ்தியர் தாடகையை அதட்டி "நீ இன்றுமுதல் மனித ரைத் தின்னும் அரக்கியாக மாறுக; வடிவமும் அதற்குத் தக்கபடி விகாரம் கொண்டிருக்கட்டும்; உன் மகனும் அரக்க னவான்" என்று சபித்தார். அப்புறம், தாடகையும் மாரீசனும் எவ்வளவோ முயற்சி செய்தும், அந்தச் சாபம் மாறவேயில்லை. அவ்விருவரும் தங்கள் ஆயுள் வரையிலும் அப்படியே கிடந்து அல்லலுற்று வருந்தித் தொலைந்தார்கள். தாடகையும் மாரீ சனும் தமிழ் முனிவருக்கும் மற்றத் தாபதர்களுக்கும் துன் பத்தையும் பாபத்தையும் செய்யா திருந்தால், அந்தச் சாபத்தை அடைந்திருக்க வேண்டா மல்லவா! ஆதலால்,

பிறர் அச்சம் கொண்டு வருந்தும்படியான காரியத்தை எவரும் செய்ய லாகாது.

—இராமாயணம்.

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்தம் மொல்லைக் கெடும்.

## 58—கண்ணோட்டம் :—இராமர்

**கண்ணோட்டம்** என்பது தன்னோடு பயின்றவர்களைக் கண்டால், அவர்கள் கூறியவற்றை மறுக்க மாட்டாமை யாம். கண்ணோட்டம்—கருணை. கருணையானது கண் சென்ற வழியில் நடப்ப தாதலால், அது கண்ணோட்டம் என்று பெயர் பெற்றது. ஒப்புரவு செய்தல் பிழை பொறுத்தல் முதலான உலக நடைகள் கண்ணோட்டத்தினால் உண்டா கின்றன. பெருந் தன்மையும் பேரதிகாரமும் உள்ள அரசர்களுக்குக் கண்ணோட்டம் அழகைச் செய்துவரும். கண்ணோட்டத்தைக் கருவியாய்க் கொண்டுதான் உலகம் நடை பெறுகின்றது. கண்ணோட்டம் இல்லாத அரசன் உலகத்துக்குப் பாரமாகப் பிறந்தவனே யாவான். மக்கள் கண்ணுக்குக் கண்ணோட்டத்தைக் காட்டிலும் சிறந்த அணிகலம் இல்லை. கருணையைக் கொள்ளாத கண், நோய்களை உண்டுபண்ணலாலும், புலன்களைப் பற்றித் துயர் விளைத்தலாலும், அதனைப் புண் என்றே உணர வேண்டும். ஆனால், அளவு கடந்த கண்ணோட்டம் அறவொழுங்கை மறைத்து அக்கிரமத்தை வளர்த்துவிடும். தன்னோடு பழகினவர்கள் பிறருக்குத் துன்பம் செய்தபொழுது, அவரிடத்தில் கண்ணோட்டம் கொண்டு கிரமத்தைச் செய்யாவிட்டால், அறம் சிதைந்து மறம் தலையெடுக்கும். நடுவு நிலைமையுள்ள அரசர் தமது முறைத் தொழில் கெடாதவண்ணம் கண்ணோட்டம் கொள்வார்கள்.

முகத்தின் நடுவில் கண்களைப் பெற்றும், அதன் பயனாகிய கருணையைக் கொள்ளாதவர்கள் உயிர்த்தொழில்களைச் செய்து வந்தாலும், மண்ணோடு பொருந்தி நின்ற மரப் பாவைக்குச் சமான மாவார்கள்.

தன்னோடு பழகினவர்கள் பிறர்க் கல்லாமல் தனக்குத் துன்பம் செய்வார்க ளானால், அவர்களை அதன் பொருட்டுத் தண்டியாமல் பொறுத்துக் கொண்டு பெருந்தன்மை காட்ட வேண்டும். கருணையை விரும்புகின்றவர்கள் பழகினவர் தமக்கு விஷம் இடக் கண்டாலும், அவரிடத்தில் கொண்ட கருணை அதனை மறுக்க விடாதபடியினால், அந்த நஞ்சைத் தெரிந்து உண்டு, பின்னும் அவரோடு பொருந்தி யிருப்பார் கள். எனவே, தனக்குச் செய்யும் குற்றத்தைப் பொறுப்ப தும், பிறர்க்குச் செய்யும் குற்றத்துக்குத் தண்டிப்பதும் முறை என்பது பெறப்பட்டது.

முன்னர் இராமர் இலக்குவனும் சீதையும் தொடர, வனத்தில் வாசம் செய்யச் சென்றது அனைவருக்கும் தெரி யும். அவர்களுக்கு வனத்தில் சற்று முன் பின்னாகப் பதின் மூன்று வருஷங்களும் கழிந்து போயின. அப்புறம், இலங் கைத் தீவுக்கு அரசனான இராவணன் காண்போருக்குக் கண் கூசுதலைச் செய்கின்ற சீதையின் அங்க விலக்கணத்தைத் தன் சகோதரி சூர்ப்பணகை சொல்லக் கேட்டு, அவளை அபகரிக்க விரும்பி, மாரீசன் என்பவனை மானாக்கிப் போக்கி, அந்தச் சகோதரர்களைப் பிரித்துச், சீதையைத் தூக்கிக் கொண்டு வந்து, இலங்கைப் பட்டினத்தில் சிறைவைத்து விட்டான்.

இராமர் தமது அன்புக் குரிய மனைவி அரக்கனால் அப கரிக்கப்பட்டதைக் கழுகரசன் சொல்லக் கேட்டு, அரக்கனைத் தண்டித்து மனைவியை மீட்டுவரும் பொருட்டுச் சகோதர னுடன் தெற்கு நோக்கி வந்தார். அப்பொழுது சுக்கிரீவன்

என்பவன் அநுமான் முதலான அமைச்சர்களோடு வந்து, அவரை நட்புச் செய்துகொண்டான். அப்புறம், பலத்தில் மிகுந்த மாருதி ஜானகியை இலங்கைப் பட்டினத்தில் கண்டு, இராமர் வசனங்களைச் சொல்லியும், அவர் கணையாழியைக் கொடுத்தும் தேற்றரவு செய்து, தேவியின் சூளாமணியைப் பெற்றுத் திரும்பிவந்து சேர்ந்தான்.

பிற்பாடு, இராமர் எல்லா வானர வீரர்களையும் துணை கூட்டிக்கொண்டு தென்கடலை அணை கட்டிக் கடந்து, இலங்கையை முற்றுகை செய்தார். அம் முற்றுகையில் முதல் நாளிலேயே இராமரும் இராவணனும் ஒருவரை யொருவர் எதிர்த்து நிற்கலானார்கள். மழை பொழிவது போல விடாமல் பொழிந்து மரணத்தைச் செய்கின்ற ராம பாணங்கள் இராவணனுடைய துணைப் படைகளைத் தொலைத்து, அவற்றை அரை நாழிகைக்குள் அதம் செய்துவிட்டன. எவ்வளவு முயன்றும் கூட அவற்றைத் தடுத்துக்கொள்ள இராவணனால் முடியாமற் போயிற்று. அவனது வில் வாள் வேல் முதலான ஆயுதங்களும் பயன்படாமல் ஒடிந்து போயின. கவசங்களும் கிரீடங்களும் உடைந்து போயின; இராவணன் தன் படைகள் அத்தனையும் அழிப்புண்டுபோன அவமானத்தாலும், உடம்பில் அம்புகள் பொத்துக்கொண்டு உதிரம் பெருகுகின்ற உபத்திரவத்தாலும் வருந்திக், காகுஸ்தன் தன்னளவில் கருணை காட்டினா லன்றித், தனக்கு மீட்சி கிடையாது என்பதை உணர்ந்து உள்ளம் பதைத்துத் துடித்தான்.

அப்போது இராமன் இராவணன் செய்த கொடுமையைக் கொஞ்சமும் கருத்தில் கொள்ளாமல், அவன் துன்ப நிலையை உணர்ந்து "வெற்றி வீரனே! கவலை கொள்ள வேண்டாம்; வெற்றியும் தோல்வியும் எப்பொழுதும் ஒருவர் பங்கன்று; அவை பகலும் இரவும் போல மாறிக் கொண்டே யிருக்கும்; வீரர்கள் அவற்றின் காரணமாக

இன்ப துன்பங்களை இதயத்தில் எண்ண மாட்டார்கள்; அவர்களுக்கு ஆறுதல் தருவது கடமை ஒன்றே யொன்றுதான்; உன் வெற்றி திசைகள் தோறும் விளக்கம் செய்கின்றது; நீ இந்திரன் முதலான இறையவர்களை யெல்லாம் பல தடவை போரில் புறம் கண்டிருக்கின்றனை; ஆயினும், இன்று யுத்தத்தில் உன் படைகள் ஒரு மிக்க மடிந்துபோய் விட்டன; நீயும் அதிகமாக வருந்திப் போய் விட்டனை; நான் உன்னை இந்த இளைத்த சமயத்தில் கொல்ல விருப்பம் கொள்ள வில்லை; இன்று பட்டணம் சென்று இளைப்பாற்றிக் கொள்; சண்டை செய்ய எண்ணம் இருந்தால், நாளைக்குத் தகுந்த வீரர்களைத் துணை கூட்டிக்கொண்டு துரிதத்தில் வந்து சேர்; இல்லையேல், தோல்வியை ஒப்புக்கொண்டு சீதையைக் கொடுத்துச் சமாதானம் செய்து கொள்" என்று, சொல்லி யனுப்பினார். இராவணன் செய்த குற்றம் பொறுக்கக் கூடாதபடி பெருகியிருந்தும் கூட, அவன் இளைத்திருந்த சமயத்தில் கொல்ல மனம் வராமல், இராமர் காட்டின கருணை கருத்தைக் களிக்கச் செய்கின்ற தல்லவா! ஆதலால், பகைவ ரிடத்திலும் கூடக் கருணை கொள்வதுதான் ஒருவனது பெருந் தன்மைக்குப் பேரடையாள மாகும். —இராமாயணம்.

ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணும் கண்ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

## 59—ஒற்றுடல் :—இந்திரஜித்தின் அழிவு

ஒற்றுடல் என்பது பகைவர் அயலார் நட்பினர் என்ற மூன்று திறத்தாரிடத்திலும் நடப்பனவற்றை அறிவதற்கு ஒற்றரை ஆளுதலாம். ஒற்றி அறிகின்றவன் ஒற்றன். ஒற்று முதனிலைத் தொழிற் பெயர். தம் நாட்டைக் காப்பதற்கும், பிறர் நாட்டைக் கொள்வதற்கும், அரசனுக்கு

ஒற்று அவசிய மானது. ஒற்றும் நீதி நூலு மாகிய இரண்டும் கொற்றவனுக்கு இரண்டு கண்க ளாகின்றன. கொற்றவன் கண் சென்று காண முடியாத நிலப் பரப்பு முழுவதும் ஒற்றன் சென்று கண்டு உணர்த்தி வருவதனால், ஒற்றன் ஊனக் கண்ணும், அவன் சொன்னவற்றிற்குத் தன் அறிவு சென்று அறிய முடியாத வினைகளை யெல்லாம் நூல் சொல்லி யுணர்த் துதலால், நூல் ஞானக் கண்ணு மாகி, அரசனுக்குத் துணை செய்கின்றன. எல்லாரிடத்திலும் நடப்பனவாகிய எல்லாவற் றையும் அரசன் நாள்தோறும் ஒற்றனால் அறிந்து கொண்டு வரவேண்டும்.

அரசனுக்குக் காரியம் செய்கின்றவர் சுற்றம் பகைவர் என்ற மூவரையும், அவர்தம் சொல்லாலும் செயலாலும் ஆராய்கின்றவனும், தன்னைப் பிறர் ஒற்றன் என்று ஐயுற்றுக் கோபம் கொண்ட விடத்திலும், தன்னை அறிவதற்குச் சாமம் முதலான நான்கு உபாயங்களையும் உபயோகித்த விடத்தி லும், தன் மனத்தில் உள்ள மறையை வெளியிடாதவனும், ஒற்றனாவதற்குத் தகுதி யுள்ளவன். ஒற்றன் பிறர் தன்னை ஐயுறாமல் இருப்பதற்குப் பார்ப்பாரும் வணிகரும் துறவி யும் விரத வொழுக்கினரும் என்ற இவர் வடிவங்களைக் கொண்டு, புகுதற் கரிய அந்தரங்க விடங்களிலும் புகுந்து சென்று, விஷயங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். இன்னும் அவ்வொற்றன் விஷயங்களைச் சொல்வாரை அறிந்து, அவர் தன்மீது சந்தேகம் கொள்ளாமல் தாங்களே சொல்லும் வண்ணம் அவற்றிற்குத் தக்க சொல்லையாவது செயலையா வது முன்னர் உண்டுபண்ணி, அவர்கள் சொல்லும் பொழுது அவற்றில் பற்றில்லாதவன்போலக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

ஆனால், மன்னவன் ஒற்றன் வந்து சொன்ன விஷயங் களை உண்மை என்று கருதிக் காரியம் செய்யக் கூடாது.

பின் னொருவனையும் பின் னொருவனையும் அவற்றையே அறிந்துவர வேவி, மூவர் மொழியும் ஒன்றுபட் டிருந்தால் மாத்திரம் தொழில் செய்யத் தலைப்பட வேண்டும். இன்னும், அறிவிற் சிறந்த அரசன் தான் அனுப்பும் ஒற்றர்களை வேறு வேறாக மறைவில் போக்கி யறிந்து கொள்ளவேண்டும். அவர்களுக்குச் சிறப்புச் செய்யும்பொழுதும் பலர் அறியப் பண்ணக் கூடாது. மறைவிற் செய்து மகிழ்விப்பதுதான் முறை. வெளிப்படையாகச் செய்தால், தானே பிறர்க்கு அந்தரங்கத்தை அறியச் செய்தவன் ஆவான். ஆதலால், அரசன் தான் இடம் பெயராமலேயே யிருந்துகொண்டு, எச்சரிக்கையுடன் ஒற்றர்களைத் தொழில் செய்ய விட்டுத் தெரிந்துகொள்வதுதான் சிறந்த முறை யாகும்.

முன்னர் இலங்கைப் பட்டினத்தில் சீதையின் காரண மாகச் சண்டை நடந்த தல்லவா! அதில் இந்திரஜித்து என்பவன் இராமரையும் இலக்குவரையும் அரவக் கணையாலும் அயன் கணையாலும் இரண்டு தடவை கொன்று முதலில் வெற்றி யடைந்தான். கடவுள் கருணையினால் ராம லக்ஷ்மணர்கள் அவ்விரண்டு தடவையினும் பிழைத்தெழுந்து விட்டார்கள்.

இந்திரஜித்து தனது பெரிய வெற்றி இரண்டும் பாழ்ப் பட்டுப் போனதற்கு வருந்தி, அநுமான் முன்னர் ஒரு அழகிய நங்கையை அழ வழக் கொணர்ந்து நிறுத்தி "வீரனே! நீங்கள் இந்தப் பெண்ணின் பொருட்டாக வல்லவா கடலைக் கடந்துவந்து, கடுஞ் சமர் செய்கிறீர்கள்; இந்தப் பெண் இலங்கைக்கு வந்தது முதல் எங்கள் குடும்பத்தைத் துக்க மும் துயரமும் தொடர்ந்து பீடிக்கின்றன; என் சகோதரரிற் சிலரும் சூரர்களான படை வீரர்களிற் பலரும் இவள் பொருட்டு இறந்து போய்விட்டார்கள்; இவள் உயிரோடு இருக்குந்தனையும் இவ்வியுத்தமும் ஒழியப் போவ தில்லை;

இருதிறத்தா ருடைய நன்மையையும் நினைந்து, நான் இப் போது இவளை வெட்டி யெறிந்து விடுகிறேன்; இறந்தவர் போக இருப்பவர்களை அழைத்துக் கொண்டு நீங்கள் யாவ ரும் உங்கள் நகரத்துக்குத் திரும்பிச் சென்று விடுங்கள்" என்று சொல்லிக், கைவாளினால் அந்தப் பெண்ணை வெட்டி யெறிந்து வீட்டுக்குப் போய் விட்டான். அநுமான் முத லானவர்கள் 'வெட்டாதே! வெட்டாதே!!' யென்று கெஞ் சிக் கேட்டுக்கொண்டும், பயன் படாமற் போயிற்று. அனை வரும் அழுத கண்ணும் சிந்திய மூக்கருமாகி அங்கலாய்க்கத் தொடங்கினார்கள்.

அப்போது இராமர் இந்திரஜித்தின் செயலில் சந்தேகம் கொண்டு, உண்மையை உணர்ந்து வரும்படி வீடணனைத் தூதனாக வேவினார். வீடணன் வண்டின் வடிவமாய்ச் சென்று விஷயத்தை உணர்ந்து வந்து, இராமரை வணங்கி "வீரர் தலைவரே! எம் பெருமாட்டி இறந்து போகவில்லை; அவள் அசோக வனத்தில் நாற்புறமும் துன்பத்தால் நெருக்கப்பட்டு, அரக்கியர் காவலில் அமர்ந் திருக்கின்றனள்; இந்திரஜித்து நிகும்பலைக்குச் சென்று வேள்வியை விரைந்து செய்து வரு கிறான்; அவ்வேள்வி முற்றிவிட்டால் அவனை வெல்ல முடி யாது; அதற்குள்ளாகச் சென்று, அவனோடு சண்டை செய்து வென்று வாகை மிலைய வேண்டும்; இப்பொழுதே இலக்குவரை என்னுடன் விரைவில் அனுப்புங்கள்" என்று சொன்னான்.

இராமர் அங்ஙனமே இலக்குவனோடு குரங்குப் படை களையும் கூட்டி யனுப்பினார். இலக்குவன் வேகமாய் விரைந்து நிகும்பலையை அடைந்தான். அவ்விடத்தில் இந்திர ஜித்து வேள்வியின் பொருட்டுத் தீக்ஷை செய்துகொண் டிருந்தான். அவன் எதிரில் எருமைக் கிடாய்களும் பன்றி களும் வேள்விப் பசுக்களாகத் தூண்களில் கட்டப்பட்டுக்

கிடந்தன. அசுர புரோகிதர்கள் விதிப்படி வேள்வியை நடத்திக் கொண்டு வந்தார்கள். அந்தத் தருணத்தில் வாநர வீரர்கள் மிகவும் வெகுண்டு உள்ளே நுழைந்து, வேள்வியைக் கெடுத்து விட்டார்கள். உடனே இந்திரஜித்து பற்களைக் கடித்துப் பெருங் கோபம் காட்டிப் போர்க் கோலம் பூண்டு, இலக்குவனை எதிர்த்தான். இலக்குவன் தனது போராற்ற லினால் பகைவனைப் போரில் கொன்று வாகை சூடினான். வீடணன் ஒற்றனாய்ச் சென்று உண்மையை உணர்ந்துவாரா திருந்தால், மேகநாதன் அப்படி மடிந்திருக்க மாட்டா னல்லவா! ஆதலால், அறிவுள்ள அரசர் ஒற்றர்களாலேயே பகைவரை வென்று மேன்மை பெறுவார்கள்.

—இராமாயணம்.

ஒற்றினா னொற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

## 60—ஊக்க முடைமை :—பார்த்தன் பாசுபதம்

ஊக்க முடைமை என்பது மனமும் தொழில் செய்வ தில் மெலி வடையாமல் கிளர்ச்சி கொள்வ தாகும். கிளர்ச்சி—சந்தோஷத்தினால் உண்டாகின்ற மன வெழுச்சி. மனக் கிளர்ச்சி இல்லாதவனுக்கு இடம் பொருள் ஏவல் முதலியவை இருந்தாலும், ஊமனுக்குச் சாஸ்திர ஞானமும், குருடனுக்கு விளக்கும், இருந்தும் பயன் படாதவாறு போலப் பாழ்ப்பட்டுப் போகும். ஒருவனுக்குப் பொருள் உடைமையைக் காட்டிலும் ஊக்க முடைமை உண்மையிற் சிறந்தது. பொருளைக் கூட்டுவிப்பதற்கு முதற் காரண மாகிய ஆக்கத்தை உடையவன் தனக்கு வறுமை வந்துவிட்ட தென்று, கருதித் துன்புறான். ஊக்க முடையவனை ஆக்கம் தேடிச் சென் றடையும்.

நீர்ப் பூக்களின் தாள்கள் நீரின் அளவுக்குத் தக்கபடி குறுகியும் பெருகியும் காண்பன போல, மக்களின் உயர்வும் ஊக்கத்துக்குத் தக்கபடி பெருகியும் சிறுகியும் பெருமையை யும் சிறுமையையும் பெறும். உயர்வடைய விரும்புகின்றவன் பழிப் பின்மையும் புகழ் தருவனவுமான பெருங் காரியங்களைச் செய்யச் சிந்தித்து வரவேண்டும். அவை கைகூடவில்லை என்று தாழ்ந்தவும் தகாதவுமான இழி தொழில்களைச் செய்ய எண்ணலாகாது. ஊக்கம் உள்ளவன் தான் கருதிய வுயர்ச்சிக்குச் சிதைவு நேரிட்டாலும் தளர்வடைய மாட்டான்.

ஊக்கம் இல்லாதவனுக்கு, இவ்வுலகத்தில் முயற்சி பொருள் கொடை செருக்கு முதலானவை காரணமாக வுண்டாகின்ற பெருமை உரிமை யாகாது. மதம் பொருந்திய யானை, தான் எல்லா விலங்கையும் காட்டிலும் பேருடம்பையும் முகத்தில் கூரிய கோட்டையும் பெற்றுக்கொண்டிருந்தாலும், ஊக்கம் இல்லாத காரணத்தினால், அவ் வூக்கத்தை யுடைய சிறிய புலியின் எதிர்ப்புக்கு அஞ்சி நடுங்கிப் போகின்றது. ஊக்கம் இல்லாதவனைப் பெரியவர் மரத்தினும் இழிந்தவனாக மதிப்பர். 'ஊக்க முடைமை ஆக்கத்துக் கழகு.'

முன்னர்ப் பாண்டவர்களில் பார்த்தன் பாசுபதக் கணையைப் பெற்று வருவதன் பொருட்டுப் பனிமலையை அடைந்து பெருந்தவம் செய்து வந்தான். அமரர்க் கரசன் அர்ச்சுனனது தவ நிலையை அறிய விரும்பி, அரம்பைமாரை ஏவினான். அவர்கள் சேடிகளோடு வந்து, தங்களுக்குத் தெரிந்த சாமர்த்தியம் அவ்வளவையும் காட்டி அர்ச்சுனனை மயக்க முயன்றார்கள். அர்ச்சுனன் சிரித்துக் கொண்டு "சுந்தரிகளே! நான் பாசுபதம் பெறுவதற்குப் பாடுபட்டு வருகிறேன்; கண்ணுதற் கடவுள் வந்து காட்சி யளிக்குங்

தனையும் என் மனம் வேறு விஷயங்களை விரும்பித் தொடர மாட்டாது; உங்கள் விளையாட்டுக்களைச் சுருக்கிக் கொண்டு வந்த வழியை மறவாமல் திரும்பிப் போய்ச் சேருங்கள்" என்று சொல்லிக், கண்களை மூடியவனாய்க் கடுந்தவம் செய்ய லானான்.

பின்னர் ஒரு நாள் விஜயன் இருந்த வனத்தில் வேடர் கூட்டம் ஒன்று வந்து சேர்ந்தது. அந்தக் கூட்டத்தில் உள்ள ஒவ்வொரு வேடன் கரத்திலும் வில் வாள் வேல் முதலிய ஆயுதங்கள் மின்னல்போல ஒளி வீசி விளங்கின. அவர்கள் பறைகளை முழக்கியும், கொம்புகளை ஊதியும், புதர் களை அலைத்தும், விலங்குகளைக் கிளப்பி வேட்டை யாடினார் கள். அப்பொழுது பெரும் பன்றி யொன்று அவர்கள் பார்வையில் பட்டது. அனைவரும் உடனே அதனைத் தொடர்ந்து சென்றார்கள். அந்தப் பன்றி அவர்களைச் சிறி தும் பொருள் பண்ணாமல் மிகவும் அலக்ஷ்யமாக நடந்து புதர் களில் நுழைந்து மெதுவாய்ப் போயிற்று. வேடர் தலைவன் அந்தப் பன்றியின் மேல் ஒரு முள்ளம்பை எவினான். அதற் குள் அப்பன்றி பார்த்தனைக் கிட்டி விட்டது. அர்ச்சுனன் தன் தவத்துக்குக் கேழலால் கெடுதி யுண்டாகும் என்று நினைத்துக், கூரிய கணை ஒன்றைக் காண்டீவத்தில் கோத்துப் போக்கினான். இரண்டு கணைகளும் ஒரே சமயத்தில் பன்றி யின் உடம்பில் புகுந்து உருவிச் சென்றன. வேடன் கணை வாலடியில் நுழைந்து முகத்திலும், விஜயன் கணை முகத்திற் புகுந்து வாலடியிலு மாக வுருவி யோடின. அந்தப் பன்றி அவ்விரண்டு கணைகளுக்கும் ஆற்ற மாட்டாமல் நெடுங் குரல் பாய்ச்சிக் கொண்டு நிலத்தில் விழுந்து மடிந்து போயிற்று.

பின்னர் விஜயன் "வேடர் தலைவனே! நான் தபசி; ஊன் உண்ண மாட்டேன்; தவச் சாலை அசுத்த மாதலை

நினைந்து, கேழலைக் கொன்று வீழ்த்தினேன்; இஃது உன் கூட்டத்துக்கு நல்ல வுண வாகு மாதலால், கொண்டுபோய் உண்டிரு" என்று சொன்னான். வேடர்க் கரசன் விஜயனை வாதுக்கு அழைத்தலையே விருப்பமாய்க் கொண்டு "தப சியே! உன் வேஷமும் ஒழுக்கமும் ஒன்றுக் கொன்று மாறு படுகின்றன; நான் பன்றி கொன்ற தபசியை எங்கும் கண்ட தில்லை; வில்லம்பு கொள்வாருக்குச் சொல்லம்பு சித்தி யாகுமா? நீ நிஷ்டையில் இருப்பது நிச்சயமா யிருந்தால், பன்றியைக் கண்டு பயப்படுவானேன்? உன் வேஷம் கபடம்; நீ யார்? உன் பெயர் என்ன? ஒளியாமல் உரை" என்று உசாவினான்.

பார்த்தன் 'பெயரைப் புகன்றால், அப்புன்மொழில் வேடன் ஒரு சமயம் பயந்து போய்விடுவான்' என்று கருதி, தன் பெயரையும் வரலாற்றையும் விளம்பினான். வேடன் கைக்கொட்டிச் சிரித்துத் 'தபசியே! நானும் அப்படியே தான் நினைத்தேன்; நீ என் குலப் பகைவன்; எனது நெடு நாளைய எண்ணம் இன்றுதான் நிறைவேறப் போகின் றது; ஏகலைவன் என்ற எங்கள் குல வீரனை ஆதிநாளில் நீ அழுக்காறு கொண்டு அவனுடைய கட்டை விரலைக் களைவித் திருக்கின்றனை; இன்னமும் கோடிக் கணக்கான எங்கள் குடும் பங்களை யெல்லாம் காண்டவ வனத்துக்குக், கனலூட்டிக் கொன்றனை; உன்னை வென்று லன்றி என் வேகம் தணி யாது; உன் வல்லமையை என்னிடம் விரைந்து காட்டவா" என்று, கடுஞ் சொற்களைச் சொல்லி, சுடுங் கோல்களை ஏவி னான். அர்ச்சுனன் கோபித்துக் கொண்டு, வேடனை வைது வடிக் கணைகளை வில்லில் கோத்து விரைவாய்த் தொடுத் தான். இருவர்க்கும் இனி இல்லை யென்னும்படி பெரும் போர் மூண்டது. அந்த நடுச் சண்டையில் அர்ச்சுன னுடைய அரிய வில்லின் நாண் அறுபட்டுப் போயிற்று.

இந்திரன் முதலிய இறையவர்களோடு யுத்தம் செய்த காலத்திலும் அறுபட் டிராத தெய்வத் தன்மை பொருந்திய தனது காண்டீவத்தின் நாண் அற்பனிலும் அற்பனாகிய ஒரு முருட்டு வேடன் சண்டையில் அறுந்து போனதற்கு நாணி, நாணற்றுப் போன தன் வில்லால் விரைந்து வந்து வேடன் தலைமேல் வேகமாய் அடித்தான். வேடன் அவ் வடியைத் தாளாமல் மூளை கலங்கி மூர்ச்சை போய் விட்டான். உடனே வேடன் மனைவி கதுமென வந்து கணவனைத் தூக்கிக் களை தெளியப் பண்ணினாள். வேடன் மயக்கம் தெளிந்த பிற்பாடு, மூர்க்கம் கொண்டு வந்து, விஜயனோடு மற்போருக்கு மார்பைத் தட்டி நின்றான். அர்ச்சுனனுக்கு அவமானம் ஒரு புறம்; அபஜயம் ஒரு புறம்; தவக்கேடு ஒரு புறம்; சினத் தீ ஒரு புறம்; சிவத் தியானம் ஒரு புறம். இருவரும் அடித்தும் பிடித்தும், கட்டியும் குட்டியும், பிரிந்தும் எறிந்தும், பல விதமாகச் சண்டை செய்தார்கள்.

அப்புறம் வேடன் விஜயனது விடாப் பிடியையும் ஒழுங்கையும் கண்டு களித்துத், தன் வடிவத்தை மாற்றிக் கணங்கள் புடைசூழக் கண்ணுதற் கடவுளாகி அவன் கண்ணுக் கெதிரில் காட்சி யளித்து நின்றான். கிரீடி "அந்தோ! கடவுள் என்று அறியாமல் கடும் போர் புரிந்தோமே" என்று அச்சம் அடைந்து, தன்னை மன்னித் தருளும்படி அவர் பாதத்தில் விழுந்து மன்றாடி வணங்கினான். கறைமிடற் றண்ணல் களிமகிழ் சிறந்து "அர்ச்சுனா! உன் முயற்சி நமக்கு மகிழ்ச்சியை ஊட்டிற்று; உன் தூஷணைகள் நமக்கு மறைத் துதியாயின; மற்போரிற் செய்த உனது உதைத்தல் முதலானவை நம் குழந்தை குமாரன் திருவிளையாட் டென்று கருத்திற் கொண்டு விட்டோம்; இனிக் கவலையை ஒழி; இந்தா பாசுபதம்! பகைவரை வெல்லப் பெற்றுக் கொண்டு

போ!” என்று கூறிக் கொடுத்துக், கணங்களுடன் மறைந்தார். ஆதலால், முயற்சி யுள்ளவனுக்கு முடியாத காரியம் ஒன்றுமே யில்லை. மிகவும் அரியவைகளும் கூட எளிதில் முடிந்து புகழ் தருகின்றன.

—மகா பாரதம்.

**ஆக்க மதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
**ஊக்க முடையா னுழை.**

## 61—மடியின்மை :—எலிச்செட்டி

**மடி யின்மை** என்பது ஒருவன் தான் கருதிய தொழிலைச் செய்யும் பொழுது சோம்புதல் இல்லாமையாம். மடி—சோம்பல்; உலகம் உள்ள வரையிலும் தன்னில் பிறந்தவர்களை விளக்குகின்ற குடி யென்னும் கெடுத லற்ற விளக்கு, சோம்பலாகிய இருள் வளர்ந்து பெருகப் பெருக, முழுவதும் மறைந்து போய்விடும். தான் பிறந்த குலத்தை மேலும் மேலும் உயர்த்த வெண்ணுகின்றவன் செய்தொழிலை நிறைவேற விடாமல் நாசம் செய்கின்ற சோம்பலை முதலில் நாசம் செய்ய வேண்டும். பிறப்பையே முழுவதும் நாசம் செய்துவிடுவதாகிய சோம்பலைக் கொண்டவன் தான் அழிந்து போவதற்கு முன்னரே அவன் பிறந்த குடி விரைவில் அழிவடைந்து போகும்.

சோம்பலும், விரைந்து செய்யும் ஒன்றை நீட்டித்துச் செய்யும் இயல்பும், மறதியும், தூக்கமும் ஆகிய இந்த நான்கு குற்றங்களும் அறிவில்லாதவர்களுடைய புகழைக் கெடுத்துக் கொண்டு, அவர்க்கு முதலில் இன்பம் செய்வனபோல வெளிப்பட்டு வந்து, அவர்கள் தம்மை விரும்பிக் கொண்டபிற்பாடு, அவர்களை மரக்கலம் போல நெடுந்தூரம் வரையில் எளிதிற் சுமந்துகொண்டு சென்று, அப்புறம் சிறிதும் தப்ப

முடியாத துன்பப் பெருங்கடலில் தள்ளிப் போய்விடுகின்றனர். சோம்ப லுள்ளவன் சக்ரவர்த்தியோடு சிநேகம் பூண்டிருந்தாலும் அதனால் உண்டாகின்ற பயனை அடையமாட்டான். இன்னும், அவன் அடைந்திருக்கின்ற சோம்பல் என்னும் குற்றத்தினால் பகைவர்களுக்கு அடிமையாகிக் குற்றேவல் செய்தும் அயலார் சொல்கின்ற இகழ்ச்சிச் சொற்களை வெறுப்ப வெறுப்பக் கேட்டும் வருந்தித், தான் மாறு செய்யவும் மாறு சொல்லவும் வகை யில்லாமல் பொருமிப் புலம்பி யழிவான். சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்.

சோம்பலை முதலில் நாசம் செய்துவிட்டால், அவன் குலத்திலும் ஆண்மையிலும் வந்துசேர்ந்த குற்றங்கள் யாவும் பகலவன் உதிக்க வுதிக்கப், பனிப் படலங்கள் உருகி மறைவன போல இருந்தவிடம் தெரியாமல் மறைந்து தொலைந்து போகும். சோம்பலைத் தனக்கு அடிமையாய்க் கொண்டவன் எல்லா வுலகங்களையும் தன் அடியினால் அளந்து கொண்ட இறைவனது எல்லா வுலகங்களையும் ஒருமிக்கப் பெற்று ஒளி விளங்கி மகிழ்வான்.

முன்னாட் பாடலி புரத்தில் செட்டிச் சிறுவன் ஒருவன் இருந்தான். குழந்தைப் பருவத்திலேயே அவன் தந்தை காலமாய் விட்டார். அந்தச் சிறுவன் தாயின் முயற்சியினால் வளர்ந்து மெள்ள மெள்ள எழுதவும் படிக்கவும் ஒருவாறு கற்றுக்கொண்டு விட்டான். பிற்பாடு, ஒருநாள் அவன் தாய் “குழந்தாய்! இனி நீ வேலை இல்லாமல் இருக்க லாகாது; உன் குலம் அயலார் வாழ்வில் இரந்துண்டு வருந்துகின்ற எளிய குலம் அன்று; நீ ‘ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்’ என்றபடி, இலாபம் ஒன்றையே நினைந்து, எவ்வெத் தொழிலையும் செய்து பெரும்பொருள் திரட்டுகின்ற பெரிய வணிகர் குலத்திற் பிறந்தவன்; முயற்சி யுள்ளவனுக்கு மூல தனமும் வேண்டாம்; மீன்[illegible]யும்

வேங்கைக் குட்டி பாய்ச்சலையும் பயின்று பெறுவ தில்லை; இயல்பிலேயே எளிதில் அடைகின்றன; வர்த்தகச் சிறுவ னுக்கு வியாபாரமும் அவற்றைப் போலவே இயல்பில் அமை வதுதான்" என்று கூறினாள்.

அந்தச் சிறுவன் மற்றைநாள் விசாகிலன் என்ற ஒரு வியாபாரியின் வீட்டுக்குச் சென்றான். அவ்வியாபாரி பெரும் பொருள் படைத்தவன். அவன் அப்பொழுது தன் னெதி ரில் இருந்த ஒருவனை நோக்கிப் "பயனற்றவனே! இதோ இறந்துபோய்த் தெருவில் கிடக்கின்ற சிறிய எலியைப் பார்! இதனைப் பயனற்ற தென்று பலரும் பகர்வார்கள்; சதுர னனவனுக்கு வியாபாரம் செய்ய இதுவும் ஒரு மூலதன மாகலாம்; உனக்கு முன்னர்ப் பல தடவை பொருள் உதவி யிருக்கிறேன்; அவற்றில் மிகவும் சிறிய பாகத்தைக்கூட நீ திருப்பித் தரவில்லை; அதனுடன், இன்னமும் கடன் பெற்றுச் செல்லக் கடுகி வந்து நிற்கின்றனை; நீ வணிகர் வகுப்புக்கு வீண் பதர் போன்றவன்; இனி என் கண்முன் நில்லாமல் கதுமென வகன்று போ!" என்று கடிந்து, கூறிக்கொண் டிருந்தான். செட்டிச் சிறுவன் அவற்றைக் கேட்டு "ஐயா! இதோ தெருவில் கிடக்கின்ற இறந்துபோன வெலியை நான் மூலதனமாய்க் கொண்டு செல்கிறேன்; இதனை உங்கள் கணக்கில் பதிவு செய்து கொள்ளுங்கள்" என்று சொல்லி, அவ்வெலியை எடுத்துக் கொண்டுவந்து ஒரு வியாபாரியின் வீட்டு வளர்ப்புப் பூனைக்கு இரண் டுழக்குப் பச்சைக் கடலைக்கு மாற்றி, அதனைச் சுண்டல் செய்துகொண்டு, ஒரு மிடாத் தண்ணீருடன் சாலைக் கரை யொன்றில் வந்து உட் கார்ந்திருந்தான்.

அவனுக்கு எதிரில் சுமை தாங்கி ஒன்று சிறந்திருந் தது. சற்று நேரத்தில் விறகு விற்கும் சிலர் அவ்வழியில் வந்து, தங்கள் தலைச் சுமைகளை இறக்கி இளைப்பாறத்

தொடங்கினார்கள். செட்டிச் சிறுவன் அவர்களுக்கு நல்வரவு சொல்லி, ஆளுக்குக் கொஞ்சம் கடலைச் சுண்டலும் தண்ணீரும் கொடுத்தான். அப்புறம் அவர்கள் அனைவரும் தங்கள் சுமைகளைத் தூக்கிச் செல்லும்போது செட்டிச் சிறுவனுக்கு இரண் டிரண்டு கட்டைவிறகு எடுத்துக் கொடுத்துப் போனார்கள். அந்தக் கட்டைகள் நான்கணாவுக்கு விலை போயின. மற்றை நாளும் அச்சிறுவனுக்கு அந்த வியாபாரத்தில் நான்கணா கிடைத்தது. மூன்றாவது நாள் அச் சிறுவன் நான்குழக்குக் கடலை வாங்கிச், சுண்டல் செய்து கொண்டு சென்றான். அன்று அவனுக்குக் கிடைத்த அணா ஒன்பது. முடிவாய்ச் சொல்லுவோமானால், அந்தச் சிறுவனுக்கு அம்முதல் மாதத்திலேயே பதினைந்து ரூபாய் சேர்ந்து போயிற்று.

செட்டிச் சிறுவன் அந்தப் பணத்தை முதலாக்கிக் கொண்டு அடுத்த மாதத்தில் தானே எல்லா விறகையும் வாங்கி விற்கத் தொடங்கினான். அவ்வியாபாரத்தில் அவனுக்கு அதிக லாபம் கிடைத்தது. இரண்டாவது வருஷத் தொடக்கத்தில் அந்த சிறுவனுக்கு முந்நூறு ரூபாய் முதலாயிருந்தது. அப்புறம் அவ்வேழைச் சிறுவன் வேறு வியாபாரம் செய்யத் தொடங்கினான். சுறுசுறுப்புக் கொண்டு சோம்ப லின்றிச் செய்த அவன் முயற்சி வீணாய்ப் போகவில்லை. அவன் பத்து வருஷத்துக்குள்ளாகவே அந்தப் பட்டணத்தில் பலரும் மதிக்கும்படியான பெருஞ் செல்வத்தைப் பெற்றுக்கொண்டு விட்டான்.

அப்புறம் அந்தச் செட்டிச் சிறுவன் ஒருநாள் பொன்னெலி யொன்று செய்துகொண்டுபோய் விசாகிலன் என்ற வியாபாரிக்கு விநயத்தோடு கொடுத்தான். விசாகிலன் செட்டிச் சிறுவனுடைய கெட்டித் தனத்தைக் கொண்டாடி, அவனுக்குத் தன் புத்திரி பத்மாவதி யென்பவளை மணம் செய்து

கொடுத்ததுமன்றி, அந்தப் பொன்னெலியையும் வேறு சில பொருள்களையும் ஸ்ரீதனமாகச் சேர்த்துத் தந்து மகிழ்ந்தான். அந்தச் சிறுவன் வியாபாரத்துக்கு மூலதனம் இறந்துபோன வெலி யாதலால், அன்று முதல் எலிச்செட்டியென்று அவனுக்கு அந்தப் பட்டணத்தில் பெயர் உண்டாயிற்று. எலிச் செட்டி தன் மடி யின்மையாலும், விடா முயற்சியாலும் திரண்ட செல்வத்தைச் சேர்த்துத், தன் குடும்பத்துக்குக் கவுரவத்தைக் கொண்டுவந்தான். ஆதலால், அவனைப் போலவே அனைவரும் முயற்சி செய்து தங்கள் குடும்பத்துக்குப் பெருமையை வளர்க்கவேண்டும்.

—பிருஹந் கதை.

மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு.

## 62—ஆள்வினை யுடைமை :—மார்க்கண்டர்

ஆள்வினை யுடைமை யாவது ஒருவன் இடைவிடாத மெய்ம் முயற்சி யுடையவ னாதலாம். ஆளும் வினை என்பது ஆள்வினை யென் றாயிற்று. ஒருவன் இடம் பொருள் ஏவல்களில் தான் உடைத்தா யிருக்கின்ற சிறுமையை நோக்கி 'நாம் இவ்வினையைச் செய்து முடிப்பது அருமை' என்று கருதித், தளரா திருக்கவேண்டும். விடாமல் முயற்சி செய்வா னானால், அந்தப் பெருமை அவன் தொடங்கிய அரிய காரியங்களையும் ஆகப் பண்ணித் தரும். செய்தொழிலைச் செய்யாமல் கைவிட்டவர்களை உலகம் தானும் கைவிட்டு விலகும். பிறருக்கு உதவி செய்யவேண்டும் என்று விரும்புகின்ற மேன்மைக் குணமானது முயற்சியில் நிலைத் திருக்கின்றது. முயற்சியைக் கொள்ளாதவன் பிறர்க்கு உபகாரம் செய்ய விரும்புவது, படையைக் கண்டு நடுங்கிப்

பேதுறுகின்ற வொரு பேடி கூரிய நீள்வாளைக் கையிற் பிடித்துக் கொண்டு கொடும் போர் புரிவது போன்றது.

இலாபம் கருதாமல் தொழில் முடித்தலையே கருதுகின்றவன் சுற்றத்தாருக்கும் நட்பினருக்கும் உண்டாகின்ற வறுமை நோயைக் களைந்து, இனியும் அவர்களை அந்நோய் தொடர்ந்து துன்பம் செய்யாதபடி தூண்போல நின்று தாங்குவான். மக்கள் பிறப்புக்கு ஆள்வினை யுடைமை ஒன்றுதான் அழகு செய்கின்றது. அதனை உடையவனுக்குத் திருமகள் கருணையும் உரிமை யாகின்றது. அஃதில்லாதவனை மூதேவி தனக்கு அடிமையாக்கிக் கொண்டு அல்லற் படுத்தி வருவாள்.

கடவுள் கருணை புரிய வில்லை என்று முயற்சியைக் கைவிடக் கூடாது. அது கேவலம் சோம்பேறிகளின் இலக்கணம். தைரியத்தையும் ஊக்கத்தையுமே துணை பற்றிக்கொண்டு தொழில் செய்கின்றவனுக்குக் கடவுள் வலுவில் வந்து அந்தக் காரியத்தைக் கதுமென முடித்துச் செல்லுவார். ஒருசமயம் அவர் வராமற் போனாலும், செய்யும் முயற்சிக்குப் பலன் பெறுவது திண்ணம். அரிய காரியங்களைத் தொடங்கும்பொழுது இன்னல் இடைஞ்சல்கள் வந்து இடையிற் புகுவது என்றும் இயற்கை யானதுதான். அவற்றைப் பொருள் செய்யாமலும், செய்தொழிலில் மனம் தளராமலும், முயற்சி செய்கின்றவன் ஊழ்வினையையும் புறம் கண்டு, காரியத்தை முடித்துக் களிப்பெய்திச் சிறப்பான். 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்.'

ஆதி நாளில் வனத்தில் மிருக கண்டு என்று ஒரு முனிவர் இருந்தார். அவர் தவம் செய்யும்பொழுது மிருகங்கள் தம் உடம்பின் தினவுகளை அவர்மேல் உராய்ந்து போக்கிக் கொண்ட படியினால், அவருக்கு மிருக கண்டு வென்று பெயர் உண்டாயிற்று. அம்முனிவர் ஒரு சமயத்தில் மக்கட் பேற்றை விரும்பிச் சிவ பெருமானை நினைந்து தவம் செய்துவந்தார்.

அடியவர்க்கு எளியவராகிய அவிர்மதிக் கண்ணியான் மிருக கண்டுவின் முன்னர் வந்து நின்று "முனியே! உனக்கு ஒரு புத்திரன் உண்டாவான்; அவன் அறிவும் ஒழுக்கமும் உள்ளவனுனல், அற்பாயுளா யிருப்பான்; தீக்குணமும் தீ யொழுக்கமும் உள்ளவனுனல் தீர்க்காயுளாய்ச் சிறப்பான்; இருவரில் உனக்கு எவர் வேண்டும்? எண்ணித் துணிந்துசொல்" என்று கேட்டார். முனிவர் 'அண்ணலே! தங்கள் கருணை அங்ஙனம் ஆனுல், அறிவும் ஒழுக்கமும் உள்ளவனையே அநுக்கிரகம் செய்யுங்கள்' என்று சொல்லிப் பணிந்தார். முக்கண் மூர்த்தி 'அங்ஙனமே யாகுக; பதினறு வயதுள்ள ஒரு புத்திரன் பிறப்பான்' என்று, பகர்ந்து மறைந்து போனுர்.

அப்புறம், அம்முனிவர்க்கு மார்க்கண்டன் என்பவன் மகனுப் வந்து பிறந்தான். முனிவர் அந்தணர் விதிப்படி ஐந்தாம் பருவத்தில் அவனுக்கு உபநயனம் செய்வித்தார். வரத்தில் வந்து பிறந்த படியினுல் அந்தச் சிறுவன் கர்ப்பூர விளக்குப் போல எல்லாக் கலைகளையும் எளிதில் கற்றுக் கொண்டு, காட்சிக்கு இனியனும் கேள்விக்கு இனியனு மாகிக் கதுமென வளரத் தொடங்கினுன்.

மார்க்கண்டனுக்கு வயது வளர வளரப், பெற்றவர்களுக்குத் துக்கமும் துயரமும் தோன்றி வளர்ந்து பெருகின. காலம் என்பது கண்ணுக்குத் தெரியாமலேயே கன வேகமாய்க் கழிந்து செல்கின்ற நல்லவா! அதன் வேகத்தை அளவில் குறைக்கவாவது, அன்றி, அளவில் பெருக்கவாவது எவருக்கும் திறமை அமைய வில்லை. மார்க்கண்டனுக்கு மெள்ள மெள்ளப் பதினைந்தாம் பிராயமும் பிறந்து போயிற்று. கிளியை வருந்தி வளர்த்துப் பூனையை விளித்துத் தீனி யிடுவதுபோல, மார்க்கண்டனை வளர்த்து மறலிக்கு உரிமையாக்க வந்ததே யென்று தாயும் தந்தையும் தளர்ந்து வருந்தலானுர்கள்.

ஒருநாள் அந்தச் சிறுவன் பெற்றவர்களைப் பணிந்து, அவர்கள் விசனத்துக்குக் காரணம் என்னவென்று வினவினான். அவர்கள் ஆதியங் கடவுளின் அநுக்கிரகத்தை அறைந்து வருந்தினார்கள். மார்க்கண்டன் "தந்தையே! தாயே! தாங்கள் மரணத்தின் பொருட்டு வருந்தித் துயர் வானேன்? உயிர்களுக்கு இறப்பும் பிறப்பும் இயல்பில் இருக்கின்றன; எனக்குப் பதினாறு வய தென்பது கண்ணுதற் கடவுள் கொடுத்த வரமாகும்; அதனைக் கூட்டவாவது, அன்றிக் குறைக்கவாவது எவருக்கும் திறமை அமைய வில்லை; ஆனாலும், மக்கள் பிறப்புக்கு முயற்சி யிருக்கவேண்டும்; எப்படிப்பட்ட காரியங்களும் முயற்சி யுள்ளவனுக்கு முடிந்து விடுகின்றன; நான் இப்பொழுதே புறப்பட்டு முக்கண் மூர்த்தியை மகிழ்விக்கச் செல்கிறேன்; அபாயம் சொன்னவருக்கு உபாயம் தோன்றா திராது; என் மரணத்தை மாற்றும் வல்லமை அவருக்கு இராமற் போகவில்லை; அவருக்குச் சரியான அல்லது உயர்வான கடவுள் இருப்பதாகவும் எனக்குத் தெரிய வில்லை; நான் எப்படியாவது மரணத்தை மாற்றிக் கொண்டு வந்து சேருகிறேன்; எனக்கு விடைகொடுத்தனுப்புங்கள்" என்று சொன்னான். வேறு வழி இல்லாத படியினால் இருவரும் விடை கொடுத்தார்கள்.

அப்புறம், மார்க்கண்டன் இரவு பகல் எந்த நேரத்திலும் அந்தி வண்ணனாகிய சந்திர சேகரக் கடவுள் எழுந்தருளி யிருக்கின்ற திருக்கோயில் தோறும் சென்று, அவரைத் தியானம் செய்வதும், ஆகமங்களிற் சொல்லியபடி அவரை அநவரதமும் பூஜை செய்வதுமாகத் தன் ஆயுளைக் கணக்கிட்டு வந்தான். முடிவில் திருக் கடவூர் என்னும் தலத்துக்கு வந்து பூஜை செய்யும்பொழுது அவன் ஆயுள் நெருங்கிப் போயிற்று. கால தூதர்கள் அவனைக் கட்டிக் கொண்டு செல்லக், கடுகி வந்து சேர்ந்தார்கள். ஆனால்,

மார்க்கண்டன் தவக் கனல் அவர்களை அண்மையில் அணுக விடவில்லை. அவர்கள் திரும்பிச் சென்று தங்கள் தலைவனுக்கு அதனைத் தெரியப்படுத்திவிட்டார்கள். அப்புறம் இயமன் எருமைக் கிடாயில் ஏறி, மார்க்கண்டனிடம் வந்தான். அவன் வடிவம் பயங்கரமா யிருந்தது. பெரிய வுடல்; கரிய நிறம்; கண் சிவப்பு; உடல் துடிப்பு; குரல் இடிப்பு.

இயமன் மார்க்கண்டனை அணுகிச் 'சிறுவனே! நீ உலகத்தில் இருக்கவேண்டிய காலம் இறந்து போய்விட்டது; இனிக் கணமும் உலகத்தில் இருக்க முடியாது; ஆதலால், என்பின் எழுந்துவா!' என்ருன். மார்க்கண்டன் 'தருமம் தெரிந்தவரே! எப்பொழுதாவது உயிர் வேண்டும் என்று உடலைத் துறந்த துண்டா? நான் வர மாட்டேன்; தங்கள் இஷ்டப்படி நடந்து கொள்ளுங்கள்' என்று சொல்லிக், கடவுளைக் கட்டிக்கொண்டு அவர்மீது கருத்தைச் செலுத்தலாஞன். கூற்றுவனுக்குக் கோபம் கொதித்துக் கிளம்பிற்று. அவன் "துடுக்குச் சிறுவனே! நீ சாது மார்க்கத்தில் சிறந்திருக்கிருய் என்று நீதியாய்க் கூறினேன்; அது செவிடன் முன்பாடிய சங்கீதம் ஆயிற்று; நீ உண்மையைத் தான் உரைத்தனை; கட்டிப் பிடித்துக் கவர்ந்து கொண்டா லன்றி 'மயிலே! மயிலே! இறகு தா!' என்ருல், அஃது ஈதற்கு விருப்பம் கொள்ளுமா? பார் என் வல்லமையை" என்று சொல்லிக், கடவுளையும் அவனையும் சேர்த்துத் தனது கொடும் பாசத்தை வீசிஞன். அவ்வளவுதான் தாமதம். உடனே அவ்விலிங்கத்தினின்றும் கண்ணுதற் கடவுள் வெளிப்பட்டு வந்து, யமனை உதைத்துத் தள்ளிக் 'கூற்று ! இக்கச் சிறுவன் என்றும் பதினறு வய துள்ளவஞக எம்மால் அநுக்கிரகிக்கப்பட் டிருக்கிருன்; இனி அடியவர்களிடத்தில் அச்ச மடைந்து அடக்கமாய் நடந்துகொள்' என்று சொல்லி, இருவரையும் அநுக்கிரகம் செய்து மறைந்

தார். சோம்பல் இராமற் செய்த மார்க்கண்டன் முயற்சி, மாற்றிக்கொள்ள முடியாத மரணத்தையும் அவனுக்கு மாற்றித் தந்துவிட்டது. ஆதலால், மார்க்கண்டனைப் போலவே அனைவரும் மனம் தளராமல் முயற்சி செய்யவேண்டும்.

—ஸ்காந்தம்.

ஊழையு முப்பக்கங் காண்பர் ; உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

## 63—இடுக்கண் அழியாமை :—அதி பக்தர்

இடுக்கண் அழியாமை யென்பது தொழிலில் முயல்கின்றவன் தெய்வத்தா லாவது, பொருளின்மையாலாவது, மெய் வருத்தத்தா லாவது, இடுக்கண் நேர்ந்தபொழுது, அதற்கு மனம் கலங்காமை யாகும். இடுக்கண்-துன்பம். செய்தொழிலின் இடையில் துன்பம் நேருமானால், அதன் பொருட்டுச் சந்தோஷிக்க வேண்டும். ஏனென்றால், அந்தச் சந்தோஷம் தான் வாள் வடிவம் கொண்டு, இடுக்கண் என்கின்ற பறவையி னுடைய இரண்டு சிறகுகளையும் அடியோடு வெட்டி யெறிந்து மாய்க்கும். இப்படிச் செய்யாமல் துன்பத்துக்கு அஞ்சிப் பொருமிப் புலம்புகின்றவன் தொடங்கிய தொழிலைத் தொடர் அறுமற் செய்து நிறைவேற்ற மாட்டான்.

கரை கடந்த வெள்ளம்போலக் கணக்கற்ற துன்பம் வந்தாலும், அவை வருவதற்குக் காரணமா யிருந்த தன் குற்றத்தைக் கண்டு விலக்கி, அதனைக் களைந் தெறிய வேண்டும். அங்ஙனம் களைந்தெறிய வல்லவனைக் கிட்டி வந்த துன்பங்கள் அவனால் துன்புறுத்தப்பட்டுத் திரும்பிச் சென்று விடும்.

பெரியவர் தம்மைத் துன்பம் வந்து துய ருறுத்தும் பொழுது, பண்டம் ஏற்றிய பெரிய சகடத்தை இழுத்துச்

செல்கின்ற பகடுகள் போலப் பெருந் தன்மை குலையாமல் பெருமிதமா யிருப்பார்கள். சேற்று நிலத்தில் சகடம் புதையுண்டு போனால், பூட்டிய பகடுகள் பக்கங்களில் மாறியும், தாள்களால் தவழ்ந்தும், தங்கள் மூக்கு மண்ணில் படக் குனிந்தும், இழுத்துச் செல்வது எல்லாருக்கும் தெரியும். துன்பத்தை இன்பம் என்று கொள்கின்றவனுக்குத் துன்பம் தரும் துயர் ஒன்றுமே யில்லை. அந்தத் தைரியம் பகைவர்களும் திகைக்கும்படியான பெருமை யுடையதாகி, அவனுக்குப் பெருஞ் சிறப்பைத் தரும். மனித வுடம்புக்கு இடும்பை வருவது என்றும் இயற்கையானதுதான். அப்பொழுதெல்லாம் தைரியத்தைக் கைவிடக் கூடாது.

கீழைக் கடல் ஓரத்தில் நாகைப் பட்டினம் என்று ஒரு நகரம் இருக்கின்றது. அதன் கடற்கரைப் பாங்கரில் பழைய காலத்தில் நுளைச்சேரி யொன்று இருந்து வந்தது. அந்தச் சேரியின் ஒரு புறத்தில் சுறு வாளை வரால் முதலான பெரிய மீன்களைத் தோரண மாக்கித் தூக்கிக் கட்டியிருக்கும். இன்னொரு புறத்தில், நன்றுப் உலர்ந்த சிறு மீன் வற்றல்கள் குப்பல் குப்பலாகக் குவிந்து செறிந்து கிடக்கும். உணங்கல் கவர வருகின்ற பருந்து கருடன் முதலான பறவைக் கூட்டங்கள் சிறைப் பந்தர் இட்டு வான வீதியில் வட்டமிட்டுப் பறக்கும். வேறொரு புறத்தில், திமிங்கிலக் கொழுப்பையும், திமிங்கில வெலும்புகளையும், நுளைப் பெண்கள் விலை பகர்ந்தளித்து வியாபாரம் செய்வார்கள். மற்றொரு புறத்தில், நுளையர்கள் வெள்ளியங் கிரி போன்ற உப்பு மலைகளை உடைத்தும் உதிர்த்தும், வாணிகச் சாத்துக்கு விற்று வருவார்கள். பிறிதொரு புறத்தில் பவளம் முத்து முதலான வுயர் பொருள்களை வெளிநாட்டு வியாபாரிகள் வந்து வாங்கிக் கொண்டு செல்வார்கள். அங்குக் கொள்ளல் கொடுத்தல்

என்ற தொழில்களின் காரணமாக உண்டாகின்ற வொலி அலை யொலியினும் பெரியதாகி அதிகமாய்ப் பரக்கும்.

அப்படிப்பட்ட நுளைச் சேரியில் வலைஞர் வகுப்பில் அதி பக்தர் என்று ஒரு அடியவர் இருந்தார். அவர் நல் லொழுக்கம் நிறைந்தவர். திருநீ றணிந்த தொண்டர்களைக் கண்டால், சிவ பெருமானையே தரிசித்துவிட்டவர் போலச் சித்தம் களித்து நிற்பவர். அடியவர் விரும்பியவற்றை வெறுப்பின்றிக் கொடுத்து வழி கூட்டி வருபவர். அவர் அங்குள்ள வலைஞர் அனைவருக்கும் தலைவரா யிருந்தார். அவ்வலைஞர்கள் அவர் கட்டளைக்கு அன்புடன் அடங்கி நடந்து வந்தார்கள். மீன் வேட்டை அவர் குலத் தொழில். அத் தொழிலின் வருமானம் அவர் குடும்பச் செலவுக்குக் கண்டு மிஞ்சுத லடையும். கொலைத் தொழில் கொடுந் தொழில் என்றும், மீன் வேட்டை ஊன் வேட்டை என்றும், அவர் உணர்ந்து கொள்ளாமல் இல்லை. அந்தத் தொழில் குலத் தொழி லாதலானும், வேறு தொழில்களைச் செய்ய விருப்பம் இல்லாமையானும், அதனை விடாமல் செய்துகொண்டு வந் தார். ஆனால், அவ் வதிபக்தர் தினமும் ஒரு தடவைதான் கடலில் வலை வீசுவது வழக்கம். அவ்வலையில் கிடைக்கின்ற வற்றில் நல்ல வொரு மீனைக் கொல்லாமல், கடவுளுக் கென்று அப்படியே கடலில் விட்டு விடுவார். அவ்வுயர்ந்த நோன்பி னால் அவருக்குச் செல்வமும் சிறப்பும் பல்கிப் பெருகி வந்தன.

சில வருஷங்களுக்குப் பிற்பாடு, யார் செய்த தவக் குறையினாலேயோ அவ்வடியவர்க்குத் தொடர்ச்சியாகச் சில மாதங்கள் வரையில் ஒரு மீனுக்கு அதிகமாக வலையில் அகப்படுவ தில்லை. அதிபக்தர் அந்த வொரு மீனையும் ஆறு கொள் சடிலத்து அண்ணலாருக் கென்று, அப்படியே அலை கடலில் விட்டு, வெறுங் கையோடு வீட்டுக்குத் திரும்பி விடு வார். வருவாய் நின்றுபோன படியினால் சில காலம் வரை

யில் அவ்வடியவர் பொருள்களை விற்றுக் குடும்பம் காத்து வந்தார். அப்புறம், அதுவும் அற்றுப் போயிற்று. மிடிமை அவரை அடிமை கொண்டு விட்டது. வறியவரை இகழ்ச்சி செய்வது இந்த வுலகத்துக்கு என்றும் இயற்கையான படியினால் அதிபக்தரும் அந்த மரியாதையை அலுப்பில்லாமல் அடைந்தார்.

பின்னர் ஒரு நாள் அவர் வலையில் மிகவும் பெரிய பொன்மீன் ஒன்று அகப்பட்டது. அதன் வடிவம் அற்புதமும் ஆச்சரியமுமா யிருந்தது. வலைஞர்கள் 'அம்மீன் ஆயிரம் பொன்னுக்கும் அதிகமாக விலைபடும்' என்றும், 'அதிபக்தர் வறுமை அன்றுடன் அதமாய் விட்டது' என்றும் சொல்லிச், சந்தோஷப் பட்டார்கள். ஆனால், அந்த வுண்மைப் பக்தர் அம்மீனை விரும்ப வில்லை. மீன் ஒன்றே வலையில் அகப்பட்ட படியினால் 'அது கடவுள் மீனாகும்' என்று, கொண்ட நோன்பு கெடாமல் அதனைக் கடலில் விட்டு விட்டார். அடுத்த நாள் அவர் வலையில் பவள மீன் பட்டது. மறு நாள் வலையில் மாணிக்க மீன் வந்தது. வழி நாள் வலையில் வைர மீன் விழுந்தது. இங்ஙனம் தொடர்ச்சியாக ஒன்பது நாட்கள் வரையில் ஒன்பது ரத்தின மீன்கள் அவர் வலையில் அகப்பட்டுக் கொண்டே வந்தன. அதிபக்தர் தமக்குள் "தினமும் ஒற்றை மீனை வலையில் அகப்பட்டு வருகின்றது; இது கடவுள் செய்யும் பரிசோதனை யாகும்; கடவுள் மீனைக் குடும்பத்துக்குக் கொள்வதைக் கொடும் பாபம் என்பார்கள்; இவ்வுலகத்தில் இரவும் பகலும் போல இன்பமும் துன்பமும் எப்பொழுதும் வந்துகொண்டுதான் இருக்கும்; அறிஞர்கள் இன்பத்தில் மகிழ்வையும், துன்பத்தில் துயர்வையும் சித்தத்தில் கொள்ள மாட்டார்கள்; இது போலும் இலக்ஷக் கணக்கான இடும்பைகள் எழுந்து புரண்டு வந்தாலும், பொறுத்துக் கொள்ள வேண்டுமே யன்றி, அவற்றின் பொருட்டுக்

கொண்ட நோன்பைக் கைவிடக் கூடாது; பரிசோதனையில் தேறினு லல்லாமல், எவருக்கும் பரம்பொருளின் பேரருள் கிடைக்க மாட்டாது" என்று இவை போல்வனவற்றை நினைந்து, அம் மீன்களை யெல்லாம் அப்படி யப்படியே ஆழி யில் விட்டுக் கொண்டு வந்தார்.

உணவில்லாக் குறைபினுல் அவர் உறுப்புக்கள் ஒடுங் கித் தளர்ந்து போயின. பொறிகள் ஐந்தும் அறிவழிந்து அயர்ந்தன. அவர் மனைவி எழவும் சக்தி யில்லாமல், மரணத்துக்குச் சமானமான மூர்ச்சை அடைந்து போனுள். அப்படிப்பட்ட பரிசோதனைத் தருணத்தில் கடவுள் வந்து காட்சி யளித்து, அதிபக்தருடைய இடுக்கண் அழியாமைக்கு வியந்து, அவருக்குக் குறைவற்ற செல்வங்களைக் கொடுத்துக், குடிலில் மறைந்து போனுர். அப்புறம், அவ்வடியவருடைய துன்பம் அனைத்தும் இன்பமாய் மாறிப் போயிற்று. அதி பக்தர் இம்மை மறுமை என்ற இரண்டையும் பெற்று, எல்லா ரும் புகழ இல்லறம் நடத்தி வந்தார். ஆதலால், இடுக்கண் வந்த காலத்தில் எவரும் இரங்கி வருந்த லாகாது.

—பெரிய புராணம்.

இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

அரசியல் முற்றிற்று.

# அங்க வியல்

## 64—அமைச்சு :—யௌகந்த ராயணன்

அங்கவியல் என்பது அரசாட்சியை நடத்துவதற்குத் துணையாகிய படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணும் என்ற அங்கங்கள் ஆறின் தன்மையையும் தெரிவிப்ப தாகும். அவ்வாறுக்குள்ளும் அமைச்சன் அரசனுக்கு அவசியமானவனும் அரசனை விட்டு அகலாதவனு மாவான்.

அமைச்சு என்பதற்கு அமைச்சனது தன்மை என்பது பொருள். அதுதான் அவன் குணங்களும் தொழில்களும் ஆகும். அமைச்சன் என்பது அமாத்தியன் என்ற வடமொழியின் சிதைவு. தொழில் செய்யும் பொழுது அதற்கு வேண்டுவன வாகிய படை பொருள் என்ற கருவிகளையும், தொழில் செய்வதற்கு ஏற்ற காலத்தையும், செய்து முடிக்கும் உபாயத்தையும், செய்யப்படுகின்ற தொழிலையும், பொருந்தும்படி தீர்மானிக்க வல்லவனே அமைச்ச னாவதற்குத் தகுதி யுள்ளவன். அமைச்சன் மனோதிடமும், குடிகளைப் பாதுகாத்தலும், செய்வன தவிர்வனவற்றை அறிதலும், முயற்சியு மாகிய ஐந்தையும் அடைந்திருக்க வேண்டும். அவசியம் நேருமானால், பகைவர்க்குத் துணையானவர்களை அவரை விட்டுப் பிரித்தலும், தன்னைச் சேர்ந்தவர்களை அவர் பிரித்து விடாதபடி கொடையாலும் இன் சொற்களாலும் தழுவிக் கொள்ளலும், முன்னர்ப் பிரிந்தவர்களை மீண்டும் பொருத்திக் கொள்ளலும், அமைச்சன் தொழில்க ளாகும். பணிவும் கனிவுமான சொல்லை உடையவனாகி, அரசனுக்கு

உறுதி தரும் தொழில்களை உணர்ந்து செய்பவன்தான் உண்மை அமைச்சனாவான். அவன் நுண்ணறிவோடு நூலறிவையும் கொண்டு, உலக வியற்கைக்குப் பொருந்தத் தொழில் செய்து முடிப்பான். அரசன் அடாச் செயல்களைச் செய்ய விரும்பின பொழுது அவனுக்கு உறுதியான வற்றை உணர்ந்து உரைப்பதுவே உயர்ந்த வமைச்சன் கடமை யாம். அரசன் தான் முன்னர்ச் சொல்லிய வற்றை அநாதரவு செய்தான் என்று சொல்லா திருக்க லாகாது:

முன்னர்க் கவுசாம்பி நகரத்தில் உதயனன் என்று ஒரு அரசன் இருந்தான். அவன் குலம் கல்வி குணம் கவின் என்ற நான்கையும் கொண்டவன். சங்கீதத்தில் மிகவும் தேர்ச்சி பெற்றவன். வேட்டைத் தொழிலில் அதிக விருப்பம் உள்ளவன். அவனுக்கு மூன்று மந்திரிகள் இருந்தார்கள். முதல் மந்திரிக்கு யௌகந்தராயணன் என்று பெயர். அமைச்சனுக்கு இருக்கவேண்டிய எல்லா விலக்கணங்களும் யௌகந்தராயண னிடத்தில் இயைந் திருந்தன. அரசன் அமைச்சனிடத்தில் ஆளுகையை ஒப்புவித்து விட்டு, ஆடல் பாடல் முதலான வேடிக்கை விநோதங்களில் வீண் பொழுது போக்கி வந்தான்.

ஒரு நாள் சில வேட்டைக்காரர் வந்து உதயனனை வணங்கி "அரசர் சிங்கமே! சில தினங்களாக விந்தியாரணியத்தில் மதயானை ஒன்று உலாவி வருகின்றது; அமுதக் கடலில் பிறந்த அயிராவதம் என்ற யானை யரசுங் கூட இவ் வியானையின் இலக்கணத்தை ஏற்றிருக்க மாட்டாது; நம் தொழுவத்தில் இவ்வேழம் இராததனை நாங்கள் குறை வென்றுதான் கருதுகின்றோம்" என்று கூறினார்கள்.

அடுத்த நாள் அதிகாலையில் உதயனன் யானை வேட்டைக்குச் சென்று, அன்று பிற்பகலில் அந்தப் புது யானை

யைப் பார்த்தான். அவ்விலங்கு அரசனுக்குப் பயந்து, காட்டில் புகுந்து ஓடிற்று. உதயனன் உடன் வந்தவர்களை ஒரு புறத்தில் நிறுத்திவிட்டுத் தான்மாத்திரம் கோஷவதி யென்ற தன் வீணையைச் சுருதி கூட்டிப் பாடிக்கொண்டு, தும்பியைத் தொடர்ந்து போனான். அவ்வேழம் வச்ச வேந்தனது வீணை யொலிக்கு வசப்பட்டது போலவும், சில சமயங்களில் பயப்பட்டது போலவும் அபிநயித்துக், குறுகி யும் விலகியும் அவ்வரசனை நெடுந்தூரம் வரையில் இழுத்துச் சென்று விட்டது. உடனே அவ்வியானையின் வயிற்றி லிருந்து ஆயுத பாணிகளாக இருபது வீரர்கள் வரையில் திடீ ரென்று வெளிப்பட்டு வந்து, வச்ச வேந்தனை நன்றாக வளைந்து கொண்டு விட்டார்கள்.

உதயனன் உள்ளம் கலங்கியும் உறுதி கலங்காமல் அவர் கள் அனைவரையும் எதிர்க்கத் தொடங்கினான். ஆனாலும், வெற்றியை மாத்திரம் அடைய வில்லை. அந்தக் காட்டில் அவர்களுக்குத் திரள் திரளாகத் துணைப் படைகள் திரண்டு வந்தபடியினால் அரசன் அவ்வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டுவிட்டான். அவ்வீரர்கள் அவனை ஒரு பல்லக்கில் அமர்த்தி உஜ்ஜயினி யென்ற நகரத்துக்குத் தூக்கிக் கொண்டு சென்றார்கள். அந்தப் பட்டணத்தின் அரசனாகிய சண்ட மகா சேனன் என்பவன் வச்ச வேந்தனை வர வேற்று, அந்தப் புரத்துக்கு அழைத்துக்கொண்டு சென்று, கன்னிகையும் தனது ஏக புத்திரியுமான வாசவதத்தை என்பவளைப் பணி விடை செய்யப் பணித்து, அவளுக்கு வீணை கற்பிக்க வேண்டும் என்று விநயமாய்க் கேட்டுக்கொண்டான். உத யனனும் வேறு விதி யில்லாமல் அந்தத் தொழிலை அங்கீ கரித்து வந்தான்.

வேட்டைக்கு வந்த வீரர்கள் வேந்தன் செய்தியை விரைந்து சென்று சாம்பியில் கவுகூறினார்கள். பட்டண

வாசிகள் அதனைக் கேட்டுப் பதை பதைத்துப் போர்க் கோலம் பூண்டு சென்று, சண்ட மகாசேனனைச் சிக்ஷிக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்தார்கள். அப்பொழுது யௌகந்தராயணன் அவர்களை அடக்கி "அன்புள்ளவர்களே! இது போர் செய்யும் சமய மன்று; அரசர் க்ஷேமத்துக்குக் கூட நம் போர்த்தொழில் புன்மையை விளைக்கும்; சாமோ பாயத்தினாற்றான் அரசரை இப்பொழுது சிறை மீட்க வேண்டும்; நான் அதனைச் செய்து அரசரைக் கொணர்ந்து சேர்க்கிறேன்; அதுவரையிலும் நீங்கள் ஆத்திரப்படாமல் இருங்கள்" என்று, சமாதானம் சொல்லி யனுப்பினான்.

அப்புறம் சில நாட்களுக்குப் பிற்பாடு, உஜ்ஜயினியின் அரண்மனையில் விகட வந்தணன் ஒருவன் வேடிக்கை செய்ய வந்தான். அவன் வடிவம் தொழில் முதலானவை ஒன்றுக் கொன்று வேறுபா டில்லாமல் எல்லாம் விகட மாகவே விளங்கத் தொடங்கின. அவ்வந்தணன் தனது மந்திர மகிமையினால் அங்குள்ளவர் கண்களுக்கு மறைந்து, வச்ச வேந்தனுக்கு மாத்திரம் வெளிப்பட்டு நின்று, தன்னை யௌகந்தராயணன் என்று தெரிவித்துக் கொண்டான். பின்னர் அந்த யௌகந்தராயணன் வாசவதத்தை முதலானவர்கள் அகன்றிருக்கும் சமயத்தில் அவ்வரசனுக்குச் சிறை மீட்சியின் சம்பந்தமான செய்திகளைச் சொல்லி, அவனுக்குச் சில அவசியமான மந்திரங்களையும் உபதேசம் செய்து போனான். அப்புறம், வசந்தகன் என்ற வேறொரு மந்திரி விகட வேஷத்தோடு வாசவதத்தைக்கு வேடிக்கைக் கதைகளை விளம்புகின்ற வேலையில் வந்து அமர்ந்தான். அப்புறம் யௌகந்தராயணன் அந்தப் பட்டணத்தில் ஆக வேண்டிய காரியங்களை யெல்லாம் அறிந்து நிறைவேற்றிக் கொண்டு, கவுசாம்பிக்கு வந்து சேர்ந்தான்.

பின்னர் ஒரு நாள் இரவு வச்ச வேந்தன் தன்னையே மணக்க விரும்பின வாசவதத்தையோடு பத்திரவதி யென்ற பெண் யானையின் மீதேறி, மந்திர மகிமையினால் வாயிற் காவலரை மயக்கி, வெளிப்பட்டுப் போய்விட்டான். யௌகந்தராயணன் வழியில் அரசனுக்குப் பல சவுகரியங்களையும் அமைத்திருந்த படியினால் அவன் வேகமாய் நடந்து, விந்தியாரணியம் வந்து சேர்ந்தான். அங்குக் கவுசாம்பி நகரத்திலிருந்து அவன் படைவீரர்கள் வந்து காத்திருந்தார்கள். உதயனன் அவர்களோடு பட்டணம் அடைந்து, வாசவதத்தையை மணந்து, நெடுங்காலம் வரையில் இந்நானிலத்தில் நீதியைச் செய்து வந்தான். யௌகந்தராயணன் துணிந்து முயற்சி செய்து வச்ச வேந்தனை மீட்டு வராவிட்டால், அவன் சண்ட மகாசேனனுடைய சிறையில் வருந்தி அப்படியே துயர வேண்டும் அல்லவா! ஆதலால், நல்லமைச்சர்கள் அரசர்களுக்கு எப்பொழுதும் நன்மையையே நாடிச் செய்து வருவார்கள்.

—பிருஹத்கதை.

கருவியும் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு.

## 65—சொல்வன்மை :—கும்பகர்ணன்

சொல்வன்மை யென்பது ஒருவன் தான் கருதியிருக்கின்ற தொழில் முடியும் வகையை அறிந்து, அது நன்றாய் நிறைவேறுவதற்கு ஏதுவாகிய சொற்களைத் தெரிந்து சொல்ல வல்லவனாதலாம். அமைச்சனுக்குச் சிறந்த திறமை சொல் வன்மையேயாகும். அந்தச் சொல்வன்மைதான் அவன் அடைந்திருக்கின்ற எல்லாத் திறமையிலும் சிறப்புப் பெற்று விளங்கும். அரசனுக்கும்

அரச அங்கங்களுக்கும் தன் சொல்லினாலேயே ஆக்கமும் அழிவும் வந்து பொருந்துகின்ற படியினால், அப்படிப்பட்ட சொல்லில் அமைச்சன் சோர்வடையக் கூடாது. நட்பினரைப் பிணித்துப், பகைவரும் நட்பை விரும்பும்படி அமைச்சன் ஆலோசித்துச் சொல்ல வேண்டும். வழு வின்மையும், சுருங்கச் சொல்லலும், விளங்க வைத்தலும், இனிய வாதலும், பயன் தருதலும் என்ற இவை சொல்லின் குணங்க ளாகும்.

அமைச்சன் நல்ல சொல்லா யிருந்தாலும் தனக்கும் கேட்பாருக்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளை எண்ணாமல் சொல்லக் கூடாது. அங்ஙனம் சொன்னால், சில சமயங்களில் முடிய விருந்த காரியமும் கெட்டு, முடியாமற் போய் விடும். அறமும் பொருளும் இன்பமும், சொல்லும் சொல்லையே சார்ந்து நிற்கின்றபடியினால், அறிவுள்ள அமைச்சன் தான் சொல்லக் கருதிய சொல்லை வெல்லக்கூடிய வேறு சொல் இல்லாமையை அறிந்து, விளங்கச் சொல்லிக் காரியத்தை முடிப்பான். தான் முடிக்க வெண்ணியவற்றைப் பிறர்க்குப் பொருந்தச் சொல்கின்றவனும், சொல்ல வேண்டியவொன்றை மறதியினால் கைவிடாதவனும், சபைக்கு அஞ்சாதவனும், சதுரனும் ஆகிய அமைச்சனை எப்படிப்பட்ட பகைவர்களுக்கும் வெல்வது அரியதா யிருக்கும்.

பூவாணிகர் மலர்களை வரிசைபடத் தொடுத்து மாலைகளை அழகு செய்து விலைப் படுத்துவது போலச் சொல்வன்மை கொண்டவன், தான் சொல்லக் கருதின விஷயங்களை ஒன்றன்பின் ஒன்றாக வரிசை படக் கோத்துக், கேட்பவருக்கு இன்பம் உண்டாகச் சொல்லிக், காரியத்தை முடிப்பான். பொருள் பொதிந்த சொற்களைச் சொல்வதற்கு அறியாதவன்தான் பலவாகிய சொற்களைப் பிழை யுண்டாகப் புகல விரும்புவான். தான் கற்றவற்றைப் பிறர் அறியும் வண்ணம் சொல்லமாட்டாதவன் மலர்ந்தும் வாசனை

கொள்ளாத வெறு மலரைப்போல விரும்புவாரற்று மனம் வருந்தி நிற்பான்.

இராவணன் கும்பகர்ணன் விபீஷணன் என்ற மூவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த சகோதரர் என்பது உங்கள் நினைவில் இருக்கலாம். மூவரும் இளம் பருவத்தில் கல்வி கற்றுப், பனி மலைச் சாரலில் நின்று பிதாமகரைக் குறித்துப் பெருந் தவம் பண்ணினார்கள். அவர்களில் கும்பகர்ணன் கனல் நடுவில் நின்றும், காற்றை விரும்பி யுண்டும், காண்பவர் வியக்கும்படி கடுந் தவத்தைச் செய்தான். அவனது விடாப்பிடியும், வருத்தங்களைப் பொறுக்கும் இயல்பும் முனிவர்களும் வியந்து மூக்கின்மீது விரல் வைக்கும்படியா யிருந்தன. இங்ஙனம் கும்பகர்ணனுக்கு அநேகம் வருஷங்கள் தவத்தில் வருந்திக் கழிந்தன. இந்திரன் முதலான இறையவர் பலரும் பிதா மகரை வணங்கிக், கும்பகர்ணன் தவத்தை விளம்பிச், சீக்கிரத்திலேயே அவனுக்கு வரம் கொடுத்துவிடும்படி வேண்டிக்கொண்டார்கள்.

அசுரர் தவம் செய்வது கொட்டும் தேளுக்குப் பட்டம் கட்டுவது போலாகும். அஃது அமரர்களுக்கு அநர்த்தத்தை அநவரதமும் உண்டுபண்ணும். எப்படி யென்றால், அவர்கள் தவம் பெருகப் பெருக, வரத்தின் விருப்பம் பெருகும். வரம் பெற்ற பிற்பாடு, தேவர்களை ஏவல் கொள்வதும், தெய்வ பதங்களில் குடி புகுவதும், தெய்வ சுகங்களைத் துராகிருதமாய் அநுபவிப்பதும்தான் அவர்களுடைய முதற்றொழில். நல்லொழுக்கம் நிறைந்த நான்மறை அந்தணர்களை நாசம் செய்வதும், அவர்கள் வேள்வியை அழிப்பதும், இரண்டாவது தொழில். கும்பகர்ணனிடத்தில் பய முறுவதற்கு இன்னமும் ஒரு காரணம் அதிகமாக இருந்துவந்தது. அவன் சாதாரணமான வரங்களில் எதனி

னும் விருப்பம் வைக்காமல், நித்தியத்துவம் என்ற உயர்ந்த வரத்தைப் பெற விரும்பி வருந்தி வந்தான்.

பின்னர், முளரியங் கடவுள் கும்பகர்ணனுக்கு வரம் தரும் பொருட்டு விரைவில் வெளிப்பட்டு வந்தார். தேவர் யாவரும் அவரை நாற்புறமும் நெருங்கி யிருந்தார்கள். அப்சரப் பெண்கள் அஷ்ட மங்கலங்களை ஏந்தி வந்தார்கள். தும்புரு முதலான தெய்வ முனிவர்கள் அவர் புகழ்களை வீணையில் அமைத்துப் பாடி வந்தார்கள். தெய்வ வாத்தியங்கள் யாவும் சிறப்பாய்க் கலந் தொலித்தன. இவ்வண்ணம் பேரோலக்கத்தோடு புறப்பட்டு வந்த படைப்புத் தொழிற் கடவுள் கும்பகர்ணனைக் கண்டு "அசுர வீரனே! உன்னைப்போல உடம்பை வருத்தித் தவம் செய்தவர் ஒருவரும் இல்லை; உன் தவம் சித்தி பெற்றது; நீ எதனைக் கருதித் தவம் செய்கின்றனை? எவற்றின்மீது விருப்பம் கொள்கின்றனை? உன் எண்ணத்தை ஒளியாமல் உரை" என்று கேட்டார்.

கும்பகர்ணன் நெடு நாட்களாக நெஞ்சில் நினைத்துக் கொண்டிருந்த நித்தியத்துவத்தை நவில விரும்பி, நிதானம் இல்லாமல், மிகவும் அவசரமாகப் "பிதா மகரே! நான் இந்திரன் முதலான இறையவர்ப் பதங்களை இறையும் விரும்ப வில்லை; நெடு நாட்களாக நித்திரத்துவம் ஒன்றையே நெஞ்சத்தில் விரும்பி யிருக்கிறேன்; அவ்வரத்தை மாத்திரம் அன்புகொண்டு அநுக்கிரகம் செய்யுங்கள்" என்று சொல்லி, நிலத்தில் விழுந்து வணங்கினன். நித்திரத்துவம் என்பதற்கு நெடுந் தூக்கம் என்பதுவும், நித்தியத்துவம் என்பதற்கு நாச மின்மை என்பதுவும் பொருள். கலைமகள் கணவன் 'அப்படியே பெற்று விட்டாய்' என்று சிரித்துக் கொண்டு சொல்லி, மறைந்துபோய் விட்டார். கும்பகர்ணனுக்கு அவர் சிரிப்பின் காரணம் அப்புறந்தான் விளக்கமாயிற்று. 'அந்தோ! என்ன அறியாமை! ஆயிரக் கணக்

கான வாண்டுகள் வனத்தில் வியர்க்க விரைக்க நின்று தவம் செய்தும் கூடச் சமயத்தில் சொற் சோர்வு பட்டு, ஒன்றை நினைத்துக் கொண்டு வேறொன்றைச் சொல்லி, நித்திரத் துவம் பெற்றுக் கொண்டோமே' யென்று, அவன் புலம்பிப் புலம்பி வருந்தினன். அப்புறம், வருந்தி ஆவ தென்ன? அவன் ஆயுள் உள்ளவரையில் தூக்கத்தை யல்லாமல் வேறு ஒன்றையும் தெளிவாய்க் கண்ட தில்லை. ஆதலால், ஒருவன் உள்ளத்தில் உள்ளவற்றை வெளி யிடுவதற்குச் சொல் வன்மை சிறந்த தாகும் என்பது இதனால் தெளிவாகின்ற தல்லவா! அந்தச் சொல் வன்மை இல்லாமற் போனால், கரு திய காரியம் கெட்டழிந்து போகும்.

—இராமாயணம்.

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்,
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

## 66—வினைத் தூய்மை :—விருத்தக்ஷத்திரன்

வினைத் தூய்மை யென்பது அமைச்சனால் செய்யப் படுகின்ற தொழில் பொருளை மாத்திரம் உண்டு பண்ணாமல், அறத்தையும் புகழையும் உண்டாக்கி, நல்லன வாத லாகும். அமைச்சனுக்குச் சொல்வன்மையோடு செய் யும் தொழிலும் தூய்மை பெற்றிருக்க வேண்டும். படையை யும் பொருளையும் காரணமாய்க் கொண்டு பிறக்கின்ற துணை களின் நன்மை செல்வத்தை மாத்திரம் கொடுக்கும். வினை யின் தூய்மை இம்மையில் அறத்தையும் பொருளையும் இன் பத்தையும் தந்து, மறுமையில் இந்திரன் முதலிய இறையவர்ப் பதங்களையும் எளிதில் கூட்டுவிக்கும். அரசனுக்கு இரண் டிடத்திலும் நன்மை தராத வினைகளை அமைச்சன் எந்தக் காரணத்தைக் கொண்டும் இயற்ற லாகாது. உயர்வை விரும்பு

கின்றவன் துன்பத்தில் வருந்தும் பொழுதும் தாழ்ந்த வினைகளைச் செய்ய நினைக்க மாட்டான்.

என்றும் நிலைத்தல் இல்லாத செல்வத்தின் பொருட்டு நிலைத்த பழியைத் தருகின்ற தாழ்ந்த தொழில்களைச் செய்து திரட்டுகின்ற செல்வத்தைக் காட்டிலும், அந்தத் தொழிலைச் செய்யாத பெரியவர் வறுமை பெரிதும் சிறந்ததாகும். ஏனென்றால், தீய வினைகளைச் செய்து பிறர் வருந்தக் கொண்ட பொருள், செய்தவன் கண்ணெதிரிலேயே அவனை வருந்திப் புலம்ப விட்டுப், பிறரிடம் சென்றுவிடும். தூய வினையால் வந்த பொருள் முன்னர் இழந்துபோனாலும் பின்னர் வந்து பயன் தருதலில் தவறாது. பச்சைப் பானையில் நீரைப் பெய்து காவல் செய்வதற்கும், தீய வினைகளால் ஒருவன் தனக்கு வலிமையை உண்டுபண்ணிக் கொள்வதற்கும் சிறிதும் வேறுபாடு இல்லை.

ஆதி நாளில் சிந்து தேசாதிபதியான விருத்த க்ஷத்திரன் என்றவனுக்கு ஜயத்திரதன் என்று ஒரு புத்திரன் இருந்தான். அவனுக்குத் துரியோதனன் தனது அருமைச் சகோதரியான துச்சலை யென்பவளைக் கொடுத்துத் திருமணம் செய்வித்தான். பாம்புக் கொடியோனுக்கும் பாண்டவர்களுக்கும் பகை பெருகி வளர்வதை நினைந்து, ஜயத்திரதன் தன் மைத்துனனுக்குத் துணை செய்யும் பொருட்டுச் சந்திர சேகரக் கடவுளை விரும்பித் தவம் செய்து, சிறந்த வரங்களைப் பெற்றுப், போரில் வெல்ல முடியாதவனா யிருந்தான்.

பிற்பாடு, குருக்ஷேத்திரம் என்ற விடத்தில் பாண்டவர்களுக்கும் துரியோதனனுக்கும் பதினெட்டு நாட்கள் வரையில் பெருஞ் சண்டை நடந்தது. அதில் பதின்மூன்றாவது நாள் போரில் அபிமன்யு என்ற அரிய வீரன், துரோணர்

கிருபர் முதலான பெரிய பெரிய சூரர்களை யெல்லாம் சிதறி யோட வடித்து, மந்தர மலை திருப்பாற் கடலைக் கலக்கி நுரைபெறப் பண்ணியது போலப் பகைவர்களுடைய படைக் கடலைக் கலக்கிப், பயந்து ஓடப் பண்ணினான். அன்று துரியோதனனுக்கு அபிமன்யுவைத் தொலைப்பதுவே அசாத்தியமாய் விட்டது. அவன் தன் மைத்துனன் ஜயத்திரதனைக் கடவுள் வரத்தைக் கொண்டு அபிமன்யுவை எதிர்த்துக் கொல்லும் வண்ணம் ஏவினான். ஜயத்திரதனும் மறுக்க வகையில்லாமல் முணுமுணுத்துக் கொண்டு அங்ஙனமே செய்து அபிமன்யுவைக் கொன்றான். அபிமன்யுவின் மரணச் செய்தி அப்புறம் அர்ச்சுனனுக்குத் தெரிந்தது. அவன் கோபம் கொண்டு 'நாளைப் பொழுது மறைவதற்குள் என் மகனைக் கொன்றவன் சிரத்தை நிலத்தில் சிதறச் செய்யாவிட்டால், நான் செந்தழலில் விழுந்து வெந்து போகிறேன்' என்று சபதம் செய்துகொண்டான். அரவ கேதனன் அதனை அறிந்து 'மறுநாள் மாலை நேரம் வரையில் எப்படியாவது வருந்தி, மைத்துனனை மரண மடைய வொட்டாமல் காப்பாற்றி விட்டால், பாண்டவர் ஐவரும் மாண்டுபோவார்கள்' என்று, மன்னர்களுக்கும் தன் வீரர்களுக்கும் தைரியம் சொல்லி வந்தான்.

அடுத்த நாள் போரில் அர்ச்சுனன் மாலை நேரத்தில் வந்து ஜயத்திரதனைத் தாக்கினான். அப்போது கண்ண பிரான் 'அர்ச்சுனா! சைந்தவன் இனித் தப்பிச் செல்ல மாட்டான்; ஆனால், இதில் ஒரு தரும சங்கடம் இருக்கின்றது; அஃது இவனைக் கொன்றவன் உடனே இறந்துபோய் விடுவான்; ஏனென்றால், இவன் தந்தை மகன்மீதுள்ள வாஞ்சையினால் முன்னர்த் தவம் செய்து 'தன் மகன் சிரத்தை நிலத்தில் தள்ளுகின்றவன் தானும் தலை பிளந்து சாக வேண்டும்' என்று கடவுளிடத்தில் வரம் பெற்றிருக்

கிறான்; நீ அவசரப்பட்டு அநர்த்தத்தை விளைவியாதே; என் வார்த்தையின்படி நட; இவன் தந்தை இதற்குச் சமீபத்தில் இருக்கின்ற ஸ்யமந்த பஞ்சகம் என்ற மடுவில் இப்பொழுது சந்தி வந்தனம் செய்து வருகிறான்; நீ இரண்டு தெய்வக் கணைகளைத் தொடுத்து, ஒன்று ஸைந்தவன் சிரத்தை அரியவும், மற்றொன்று அந்தச் சிரத்தைத் தூக்கிக் கொண்டு சென்று அவன் தந்தையின் கரத்தில் எறியவும், கட்டளை யிட்டுப் போக்கு" என்று கூறினார்.

கிரீடி அங்ஙனமே காண்டீவத்தில் இரண்டு கடவுட் கணைகளைத் தொடுத்துக், கண்ணன் சொல்லிய வண்ணம் கட்டளையிட்டுப் போக்கினான். அவ்விரண்டில் ஒன்று சென்று ஸைந்தவன் சிரத்தை அறுத்தது. மற்றொன்று சென்று அந்தச் சிரத்தைத் தூக்கிக் கொண்டு போய், அவன் தந்தையின் கரத்தில் விழுத்தியது. அப்பொழுது விருத்த க்ஷத்திரன் சூரியனுக்கு அர்க்கியம் தருவதற்கு இரு கரத்திலும் புனலை ஏந்தி மந்திரம் சொல்லிக்கொண் டிருந்தான். சிரம் கரத்தில் வந்து விழுதலும் அருவருப் படைந்து, அதனை அப்படியே தண்ணீரில் விட்டு விட்டான். அவ்வளவு தான் தாமதம். அந்தக் கணத்திலேயே கடவுள் வரத்தின் வண்ணம் அவன் தலை பிளந்து நிலத்தில் விழுந்து தானே மரண மடைந்து போனான். ஆதலால், பிறருக்குக் கேடு சூழ்வதனையே பெரும் பயனாய்க் கொண்டு முயல்கின்றவன் பின்னர் அந்தக் கேட்டினாலேயே பிணிக்கப்பட்டுப் பதைக்கத் தொலைந்து போய் விடுவான்.

—மகா பாரதம்.

ஓஒதல் வேண்டும்; ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்.

## 67—வினைத் திட்பம் :—தமிழ் முனிவர்

வினைத் திட்பம் என்பது தூய வினைகளை எண்ணி முடிப்பவனுக்கு வேண்டிய மன வுறுதி யாகும். தொழில் செய்யும்பொழுது உண்டாகின்ற மன வுறுதிக்கு வினைத் திட்பம் என்று பெயர். திட்பம்—உறுதி. வினைத் திட்பம் உடையவனுக்குப் படை அரண் நட்பு முதலான திட்பங்கள் தாமே வந்து பொருந்தும். நல்ல வமைச்சன் பழுது படும் வினைகளைப் பதறிச் செய்யாமலும், தான் தூய்மை யுடைய தென்று கருதித் தொடங்கிய வினைகள் ஒருகால் பழுதுபட்ட பொழுதும் அதற்கு மனம் தளரா மலும் இருந்து, எண்ணிய வண்ணம் எல்லாத் தொழில்களை யும் இனிதில் முடித்துக் களிப்பான். தான் தொடங்கும் வினையை முடிவில் தெரியும்படி செய்து முடிப்பதுதான் வினைத் திட்பத்தின் இலக்கணம். அங்ஙனம் மறைத்துச் செய்யாமல் வெளிப்படச் செய்வா னானால், அவ்வெளிப்பாடு அவனுக்குத் துன்பம் தருவதோடு தொடங்கிய வினையையும் துரிதத்தில் கெடுத்து விடும்.

பொதுவாக 'நாம் இந்த வினையை இவ்விதத்தில் இயற்றி முடிக்கலாம்' என்று, இயம்புவது மாத்திரம் எவருக்கும் எளிய தாகுமே யன்றி, இயம்பிய வண்ணம் இயற்றி முடிப் பது என்றும் அரிய தாகவே யிருக்கும். ஆனால், மறைத்துச் செய்கின்ற வலிமை யுடையவன் மாத்திரம் தான் முதலில் எண்ணிய வண்ணம் எளிதில் இயற்றி முடித்து விடுவான். உருண்டு செல்லும் பெரிய தேருக்கு அச்சின் கடையில் செருகிய ஆணியைப் போல, உருவில் சிறியவரா யிருந் தாலும், வினை செய்வதில் வலியரானவர்களை இவ்வுலகம் உடைத்தா யிருக்கின்றது. ஒருவனது வடிவின் சிறுமையை நினைந்து இகழக் கூடாது. தொழில் செய்யும் பொழுது ஒரு

சமயம், மெய்ம் முயற்சியினால் துன்பம் வந்து தொடர்ந்து விட்டாலும், அதன் பொருட்டுத் தளர்ச்சி யடையாமல், முடிவில் உண்டாகும் இன்பத்தை நினைந்து, முயன்று முடிக்கவேண்டும். ஒருவன் படை அரண் நட்பு முதலான திட்பங்களை முழுவதும் உடைத்தா யிருந்தாலும் வினைத் திட்பத்தைக் கொள்ளாவிட்டால், அவை யாவும் பயனற்றுப் போகும்.

முன்னர் மித்திரா வருணர் புத்திரராகிய அகஸ்திய முனிவர் பொதிகை மலையில் இருந்து பெருந்தவம் செய்து வந்தார். அவர் இந்த வுலகத்துக்குச் செய்த வுதவி ஒன்று இரண் டன்று. பல சமயங்களில் பல விதமாக வருந்திப் பெரிதும் உதவி யிருக்கிறார். விசுவரூபன் என்பவனைப் பற்றி உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கின்றது. அவன் துவஷ்டாவின் புத்திரன். வேள்வியில் மந்திரங்களை மாற்றிச் சொன்ன காரணத்தினால் இந்திரன் அவனைக் கொன்று விட்டா னல்லவா! துவஷ்டா, தன் மகன் இறந்துபோன விசனத்தினால் இந்திரன்மீது பகை பாராட்டி அவனை வெல்லும் பொருட்டு விருத்திரன் என்ற ஒரு உயர்ந்த புத்திரனைப் பெற்றான். அந்தச் சிறுவன் வளர்ந்து, தந்தையின் தவத்தையும் வரத்தையும் அடைந்து, அசுரப் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்து, அமராவதியை முற்றுகை செய்தான். அம்முற்றுகையில் இந்திரன் முற்றிலும் தோற்றுப் போன படியினால், விருத்திரன் அவனை எடுத்து அப்படியே விழுங்கி விட்டான். பின்னர்த் தேவர்கள் ஒருவிதமான சூழ்ச்சியைச் செய்து, அவ்வசுரனுக்குக் கொட்டாவி வரப் பண்ணினார்கள். இந்திரன் அதையறிந்து அணு வடிவம் கொண்டு, அவன் வாயின் வழியாக வெளியில் வந்து மறைந்தோடிப் போனான். அப்புறம், முனிவர்கள் விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் சந்தி செய்வித்தார்கள். அசுரன், ஈரமான,

அனற்! உலர்ந்த, ஆயுதங்களினால் தனக்குப் பகலிலும் இரவிலும் மரணம் நேரலாகாது என்று, அவர்களிடம் வரம் பெற்றுக்கொண்டு, இந்திரனோடு இணக்கமாயிருந்தான்.

ஒரு சமயத்தில் இந்திரனும் விருத்திரனும் கடற் கரையில் உலாவி வரச் சென்றார்கள். அப்போது சில வெண்ணுரைகள் அலைப்புண்டு வந்து கரையில் ஒதுங்கிக் கிடந்தன. இந்திரன் அவற்றைக் கண்டதும் 'அந்நுரைகளைத் தனது வஜ்ராயுதத்துக்குத் தடவி விருத்திரனைக் கொல்லலாமல்லவா! என்று உள்ளத்தில் உன்னினான். அதனை அறிந்த திருமால் 'அது நல்ல வுபாயம் தான்; நான் வஜ்ராயுதத்தின் நுனியில் இருந்துகொண்டு உனக்கு வெற்றியைத் தருகிறேன்; நீ துணிந்து நின்று தொழிலைச் செய்து முடி' என்று, அவனுக்கு மாத்திரம் கேட்கும்படி அசரீரியாய்க் கூறினார். இந்திரன் சமயத்தை நழுவ விடாமல் அந்நுரைகளை எடுத்து வஜ்ராயுதத்துக்குத் தடவினான். அஃது ஈரமும் உலர்வும் இல்லாமல் முனிவர் கொடுத்த வரத்துக்கு மாறுபாடின்றியிருந்தது. அதனை அறிந்த விருத்திரன் உடனே கடலிற் புகுந்து மறைந்து போய் விட்டான்.

அப்புறம், இந்திரனுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. அவன் குருவைப் பணிந்து அசுரன் அழிவின் பொருட்டு ஆலோசனை கேட்டான். அவர் "விண்ணவர்க் கரசனே! உன் வஜ்ராயுதத்துக்கு அசுரனைக் கொல்ல ஆற்றல் அமைந்திருக்கவில்லை; நீ முதலில் புதிய வாயுதம் ஒன்று செய்து கொள்ளவேண்டும்; அதற்குத் ததீசி முனிவர் முதுகெலும்பு தான் தகுதி யுள்ளது; அதனை அவர் தரப் பெற்று ஆயுதம் செய்து கொள்; அப்புறம், கடல் நீரைத் தமிழ் முனிவரால் பருகப் பண்ணி, அசுரனைக் கண்டு பிடித்துக் கொல்" என்று கூறினார். இந்திரன் 'ஐயா! பரந்து விரிந்த கடற் பெருமைக்கும், குறு முனிவரின் உடற் சிறுமைக்கும் பார தூர

மான வேறுபாடு காண்கின்றதே?' என்று சொன்னான். குரு "அறி வற்றவனே! உன்னால் அவர் பெருமையை அறிய முடியாது; அவர் இவ்வொரு கடலை மாத்திரம் அன்று; அவசியம் நேருமானால், ஏழு கடல்களையும் கூட இமைப்புக்குள் எடுத்துப் பருகி விடுவார்; சீக்கிரம் சென்று செய் தொழிலைக் கவனி" என்று கட்டளையிட் டனுப்பினார்.

இந்திரன் அப்படியே புதிய வாயுதம் செய்து கொண்டு, தமிழ் முனிவரை வணங்கித் தன் கருத்தை விண்ணப்பித்துக் கொண்டான். அவர் அதற்குச் சிறிதும் தடை கூற வில்லை. இந்திரனோடு அப்பொழுதே கடற் கரைக்கு வந்து, கடல் நீர் அனைத்தையும் தவப் பெருமையினால் தமது தளிர்க் கரத்தில் திரட்டிப் பருகி விட்டார். அருந்தவர் செயல் ஆகண்டல னுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. பின்னர் அவன், கடலிற் புகுந்து விருத்திராசுரனைக் கண்டு பிடித்துக் கொன்றான். தமிழ் முனிவர் வந்து உதவி யிரா விட்டால், இந்திரனுக்குத் தன் பகைஞனை முதலில் கண்டு பிடித்திருக்கவும் முடியா தல்லவா! ஆதலால், ஒருவரைச் செய்யும் தொழிலைக் கொண்டு மதிக்க வேண்டுமே யன்றி, அவர்தம் உருவத்தை நினைந்து மதிக்க லாகாது.

—பாகவதம்

**உருவுகண் டெள்ளாமை வேண்டும்; உருள்பெருந்தேர்க்**
**கச்சாணி யன்ன நுடைத்து.**

## 68—வினை செயல்வகை :—கண்ணன் தூது

செய் தொழிலில் சோர்வை அடையாத அமைச்சன் அவ் வினையைச் செய்து முடிக்கும் திறமைக்கு வினை செயல்வகை என்று பெயர். தொழிலை மேற்கொண்ட வன் 'முடிப்போம்' என்ற துணிவு உண்டாகும் வரையில்

அதனைப் பற்றி விசாரித் தறிவதில் சோர்வடைய மாட்டான். அங்ஙனம் விசாரித் தறிந்து துணிவைப் பெற்றுக் கொண்ட பிற்பாடு, அவன் அவ்வினையைச் செய்யாமல் காலம் நீட்டிக்கவும் மாட்டான். காலம் நீட்டிப்பின், அதனைப் பகைவர் ஒற்றி யறிந்து, நிறைவேறாதபடி செய்து விடுவார்கள்; தனக்குப் பொருந்தி யுள்ள வலியாலும் காலத்தாலும் நீட்டித்துச் செய்யும் வினைகளை அறிந்து நீட்டிக்க விட்டும், கடுமெனச் செய்யும் வினைகளை அறிந்து கடுமெனச் செய்து முடித்தும், அரசர்க்கு உறுதி சூழ்வதுதான் அமைச்சன் கடமை யாகும்.

இன்னும் அமைச்சன் படை, பொருள், அரண் முதலான துணைக் கருவிகளில் பகைஞரைக் காட்டிலும், தான் வலியவன் ஒத்தவன் மெலியவன் என்று மூன்று வகைப் படுவான். தான் வலியவனான பொழுது வினையைப் போர் செய்து வெல்லவேண்டும். ஏனென்றால், போரில் பெற்ற வெற்றிதான் முற்றுப் பெற்ற வெற்றி யாகும். சாமம் தானம் பேதம் என்ற மற்ற மூன்றின் வெற்றிகளும் ஒத்தவ ரிடத்திலும், மெலியவ ரிடத்திலும் கிடைப்பன வாதலால், அவை சமயம் வாய்த்த பொழுது மாறிச் சென்று போகும். செய்யும் வினையையும், களையும் பகையையும், ஒருவன் முற்றிலும் செய்து முடிக்க வேண்டும். அவற்றில் குறை வைக்கக் கூடாது. நெருப்புப் பொறி தான் மிகவும் சிறியதா யிருக்கும் பொழுது, இருக்கும் இடமும் தெரியாமல் அடங்கிக் கிடந்து, துணை கிடைத்ததும் வளர்ந்து பெருகி எல்லா வற்றையும் எளிதில் எரித்துவிடுவது வெளிப்படை யானது.

ஒத்தவரிடத்தில் வினை செய்யும் பொழுது அவ்வினையில் அழியும் பொருளும் ஆகும் பொருளும் படையும் காலமும், இடனும் என்ற இவற்றை நன்றாக வெண்ணிப், பிழைபடாமல்

செய்து முடிக்கவேண்டும். சதுரர்கள், வலியவர் தம்மை நெருக்கி யெதிர்த்த பொழுது, தகுதியான சந்தி கூடுமானால், தம் மெலிவினை உணர்ந்து, அதனை இகழாமல் ஏற்றுக் கொள்வார்கள். சிநேகிதருக்கு இனியவற்றைச் செய்வதைக் காட்டிலும், பகைஞர்க்குப் பகையானவர்களை நட்பாக்கிக் கொள்வது சாலவும் நன்மை யாகும்.

முன்னர்ப், பாண்டவர் தமது அஞ்ஞாத வாசத் தவணையைக் கழித்து உபப்பிலாவியம் என்ற பட்டணத்துக்கு வந்திருந்தார்கள். அது விராட வரசனுக்கு உரிமை யானது. அபிமன்யுவின் மணத்தில் அவ்வரசன் தன் மகள் உத்தரைக்கு அந்தப் பட்டணத்தை ஸ்ரீதனமாகக் கொடுத்தான். ஐவரும் அங்கிருந்து கொண்டுதான் தூதர்களின் முகமாகத் துரியோதனன் எண்ணத்தைத் தெரிந்து கொண்டார்கள். அவர்கள் முதலில் அனுப்பின உலூக முனிவரிடத்தில் துரியோதனன் சொன்னவும், அப்புறம், சஞ்சயனிடத்தில் திருதராஷ்டிரன் சொன்னவும், ஒன்றுக் கொன்று முரண்பட்டிருந்த படியினால், அவர்கள் தங்களுக்குச் சுற்றமும் நட்புமான கண்ணபிரானை அனுப்பி, அரவக் கொடியோன் அந்தரங்கத்தை அறிய ஆவல் கொண்டார்கள்.

தாய விஷயத்தில் உங்கள் தீர்மானம் என்ன வென்று, கண்ணபிரான் ஐவரையும் தனித்தனியாய்க் கேட்டார். அப்பொழுது சகதேவனுக்கும் அவருக்கும் நடந்த சில சம்பாஷணைகளினால் பாண்டவர்களை அமரிற் காப்பது அவர்தம் கடமையாய் முடிந்தது. அப்புறம்தான், அவர் அத்தினபுரத்துக்குத் தூதனாய்ப் புறப்பட்டுப் போனார். அப்போது அவருக்கு இரண்டுவிதமான கடமைகள் ஏற்பட்டன. ஒன்று, சமரில் துரியோதனன் முதலானவர்களைக் கொன்று பாண்டவர் சபதங்களைப் பூர்த்தி செய்விப்பது; மற்றொன்று, சமரில் ஐவருக்கும் உயிர்ச்சேதம் நேர்வியாமல் காப்பாற்றுவது.

இரண்டும் நிறைவேற வேண்டும். அதன் பொருட்டுப் பாரதச் சண்டையில் அவர் பட்ட வருத்தத்தைப் பகர முடியாது. 'மெய் வருத்தம் பாரார்; பசி நோக்கார்' என்ற பாட்டு அவருக்கே முற்றிலும் அமைந்ததாய்ப் போயிற்று. காரிய சாதனத்தின் பொருட்டு அவர் செய்த வுபாயங்கள் பல. அவற்றுள் முக்கியமானவை அடியில் வருவன :—

அவர் அத்தினபுரம் செல்லும் பொழுது முதலில் விதுரர் வீட்டில் விருந் துண்டு, அதன் காரணமாக விதுரருடைய பெரிய வில்லை ஒடிப்பித்து, விதுரரையும் தீர்த்த யாத்திரைக் குப் போக்கினார்; பரித்தாமாவைப் படைத் தலைவ னாக்காமல் பேதப்படுத்திக் கெடுத்தார்; கர்ணனுக்குச் சகோர வாஞ்சை யை எழுப்பி, அரவக் கணையை மறுமுறை தொடாவண்ணம் தடுத்தார்; சண்டை தொடங்குவதற்குச் சகதேவன் சொல்லிய முகூர்த்தத்தை மாற்றி யமைத்துத் திரித்தார்; இராவானை அராக் கொடியோனுக்குக் களப்பலி நேர்வியாமல் கெடுத் தார். கர்ணன் கவச குண்டலங்களை இந்திரனைக் கொண்டு ஏற்பித்தார்; தனஞ்சயனுக்குத் தாம் சாரதியாகிக் குதிரைக் கடிவாளங்களைக் குலுக்கி நடத்தி நின்றார்; ஜயத்திரதன் வரத்தை அபிமன்யுவின் மீது செலுத்தினார்; கர்ணனிட மிருந்த சக்தி யாயுதத்தைக் கடோற் கசன்மீது போக்கப் பண்ணினார்; தாம் கர்ணனிடத்தில் பூசுரனாய்ச் சென்று அவன் புண்ணியப் பலன்களைப் பெற்றுத் திரும்பி வந்தார். பாம்புக் கொடியோன் மிருத சஞ்சீவி யென்ற மகா மந்திரப் பயனைப் பெற வொட்டாமல் தடுத்தார்; பரித்தாமா செய்த பாசறைச் சண்டையில் பாண்டவர்களைப் பொன்றவொட்டா மல் காத்தார்; இன்னும் இவைப் போன்ற எத்தனையோ அருஞ் செயல்களை யெல்லாம் அப்பொழு தப்பொழுது செய்து, அவர் தாம் மேற்கொண்ட தொழிலை மேன்மையாய் நிறைவேற்றினார். கண்ணபிரான் இராமற்போனால், பாரதச்

சண்டையில் பாண்டவர்கள் பெரிய வெற்றியைப் பெற்றிருக்க மாட்டார்கள். அவர்கள் ஐவரும் முதலில் உயிர் பிழைப்பதுவே உயர்ந்த காரியமா யிருக்கும். ஆதலால், நல்ல வமைச்சன் கண்ணபிரான் போல அரசர்க்கு ஆகும் காரியங்களை அறிந்து செய்தும், இடையூறுகளை யெல்லாம் எண்ணி விலக்கியும், புகழையும் பொருளையும் போற்றி வளர்க்கவேண்டும்.

—மகாபாரதம்.

**முடிவும் இடையூறும் முற்றியாங் கெய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல்.**

## 69—தூது :—அங்கதன்

தூது என்பது சந்தியின் பொருட்டும், வேறு பிரித்தலின் பொருட்டும், வேற்று வேந்தரிடம் செல்கின்றவரது தன்மையாம். தூது—தொழில் பற்றி வந்த பெயர். தூது செல்பவன் தூதன். தானாக வகுத்துக் கூறுகின்றவன் கூறியது கூறுகின்றவன் என்று தூதர் இருவகைப் படுவர். தூதன் இலக்கண மாவது, சுற்றத்தாரிடத்தில் அன்புடைமையும், உயர்குடிப் பிறப்பும், அரசர் விரும்பும் பண்பும் என்ற மூன்று மாம். தன் அரசனிடத்தில் அன்புடைமை, அவனுக்கு ஆவன வறியும் அறி வுடைமை, சொற்சோர்வின்மை என்ற மூன்றையும் தூதன் குணங்கள் என்று கூறுவார்.

இயற்கை யறிவும், கண்டவர் விரும்பும் கட்டழகும், கல்வியும் என்ற மூன்றையும் பெற்றிருப்பவன்தான் வேற்று வேந்தரிடத்தில் தூது செல்லத் தக்கவன். தன் அரசனுக்கு வெற்றி தரும் வினையைச் சொல்லத் தொடங்குகின்றவன் வேற்றரசர்க்கு வெறுப்பும் அலுப்பும் வாராதபடி, அவர் கேட்கும்படி தொகுத்துச் சொல்லியும், இன்னாத வற்றைச்

சொல்ல நேர்ந்தபொழுது அவர் சினத்துக்கு அஞ்சாமல், இனிய சொற்களைத் தொடுத்து மகிழச் சொல்லியும், காரியத்தை முடித்துவரவேண்டும். சதுரனாகிய தூதன் தான் சென்ற பொழுதிலேயே வேற்று வேந்தரிடத்தில் வந்த காரியத்தை விளம்பிவிட மாட்டான். இருவர் நிலைமையையும் அறிந்து, தன் சொல்லைக் கொள்ளும் காலத்தையும் இடத்தையும் எண்ணி, இப்படி யிப்படிச் சொல்லவேண்டும் என்று, தன்னுள் கற்பித்துக் கொண்டு சொல்லி, வெற்றி பெற்றுத் திருப்புவான்.

கூறியது கூறச் செல்லும் தூதனுக்குப் பொருள் காமங்களில் பற்றில்லாமையும், துணி வுடைமையும், உண்மையும் என்ற இவை இலக்கணங்க ளாகும். தன் அரசன் சொல்லி விட்ட வார்த்தையைச் சொல்ல வுரியவன் தனக்கு வரும் துன்பத்துக்கு அஞ்சித் தன் னரசனுக்குத் தாழ்வு தருகின்ற வற்றைச் சொல்ல லாகாது. அவ்வார்த்தை தன்னுயிர்க்கு முடிவை விளைப்பதானாலும், தன்னரசன் பெருமையை வேற்றரசர் சபையில் விடாமற் சொல்லி வர வேண்டும்.

ஆதிநாளில், இராமர் சீதையைச் சிறை மீட்கும் பொருட்டுக் கடலை அணைகட்டிக் கடந்து, குரங்குப் படைகளோடு சென்று, இலங்கையின் புறத்தில் தங்கி யிருந்தார். மூன்று நாட்களாகியும், இராவணனாவது அன்றி அவனைச் சேர்ந்தவர்களாவது 'நீங்கள் யார்? இங்கு ஏன் வந்து தங்கி யிருக்கிறீர்கள்?' என்று அவரைக் கேட்க வரவில்லை. அதனால், இராமர் இராவணன் எண்ணத்தைத் தூதின் முகமாகத் தெரிந்து கொள்ள விரும்பினார்.

அவர் முதலில் 'யாவரைத் தூதனுப்பலாம்?' என்று ஆலோசனை செய்தார். 'சுக்கிரீவன் அரசன்; செல்வதற்கில்லை; அநுமானோ முன்னொரு தடவை சென்று திரும்பினவன்; பின்னும் செல்வது பெருமை யாகாது; ஜாம்பவான்

வயது முதிர்ந்தவன் ; தனிச் சண்டைக்குத் தாளான் ; மற்றவர்களுக்குள் அங்கதன் செல்வதுதான் அனைத்திலும் சிறந்தது' என்று தமக்குள் தீர்மானித்துக் கொண்டு அங்கதனை நோக்கினர். உடனே அங்கதன் இராமரைப் பணிந்து அடக்க வொடுக்கத்துடன் எதிரில் வந்து நின்றான். இராமர் "வீரர் சிங்கமே! நீ இராவணனைக் கண்டு 'நாங்கள் மதிலை வளைந்து மூன்று நாட்கள் ஆயின ; பகைஞர் மதிலை முற்றுகை செய்திருக்கையில், அவர்களுக்குப் போர் கொடாமல் பதுங்கி யுறைவது பராக்கிரமம் ஆகாது ; சீதையை விடுகின்றாயா? அல்லது சண்டையில் படுகின்றாயா? இரண்டில் ஒன்றைத் துணிந்து செய்குவாய்' என்று சொல்லி, அவன் கருத்தைக் கதுமெனத் தெரிந்து கொண்டுவா!" என்று கூறினர்.

அங்கதன் இராமர் கோதண்டத்தில் தொடுத்த கொடுஞ் சரத்தைப்போலக் கனவேகமாய்ச் சென்று, பாஸ்கரனும் புகுந் தறிந்திராத அந்தப் புது பட்டினத்தில் நுழைந்தான். அங்கு உள்ளவர் அனைவரும் அவனைக் கண்டு பயந்து 'அநுமான்! அநுமான்' என்று, சொல்லி வாய் குளறிக்கொண்டு, ஒருவர் போனவழி ஒருவர் போகாமல், ஓடத் தொடங்கிவிட்டார்கள். அங்கதன் அநுமானுடைய வீரச் செயலில் வியப்பு மேற் கொண்டு, தேவரையும் ஏவல் கொள்கின்ற இராவணன் எதிரில் சிங்கம் போலச் சென்று நின்றான்.

தசக்கிரீவன் கோபத்தினால் நெருப் பெழ நோக்கி, 'யாவன் நீ? இங்கு வந்த காரியம் என்ன? இவர்கள் உன்னை நெருக்கித் தின்று விடுவதன் முன்னர்த் தெரிவி' என்று வினவி னன். அங்கதன் "அரக்கர் தலைவனே! நான் இராமர் தூதன் ; அவர் சொல்லி யனுப்பின இரண்டொரு செய்தி களை உனக்குத் தெரிவிக்க வந்திருக்கிறேன்" என்று சொன் னன். அசுரவரசன் "சிறு குரங்கே! இராமன் மனிதன் ; அதனிலும் அரசிழந்தவன் ; இன்னும் சுக்கிரீவ னிடத்தில்

சரணம் புகுந்தவன்; அந்தோ! உனக்கு வேறு ஒருவரும் தலைவனுவதற்குத் தகுதி யற்றுப் போனார்களா? சிவ பெருமானும் திருமாலுமே யானாலும் கூட என் முன்னர் வருவதற்கு அஞ்சி யகல்வார்கள்; கடலைக் கடக்க வகை யில்லாமல், கல்லைப்படுத்து வந்த காகுத்தனுக்குத் தூது சொல்ல வந்த நீ யார்? சிக்கிரம் சொல்" என்று மீட்டும் கேட்டான்.

அங்கதன் "சூரர் தலைவனே! நான், முன்னர் ஒரு இராவணன் என்பவனை வாலில் சுற்றிக் கொணர்ந்து 'பத்துத் தலைப் பூச்சியைப் பார்' என்று சொல்லி, குழந்தைப் பருவத்தில் என் முன்னர் விட்டு விளையாட்டுக் காட்டியவனும், திருப்பாற் கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தம் அளித்தவனும், இந்திரன் மகனுமான வரத்தில் மிகுந்த வாலியின் மைந்தனுவேன்; என்னை அங்கதன் என்று அனைவரும் அழைப்பார்கள்" என்று சொன்னுன். இராவணன் "சிறுவனே! பயப்படா திரு; வாலி என் நண்பன்; நீ எனக்கு மகன் முறை யாக வேண்டும்; நான் வாநர வரசை உனக்கு உரிமை செய்விக்கிறேன்; இனி நீ, இராமனிடம் செல்லற்க; நான் சீதையையும் உன்னையும் சேரப் பெற்றுக் கொண்டு விட்டேன்; அந்த இரண்டு நரர்களும் இன்று நாளைக்குள் என் வீரர்களினுல் இறந்து போய்விடுவார்கள்; உன் கவலையை ஒழி" என்று கூறினுன்.

அங்கதன் "நீ எனக்கு அரசு தருவது ஒரு சிறிய நாய் சிங்கத்துக்குச் சிங்காதனத்தைச் சொந்த மாக்குவது போலாகும்" என்று சிரித்துக்கொண்டு சொன்னுன். அசுரேந்திரனுக்கு அதனைக் கேட்டதும் அளவு கடந்த ஆத்திரம் மூண்டது. அவன் அடங்காச்சினம் கொண்டு 'துடுக்கு நிறைந்த குரங்கே! தூது வந்தபடியினுல் தப்பிப் பிழைத்து விட்டனை; இனித் தாமதம் செய்யாமல் வந்த காரியத்தை விரைவில் வெளியிடு' என்றுன்.

அங்கதன் "நாங்கள் உன் மதிலை வளைந்து மூன்று நாட்க ளாயின; சாமர்த்தியம் இருந்தால், சண்டைக்கு வர வேண்டும்; சாத்திய மில்லாவிட்டால், சரணம் அடைய வேண்டும்; உன் நிலைமையை உன்னிப் பார்க்கும்போது, போர் புரிபவனாகப் புலப்படவே யில்லை; ஏனென்றால், உன் பாட்டியான தாடகையைக் கொன்றும், மாமன் மாரீசனை வதைத்தும், சகோதரி சூர்ப்பணகையின் மூக்கரிந்தும், கரன் முதலான சகோதரர்களைக் கொன்றும், உன் பட்டினத்தை நெருப்பிட்டுக் கொளுத்தியும், புத்திரன் அக்ஷனைப் பக்ஷணம் பண்ணியும், மகுடம் பதத்தையும் மண்ணிற்படப் புரட்டியும் கூட, போர்க்குப் புறப்பட்டு வந்தா யில்லை; மானத்தை வானத்தில் ஓட்டி, இன்னமும் கிரீடம் சுமந்து கொலுவில் அமர்ந்திருக்கின்றனை; வாழ விரும்பினால், தேவியை விடு; வெல்ல விரும்பினால், சண்டையைத் தொடு" என்று சுடச்சுடச் சொன்னான். அப்படிச் சொல்வதனால், தனக்கு உண்டாகும் அபாயத்தை அவன் அற்பமும் ஆலோசிக்க வில்லை.

இராவணன் பற்களைக் கடித்து "இந்தத் துடுக்குக் குரங்கைத் தொடர்ந்து பற்றுங்கள்" என்று இரைந்து கூவினான். உடனே படைவீரர்கள் வந்து, அங்கதனை வளைந்து கொண்டார்கள். அங்கதன் அவர்கள் அனைவரையும் அரை நாழிகைக்குள் அதம் செய்து கொன்று, அட்டஹாஸம் பண்ணிச் 'சீக்கிரம் சண்டைக்கு வந்து சேர்' என்று சொல்லி, விண்ணில் விரைந்து திரும்பினான். ஆதலால், தூதர்கள் அங்கதனைப் போலத் தைரியத்துடன் உயிருக்குத் துணிந்து, நின்று காரியம் முடிக்க வேண்டும். —இராமாயணம்.

இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாம் தூது.

## 70—மன்னரைச் சேர்ந்தொழுகல் :—திருவாதவூரர்

அமைச்சன் அரசரை அணுகி நடக்கும் தன்மைக்கு மன்னரைச் சேர்ந்தொழுகல் என்று பெயர். மிக அகலாமலும், மிக அணுகாமலும் இருந்து, தீக் காய்கின்றவர் போல அமைச்சன் இயற்கையில் மாறுபடுதலை யுடைய அரசரிடத்தில் மிக நீங்குவதும், மிக அணுகுவதும் செய்யாமல், இடையில் நின்று தொழில் செய்து வர வேண்டும். அமைச்சன் அரசர் விரும்புகின்றவற்றைத் தான் மறந்தும விரும்பக் கூடாது. அவைதாம், அரசர்க்குச் சிறப்பாக வுரிய, உண்பன உடுப்பன அணிவன நுகர்வன பெருமை புகழ் முதலியன வென்பர்.

தன்னைக் காக்கக் கருதுகின்றவன் அரசர் அந்தப்புரத்தில் பழகல், அவர் அரும்பொருள் வெளவல், அவர் பகைஞர் பக்கம் சாரல் என்ற இவைபோன்ற பெருங் குற்றங்களை மறந்தும் செய்யமாட்டான். கடன் கொண்டவன் தோன்றுந்தோறும் தோன்றுந்தோறும், அவன் கொண்ட பொருள் கொடுத்தவன் உள்ளத்தில் தோன்றி யுறுத்துவதுபோல, அரசர் அவற்றில் ஐய முற்ற பொழுது, அவனைக் காணுந்தோறும் காணுந்தோறும், அந்தக் குற்றம் தோன்றி வருத்துமாதலால், அப்படிப்பட்ட குற்றங்களை அமைச்சன் செய்யாதிருக்க வேண்டும். இன்னும் அரசர் கண்காணப் பிறர் செவியிற் சொல்லுதலையும், சிரித்தலையும் செய்யக் கூடாது. அமைச்சன் அரசருக்குக் காரியம் சொல்லும்பொழுது கூடக் குறிப்பை அறிந்தும், காலத்தை நோக்கியும், சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற விதி பிசகாமலும் சொல்லி வர வேண்டும். பயன் பெரியதும், அரசர் விரும்புவதுமான காரியங்களை அவர் கேளா தொழிந்தாலும், வலுவிற் சென்று சொல்லி, முடித்து வருவதுவே அமைச்சன் கடமையாகும்.

அமைச்சன்தான் நன்கு மதிக்கப்பட்டிருந்தாலும், பிறரிடத்தில் அரசருக்குப் பொருந்திய கவுரவத்துடன் அவரைச் சொல்ல வேண்டுமேயன்றி, அரசர் வயதில் இளைஞர் என்றும், தனக்கு இன்ன முறையினர் என்றும், எக்காரணத்தைக் கொண்டும் அவர் பெருமை குலையச் சொல்லக் கூடாது. ஏனென்றால், அரசர் கோபிக்கும் பொழுது அது வரையில் அவ்வமைச்சன் மீது கொண்டிருந்த பழமை கேண்மை உரிமை முதலிய ஒன்றையும் கருதாமலும், கண்ணோட்டம் கொள்ளாமலும், கடுந்தண்டனை இயற்றுவார். அரசர் பழக்கம் சாணையில் வைத்துத் தீட்டிக் கூரிய தாக்கின வாளின் முனையை நாவால் நக்குவதோடு ஒக்கும் என்று உயர்ந்தவர் விளம்புவர்.

முன்னர்ப் பாண்டிய நாட்டில் வாதவூர் என்ற பதியில் அமாத்திய அந்தணர் வகுப்பில் ஒருவர் தோன்றினர். அவருக்கு வாதவூரர் என்கிற பெயர் வழங்கிற்று. அவர் கற்க வேண்டிய கலைகளைக் குறை வில்லாமல் கற்று, நல்லொழுக்கம் கொண்டு நடந்துவரும் நாளில், மதுரையை ஆண்டுவந்த அரிமர்த்தன பாண்டியன் என்பவன் அவரது கல்விச் சிறப்பையும் கடவுள் பக்தியையும் கேட்டு, அவரை வருவித்துத் தனக்கு முதன் மந்திரி யாக்கிக் கொண்டான். வாதவூரர் அரசுக்கு ஆவன செய்யும் இயல்பினாலும், பகைவரை அழிக்கும் பண்பினாலும், குடிகளை அணைக்கும் அன்பினாலும், கொற்றவனுக்கு உயிரினும் இனியராகிச், சிறப்பும் செல்வமும் பெருமையும் பெற்று விளங்கினர். அரசனுக்கு அவர் தொட்டவை யாவும் தங்கம் ஆயின. சொல்வன யாவும் செல்வம் ஆயின. அவர் அமைச்சுத் தொழிலில் அமர்ந்த பிற்பாடு, அவ்வரசனுக்கு ஆளுகை செழித்து ஆண்மை மிகுத்தது. முடிவாய்ச் சொல்வோமானால், வாதவூரர் தமது ஒழுக்கத்

தினால் அரிமர்த்தன பாண்டியனுக்கும், அவன் ஆளுகைக்கும் மிகவும் அவசியமானவர் ஆயினார்.

இங்ஙனம் சில வருஷங்கள் சென்றன. ஒரு சமயத்தில் அரசன் குதிரைப் படைகளில் பல இறந்தும், மூத்தும், நலிந்தும் குறைந்து போயின. அதனால், அவ்வரசன் புதிய குதிரைகளைக் கொள்ள விரும்பினான். அவனது கொற்கைத் துறைமுகத்தில் வருஷந்தோறும் வெளித் தேசங்களி லிருந்து பல வாம்பரிகள் வந்து, விலை பட்டு வந்தன. அரசன் அங்குச் சென்று வாம்பரி கொணரும்படி வாதவூராருக்குச் சொன்னான். அமைச்சர் திலகர் ஒட்டகங்களின் மீதும், கோவேறு கழுதைகளின் மீதும், கோடிக் கணக்கான திரவியங்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டுத், திருப் பெருந்துறை என்னும் தலத்துக்குச் சென்றார்.

அங்கு முக்கண் மூர்த்தி அந்தண வடிவத்தோடு, பரிசுத்தமான ஒரு குருந்த மரத்தடியில் தம்போலும் வேற்றுருப் புனைந்த சீடர் சிலருக்குச் சிவஞான போதத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார். வாதவூரார் அவரை அடைந்து, தமக்கும் அந்நூலை உபதேசம் செய்யவேண்டும் என்று பணிய, அவ்வந்தணர் அவருக்குத் தீக்ஷை செய்து உபதேசமும் பண்ணினார். அதுமுதல் வாதவூரார் ஆத்மஞானத்தை அடைந்து, அரசன் தொழிலை மறந்து, குதிரையின் பொருட்டுக் கொணர்ந்த செல்வங்களை யெல்லாம் சிவ பெருமானுக்குத் திருக்கோயில் எழுப்புவதிலும், திருக்குளம் அமைப்பதிலும், திருவிழாச் செய்வதிலுமாகச் செலவிட்டுக் கழிக்கத் தொடங்கினார்.

அழுக்காறு கோள் முதலான குற்றங்கள் உலகத்தில் என்றும் இருந்து வருகின்றன வல்லவா! அவற்றிற்கு அடிமையான அற்பர் சிலர் அரசனிடத்தில் வாதவூரார் மீது வம்பு சொல்வதனையே தங்களுக்கு வேலையாய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் சொற்களை மெள்ள மெள்ள அரசன் அங்கீ

கரிக்கும்படி யாயிற்று. அரிமர்த்தன பாண்டியன் அவர்கள் மொழியில் ஐயங்கொண்டு, உண்மையை உணர்ந்து வரும்படி சில வொற்றர்களை ஏவினான். அவர்கள் திரும்பி வந்து, வாதவூரரது சிவ பக்தி முதிர்ச்சியையும், சிவாலய நிகழ்ச்சியையும், செங்கோ லரசனுக்குச் சொல்லிப் போனார்கள். அரசன் கட்டளை கடந்த குற்றத்தின் பொருட்டு, அவரை உடனே கட்டிப் பிடித்துக் கொணரும்படி சில வீரர்களை அனுப்பினான். அவர்கள் சென்று, அமைச்சர் தலைவரைப் பணிந்து, அரசன் கட்டளையை அறிவித்து நின்றார்கள். வாதவூரர் 'கடவுள் செயலின் வண்ணம் காரியம் நடைபெறும்' என்று நினைந்து அவர்களோடு மதுரை வந்து சேர்ந்தார்.

அரிமர்த்தன பாண்டியன் வாதவூரர் மீது முன்னர்க் கொண்டிருந்த அன்பு முதலிய ஒன்றையும் ஆராய்ந்து பாராமல், அவரைச் சபையில் நிற்பித்துக் 'குதிரைகள் இன்னமும் வந்து சேரவில்லை; எடுத்துச் சென்ற பொருள்கள் என்னவாய்ப் போயின?' என்று கடுமையாய்க் கேட்டான். அமைச்சர் திலகர் கடவுள் கட்டளையின் வண்ணம் 'குதிரைகள் கொண்டாயின; இப்பொழுது நாட்கள் நல்ல வல்ல; ஆவணி மூலத் தன்று அசுவங்கள் வந்து சேரும்' என்று சொன்னார். அரசன் ஒற்றர்களால் அவ்வளவும் பொய் யென்று அறிந்து, அவரை வைகை யாற்று மணலில் வெயிலில் நிற்க வைத்தும், கைக்குக் கிட்டியிட்டும் காற்குத் தளை பூட்டியும், முதுகில் கல்லைச் சுமத்தியும், பலவிதமாக வருத்தப்படுத்தினான். அந்தப் பாண்டியன் வாதவூரர் அது வரையில் அரசுக்கும் தனக்கும் செய்துள்ள அருந் தொழில்களை அற்பமும் போற்ற வில்லை. அவர் வந்த பின்னர்த் தனக்கு உண்டான மேம்பாட்டையும் மதிக்க வில்லை. முன்னர்த் தான் அவரைப் பிரியா திருந்த பழமையையும் பாராட்ட வில்லை. அவர் அற வழியில் தனக்குத் திரட்டிக் கொடுத்த அரும் பொருள்

களையும் ஆலோசிக்க வில்லை. அவர் முன்னர்த் தனக்குத் திரட்டிக் கொடுத்தவற்றில் மிகவும் சிறிய பாகத்தைத்தான் கடவுள் திருப்பணிக் கென்று, அவர் அப்போது செல விட் டிருக்கிறார். திருக்கோயில் எழுப்புதல் முதலான அறக் கொடைகள் தான் செய்யும் கடமை என்பதனையும் அவன் கருத்திற் கொண்டா னில்லை. தன்னால் முடியுந்தனையும் வாத வூரருக்குச் சிக்ஷை விதித்துப் பார்த்து விட்டான். ஆதலால், அரசரிடத்தில் ஒருவன் மிகவும் நெருக்கமாய்ப் பழகி யிருந் தாலும், சமயம் வந்த பொழுது அவர்கள் அவற்றை எண் ணவே மாட்டார்கள்.

—திருவாதவூரர்ப் புராணம்.

பழைய மெனக்கருதி பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

## 71—குறிப்பறிதல் :—நாவரசர்

குறிப் பறிதலாவது அரசன் கருதிய வதனை அவன் கூறுமலேயே அறிந்துகொள்ளுதலாம். இஃது அமைச் சருக்கு அவசிய மானது. அரசன் குறித்த கருமத்தை அவன் கூறு திருக்கையிலேயே அறிந்து கொள்ளும் அமைச்சன் அவனுக்கு ஆபரணம் போன்றவன். பிறர் முகக் குறிப்பினால் அவர் நினைத்த வற்றை உணரும் அமைச்சனை நாடு, பொருள், யானை, குதிரை, முதலான வற்றில் அவன் விரும்பும் ஒன்றைக் கொடுத்தாயினும் அரசன் தனக்குத் துணை கொள்ள வேண் டும். கண்கள் தமது பார்வையினால் பிறர் குறிப்பினை உள்ளபடி உணராமற் போனால், அவை முகத்தில் இருந்தும் பயன் இல்லையா தன்றோ? ஒருவன் மற்றொருவனை உவத்தலும் காய்தலும் செய்தால், முகம் முற்பட்டு நின்று, அடுத்த பொருளின் நிறத்தை அடக்கிக் காட்டும் பளிங்குபோல,

அவன் மனத்தில் இருப்பதனை வெளியிட்டுக் காட்டுகின்ற தன்மையில் இருப்பதனால், அம்முகத்தைக் குறிப்பறியும் கருவியென்று கூறுகின்றார்கள். உலகத்தில் குறை யுறுகின்ற வர் தம்மனத்தை அறிந்து குறை தீர்க்கவல்ல அறிஞரை வள்ள லாகப் பெற்றால், அக்குறை யுறுகின்றவர்கள் தம் முகத்தை நன்றாய் நோக்கும் வண்ணம் அவர் எதிரில் நின்று குறை தீரப் பெறலாம். இவ் வருமையை நினைந்து தான் போலும் 'சொல்லாமலே பெரியர் செய்வர்' என்றார் ஔவையார்.

பிறர் மனத்தில் நிகழ்வதனை ஐயப்படாமல் நிச்சயமாக வுணர வல்லவன் உடம்பு முதலிய வற்றால் மனிதனே யானாலும், நினைத்தவற்றை உணரும் தெய்வத் தன்மையை உடைமையினால், அவனைத் தெய்வத்தோடு சேர்த்து மதித்துக் கொள்ளவேண்டும். தொழில், சொல், முதலானவற்றைப் பிறர் கருத்தை அளக்கும் அளவைகளாகக் கொண்டிருந்தா லும், அவையாவும் அறி வுள்ளவர்களால் மறைக்கப்பட்டுப் போகும். கண் மனத்தோடு கலத்தலால், அங்ஙனம் மறைக்கப் பட்டுப் போவதில்லை.

முன்னர்ச் சோழ மண்டலத்தில், திங்களூர் என்ற கிராமத்தில், அந்தணர் வகுப்பில் அப்பூதி யென்று ஒரு அடி யவர் இருந்தார். அவர் சிவ பக்தியிலும் அடியவர் பக்தியிலும் சிறந்தவர். செல்வத்தில் மிகுந்தவர். தாம் சைவ சமயாசாரிய ரான திரு நாவுக் கரசரை நேரில் காணா திருந்தாலும், 'அவ ருக்குச் சூலை நோய் நீங்கக் கடவுள் அருள் செய்தார்' என் றும், 'சமண வரசன் அவரைக் கல்லிற் கட்டிக் கடலில் தள் ளிய பொழுதும், நீற்றறையில் தள்ளி நெருப்பிட்டபொழு தும், கடவுளை முன்னின்று காப்பாற்றினார்' என்றும், 'அவர் கடவுள் திருப்பதி தோறும் சென்று பாமாலை புனைந்து, பல விதமான திருத்தொண்டுகள் செய்து வருகிறார்' என்றும், பலர் முகமாகக் கேட்டு, அவர் பெயரால் தண்ணீர்ப் பந்தல்

தாபித்தும், அன்ன சத்திரம் அமைத்தும், தம் புத்திரனுக்கு அவர் பெயரைச் சூட்டியும், அன்பு செய்து வந்தார்.

சில நாட்களுக்குப் பின்னர்த் திருநாவுக் கரசர் சிவ தலந் தோறும் யாத்திரை செய்து கொண்டு, திங்களூரை அடைந்தார். அங்குள்ளவர் அப்பூதி யடிகளின் அன்பையும், அறத்தையும், நாவுக்கரச ரிடத்தில் நவின்று வணங்கினார்கள். உடனே நாயனார் பரபரப்போடு சென்று, அப்பூதி யடிகளைக் கண்டு வணங்கினார். அடிகள் ஆநந்தக் கடலில் அமிழ்ந்தி "அடியன் பிறப்பு இன்றுதான் பயன் பெற்றது; அடியனும், அடியன்றன் உடைமைகளும், எத்தனையோ வாண்டுகளாகத் தங்கள் பொருளா யிருக்கின்றன; தங்கள் திருவடி தீண்டப் பெற்ற படியினால், இந்தச் சிறு குடில் இன்று கைலாயத்தைக் காட்டிலும் கோடி மடங்கு அதிகமாய்ப் போயிற்று" என்று சொல்லிப் புகழ்ந்தார்.

நாவுக் கரசர் "நண்பரே! கடவுள் பெயரை யெழுதி அறச் சாலை அமையாமல், மிகவும் அற்பனாகிய அடியேன் பெயரை அமைத்து அறவினை செய்யக் காரணம் என்ன?" என்று கேட்டார். அப்பூதி யடிகள் "ஐயனே! கடவுள், அடியவர்க்கு எளியவர்; அடியவர்களின் பொருட்டு அவர் எல்லாத் தொழில்களையும் வெறுப் பின்றி இயற்றுகின்றவர்; அடியவர்களோ வென்றால், கடவுளை யன்றி வேறு கனவிலும் கருதாதவர்கள்; அவர்கள் உண்பன, உடுப்பன, பேசுவன, பூசுவன யாவும் கடவுள் தொழில்களே யாகும். அதனால், அடியவர் பெயரிற் செய்வன வெல்லாம் ஆறு கொள் சடிலத்து அண்ணலார் பெயரிலேயே செய்தனவாக அமைந்து போகின்றன. அடியவர்க்கும் கடவுளுக்கும் அடியேன் மனத்தில் சிறிதும் வேறுபாடு விளங்க வில்லை; காரணம் சொல்லத் தெரியாமலேயே அடியேனுக்கு ஆதி நாள் முதல் தங்கள் மீது அன்பு அதிகரித்து வருகின்றது; அதன் பொருட்டுத்

தான் அறச் சாலைகளைத் தங்கள் பெயரில் அமைத்து வந்திருக்கிறேன்" என்று சொன்னார்.

அப்புறம், அப்பூதி யடிகள் நாவுக் கரசருக்கு அன்று, தம் இல்லத்தில் விருந்தளிக்க ஏற்பாடு செய்திருந்தார். சமையற் றொழில் யாவும் சித்தமாய் விட்டன. அப்பொழுது அடிகள் தமது புத்திரனை விளித்துக் "குழந்தாய்! அடியவர்க்கு அமுது படைப்பதற்கு வாழை யிலையை விரைவிற் கொண்டுவா!" என்றார். அச் சிறுவன் கொல்லைக்குச் சென்று இலை யறுக்கும் பொழுது அவ்விலையில் பதுங்கிக் கிடந்த பாந்தள் ஒன்று அவன் விரலிற் கடித்து மறைந்து போய் விட்டது. சிறுவன் இரைக்க விரைக்க இலையுடன் வந்து பாம்பின் செய்தியைப் புகன்று, பாரில் விழுந்து மாண்டான். அடிகளும் அவர் மனைவியும் அவனை எடுத்து ஒரு இருட்டறையில் கிடத்தி, அப்ப மூர்த்திக்கு இலைக் கலம் விரித்து அன்னம் பரிமாறினார்கள்.

நாவுக் கரசர் தாம் உண்ணப் புகு முன் 'அந்தணர் தலைவரே! சிறுவன் எங்கே? அவனை விரைந்து தருவியுங்கள்' என்றார். அந்தணர் 'அவன் இப்பொழுது உதவான்; அகாலம் ஆகின்றது; தாங்கள் அமுது செய்தருளுங்கள்' என்று சொன்னார். நாயனார் அடிகளின் உள்ளக் குறிப்பினால் அந்தப் பிள்ளைக்கு ஏதோ சொல்லை நேர்ந்துள்ளதென்று தெள்ளிதின் அறிந்து கொண்டு 'உண்மையை உரையுங்கள்' என்று நிர்ப்பந்தித்தனர். அந்தணர் மறைக்க வகையில்லாமல், அதன்மேல் மெள்ள மெள்ள மகன் செய்தியை விளம்பினார். நாவுக் கரசர் அவனைத் திருமுன் கொணருவித்து, ஆலம் உண்ட கண்டன் மீது அழகிய பத்துச் செய்யுள் பாடி அவனுக்குத் திரும்பவும் உயிர் வரப் பண்ணினார். அதனைக் கண்டவர் அனைவரும் "அற்புதம், அற்புதம்" என்று ஆநந்த வருவி சொரிய, அப்ப மூர்த்திகளின் அடியில்

விழுந்து பணிந்தார்கள். மகன் மடிந்த செய்தியை அந்தண ரும் அவர் மனைவியும் வாய் விட்டுச் சொல்லா திருந்தும் கூட நாவுக் கரசர் குறிப்பினால் அறிந்து உயிர்பெறச் செய்த பெருமை மிகவும் உயர்ந்த தல்லவா! ஆதலால், ஒருவர் மனத்தில் இருப்பவற்றை இங்கிதங்களினால் தெரிந்து கொண்டு காரியம் செய்கின்றவர்களை அறிந்து நட்புக் கொள்ள வேண்டும்.

—பெரிய புராணம்.

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

## 72—அவை யறிதல் :—களவியற் பொருள்

அவை அறிதலாவது அரசனோ டிருந்த சபையின் தன்மையை எண்ணி யறிதலாம். இது மன்னரைச் சேர்ந்து ஒழுகும் அமைச்சருக்கும், தூதருக்கும், பண்டித ருக்கும் அவசிய மானது. அவர்கள் செஞ்சொல், இலக்கணச் சொல், குறிப்புச் சொல் என்ற சொற்களின் பிரிவுகளை நன்றாய்ச் சோதித்தறிந்து, அவற்றில் அப்பொழுதைக்கு ஆகாதனவற்றை அகற்றி, ஆவனவற்றைத் தெரிந்து சொல் கின்ற வன்மையையும் கூடக் கொண்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட சதுரர்கள்தாம் அவையின் தன்மையை அறிந்து ஆராய்ந்து சொல்வார்கள். அவை என்பது இட வாகு பெயராகி அதில் உள்ளவர்களைக் குறிக்கின்றது. அவர்கள் தம்மிலும் மிக்கவர், ஒப்பவர், தாழ்ந்தவர் என்று மூவகைப் படுவார்கள்.

அவையின் அளவை அறியாமல் சொல்லுகின்றவர் தம் காரியத்தைக் கெடுத்துக் கொள்வதோடு அவமதிப்பையும்

ஆபரணமாய்ப் பூண்பார்கள். அறிவிற் பெரியவர் குழுமின சபையில், தாம் அறிஞராக நின்று சொல்வதுவும், அறிவிலி களின் சபையில் அவர்களிலும் தாம் அறிவிலிகளாக நின்று. தாழ்வதுவும், அவை யறிந்தவர் இலக்கணங்களாம். தம்மைக் காட்டிலும் உயர்ந்தவர் சபையில் முதலிற் சொல்லுத லால் வரும் குற்றத்தையும், அங்ஙனம் சொல்லாக்கால் வரும் ஏற்றத்தையும், நன்றாக வறிந்து, தாம் ஒன்றனையும் முற் பட்டுச் சொல்லா திருக்கின்ற அடக்கமானது உத்தமர்களால் உயர்ந்ததென்று உரைத்துக் கொள்ளப்படும்.

நூற் பொருள்களையும் அவற்றின் மெய்ம்மையையும் உணர வல்ல அறிஞர்களின் சபையில் சொல்லவல்லர் ஒரு வர், தாம் சொல்வதில் தவறுவது வீடெய்துவதற்கு நன்னெறி யில் நின்றவன் அந்நெறியினின்றும் விலகி, நிலை தளர்ந்து வீழ்வதற்குச் சமான மாகும. குற்ற மற்ற சொற்களை ஆராய் தலில் வல்ல ஒத்தவர் சபையில் கற்று வல்லவர் சொல்லவும் வல்லவராகிச் சொல்வது, தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்தியில் நீரைச் சொரிந்தாற் போல, அவர் கல்வி யாவர்க் கும் விளங்கிச் சிறந்து பொலியும். நல்ல பொருள்களைச் சொல்லி, வினை முடிக்க வல்லவர் அற்பர் சபையில் அவற்றை மறந்தும் சொல்ல மாட்டார்கள். அங்ஙனம் சொல்வது தூய்மை யல்லாத முற்றத்தில் கவிழ்த்த அமிருதத்தைப்போலப் பயன் படாமற் போகும்.

நெடுங் காலத்துக்கு முன்னர் மதுரைப் பட்டணத்தில் உண்டான ஒரு வறகடம் காரணமாகச் சங்கப் புலவரும் குடி களும் வேற்றுத் தேயங்களுக்கு விரைந்து சென்றுவிட்டார் கள். அந்தப் பெரும் பஞ்சம் பன்னிரண்டாண்டு வரையில் அந் நாட்டை வருத்தி வந்தது. அப்புறம், மழை பொழிந்து பஞ்சம் தெளிந்தது. நாடும் செழித்தது. வேற்று நாடு சென்றவர் களும் மெள்ள மெள்ள வந்து சேர்ந்தார்கள். கைத் தொழி

லும் பயிர்த் தொழிலும் முன்னர்ப்போலச் சிறந்தன. சங்கப் புலவர்களுள் எழுத்து வல்லவரும் சொல் வல்லவரும் மாத் திரம் திரும்பி வந்து விட்டார்கள். பொருள் வல்லவர்களில் ஒருவராவது வந்து சேர வில்லை. அவர்கள் எங்குச் சென்றார் களோ? என்ன வானார்களோ? எந்தக் காரணத்தினாலோ அவர் செய்தியைச் சொல்வாரும் கூட அங்கு அரியராய் விட் டார்கள். அரசன் அதற்கு அகம் வருந்தி "அந்தோ! பொருள் பெறுவதன் பொருட் டல்லவா எழுத்தையும் சொல்லையும் எண்ணித் தெளிகின்றது? பொருள் வல்லவர் இல்லை யென்றால், அவ்விரண்டிலும் வல்லவர் இருந்து செய்வ தென்ன? அடியவர்க்கு எளியவராகிய அவிர்மதிக் கடவுள்தாம் அதற்கு ஒருவாறு அருள் புரியவேண்டும்" என்று எண்ணி வருந்தி யிருந்தான்.

அப்பொழுது ஒருநாள் சோமசுந்தரக் கடவுளின் கருப்பக் கிருகத்தில் அர்ச்சகன் அலகிடும்பொழுது பொருளதி காரம் எழுதின மூன்று செப்பேடுகள் அவன் காணக் கிடைத் தனன். அரசன் அதனைக் கைக்கொண்டு கடவுள் அருளிய தென்று கரையற்ற மகிழ்ச்சி பொங்கப், புலவர்களிடம் தந்து 'நீங்கள் இதனைக் கொண்டு சென்று பொருள் கண்டு வாருங் கள்' என்று, சொல்லி யனுப்பினான். நல்லிசைப் புலவர்கள் நாற்பத் தொன்பதின்மரும் அந்நூலைப் போற்றிக்கொண்டு போய், ஆளுக் கொரு புத்துரையை எழுதி விட்டார்கள்.

எழுதியும் ஆவ தென்ன? ஒவ்வோ ருரையும் ஒவ்வொரு விதமா யிருந்தது. அவ்வுரைகளில் எவ்வுரை சிறந்த தென்று அவர்கள் எண்ண முடிய வில்லை. அதனை எண்ணித் தெளிவிப் பதற்கு வேறொருவர் வேண்டிய தாயிற்று. தெளிவிக்கின்றவர் அந்தப் புலவர்களுக்கும் அதிகமாய்ப் படித்திருந்தா லன்றி, அவற்றில் உயர்ந்த வொன்றை உணர்ந்து சொல்ல முடியாது. அந்தப் புலவர்களின் வினாக்களுக் கெல்லாம் விடை கூறினா

இல்லாமல், அவர்கள் உரைகளைப் போலி யுரை யென்று புகன்று மறுப்பது பொருந்தாத காரியம். புலவர்கள் அதன் பொருட்டுக் கவலைகொண்டு திருக்கோயிலை அடைந்து கடவுளை வணங்கித் 'தங்கள் உரையைத் தெளிந்து சொல்வதற்குச் சிறந்தவன் ஒருவனைத் தெரிந்து தரல்வேண்டும்' என்று தோத்திரம் புரிந்தார்கள்.

அப்போது "புலவீர்காள்! இவ்வூரில் உப்பூரிகுடி கிழார் என்பவருக்கு உருத்திர சன்மன் என்று ஒரு புத்திரன் இருக்கிறான்; அவனை நீங்கள் தலைவனாக வேற்றுச் சிறந்த வுரையைத் தெளிந்து கொள்ளுங்கள்" என்று, ஒரு தெய்வக் குரல் எழுந்தது. அஃது அனைவர்க்கும் உடன்பாடாக விருந்த படியினால், அவர்கள் உடனே உருத்திர சன்மனைக் கண்டு, தங்கள் காரியத்தையும் கடவுள் கட்டளையையும் கூறி நின்றார்கள். அவ்வுருத்திர சன்மன் என்பவன் இயற்கை யிலேயே எல்லாவற்றையும் அறிந்தவன். எழுத்து சொல் பொருள் அணி யாப்பு என்ற ஐந்திலக்கணங்களையும் ஐயம் திரிபு அறியாமைகள் அறக் கற்றவன், உயர் குடியில் உதித்தவன். உத்தம வொழுக்கங்களில் உயர்ந்தவன். அவன் வெண்பட்டுடுத்தியும், வெண்பூச் சூடியும், வெண்சாந் தணிந்தும், தன்னைச் சிங்காரித்துக் கொண்டு சங்க மண்டபத்தைச் சார்ந்தான்.

நல்லிசைப் புலவர்கள் நாற்பத் தொன்பதின்மரும் அவனைத் தெய்வப் பலகையில் அமர்த்தித் தாங்கள் எழுதிய வுரைகளை ஒவ்வொருவராக நின்று உரைத்து வந்தார்கள். உருத்திர சன்மன் அவ்வுரைகளுக் கெல்லாம் குற்றம் சொல்லித் தள்ளி, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் எழுதிய வுரையை மாத்திரம் உண்மை யுரை யென்று ஒப்புக்கொண்டனன். ஆண்டில் இளைஞனா யிருந்தாலும் அறிவில் முதலியவனாகி, மெய்ப்பொருள் இதுவென்று சொல்லியும், மற்ற வுரைகளில்

உள்ள குற்றங்களை விளக்கியும், தாங்கள் ஒப்புக்கொள்ளும் வண்ணம் எடுத்துக் காட்டின உருத்திர சன்மனை அந்தப் புலவர் அனைவரும் புகழ்ந்து கொண்டாடினார்கள். ஆதலால், தம்மினும் கற்று வல்லவர் சபையில், தாம் கற்றவற்றைச் சொல்லித் தெளிவது கற்றவர் இலக்கண மாகும்.

—களவியல் வரலாறு.

கற்றறிந்தார் கல்வி விளங்கும் ; கசடறச்
சொற்றெறிதல் வல்லா ரகத்து.

## 73—அவை யஞ்சாமை:—ஆளவந்தார்

அவை யஞ்சாமை என்பது சொல்வதற் குரிய சபையினை அறிந்து, விஷயங்களைச் சொல்லும்பொழுது அந்தச் சபைக்கு அஞ்சா திருத்த லாகும். வினை முடிக்கச் செல்கின்றவரும், பண்டிதரும், கற்றோர் சபை கல்லார் சபை என்னும் சபைகளை அறிந்து, கற்றவர் சபையில் தாம் கற்றவற்றைச் சொல்லும் பொழுது, அச்சத்தினால் மாறுபடுதல் மலைவு கொள்ளுதல் முதலான குற்றம் உண்டாகச் சொல்லாமல், விஷயங்களை வரிசை படத் தொகுத்துச், சுருக்கியும் விளக்கியும் சொல்ல வேண்டும். அங்ஙனம் சொல்ல வல்லவர் கற்றவர் அனைவரினும் நன்கு கற்றவர் என்று புகழ்ந்து போற்றப்படுவார்.

போர்க் களத்தில் பகைவர் நடுவில் அஞ்சாமற் புகுந்து, தனது வீரத் தன்மை விளங்கச், சண்டை யிட்டுச் சாக வல்லவர் பலர் இருந்து வந்தாலும், சபை நடுவில் அஞ்சாமற் புகுந்து தாம் கற்றவற்றை அவர்கள் மனம் கொள்ளும் வண்ணம் சொல்ல வல்லவர் சிலர் தாம் இருப்பார்கள். சில் வாழ் நாள், பல் பிணி, சிற்றறிவு முதலான மக்கட் குற்றம்

பலவற்றையும் பொருந்திய வொருவன் எல்லாவற்றையும் கற்றுத் தெளிவதென்பது கூடாத காரியம். வேறு வேறாகிய கல்வி யுடையவர் பலர் கூடியிருந்த சபையில் ஒருவன் சென்று, தான் கற்றவற்றை அவர்களுக்குப் பொருந்தச் சொல்லும் பொழுது, அவர்களும் தாம் தாம் கற்றவற்றை முன்னாகப் பின்னாகச் சொல்வா ராதலால், அவற்றிலிருந்து தான் கல்லாதவற்றைத் தெரிந்துகொள்வதென்பது சிறந்த வழி யாகும்.

சபையில் எழுந்த வினாவுக்கெல்லாம் விடை சொல்ல விரும்புகின்றவன் இலக்கண நெறியில் உள்ள அளவை நூல்களை யெல்லாம் ஐயமறக் கற்றிருக்க வேண்டும். சமர் முகமும் பகைவனும் கிடைத்துத், தானும் கூரிய தாகி நன்றாயிருந்த போதிலும், பேடி கையிற் கொண்ட குற்றத்தினால் வாள் வெற்றி பெறுவ தில்லை யல்லவா! அது போலவே சபைக்கு அஞ்சுகின்றவன் கற்ற நூலும் சிறிதும் பயன் படாமற் போகின்றது. அவ்வகைப் பட்டவர்களை உலகத்தார் கல்லாதவரினும் கடைஞர் என்று கருதுவார்கள். அவர்கள் தாம் கற்ற கல்வியினால் தாமும் பய னெய்தாமல், பிறரை எய்துவிப்பதும் செய்யாமல், கற்கும் துன்பம் ஒன்றை மாத்திரமே கொண்டு வருந்தி நிற்பார்கள். இவர்கள் அனைவரையும் போல உலகத்தில் உயிர் வாழ்ந்து வந்தாலும் புலவர் தொகுதியில் இறந்தவர்களாகவே எண்ணப்பட்டு போவார்கள்.

முன்னொரு காலத்தில் மதுரைப் பட்டணத்தில் வித்வத் ஜன கோலாகலன் என்று ஒரு பண்டிதன் இருந்தான். அவன் எல்லாக் கலைகளையும் எழுத் தெண்ணிப் படித்தவன். அவன் தனது கல்விச் செருக்கினால் அங்கிருந்த எல்லாப் பண்டிதர்களிடத்திலும் வரி வசூலிக்கத் தொடங்கி விட்டான். பண்டிதர்கள் அவனுடன் வாதம் செய்யப் பயந்து அவனுக்கு,

வரி செலுத்திக் கொண்டு வந்தார்கள். அந்தப் பட்டணத்தில் யமுனைத் துறைவன் என்று சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் அங்கொரு பாடசாலையில் கல்வி கற்றுக் கொண்டு வந்தான். அவன் அந்தப் பாடசாலையில் ஆண்டில் இளைஞனு யிருந்தாலும் அறிவில் முதியவனுய் விளங்கினுன். ஒரு தருணத்தில் வித்வத் ஜன கோலாகலன் வேலையாட்கள் வரி வசூலிக்கும் பொருட்டு அந்தப் பள்ளிக்கு வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது பள்ளியாசிரியர் வெளியில் சென்றிருந்தபடியினுல் அங்கிருந்த யமுனைத் துறைவன் 'வரி கொடுப்பதில்லை; வேண்டும் என்முல், உங்கள் பண்டிதரை வாதம் செய்ய உடனே வரச் சொல்லுங்கள்' என்று அவர்களுடன் சொல்லி யனுப்பிவிட்டான்.

சற்று நேரத்துக்குள் அவ்விடத்துக்கு ஆசிரியர் வந்து சேர்ந்தார். பண்டிதன் வேலையாட்களும் பல்லக்கைச் சுமந்து கொண்டு பாடசாலைக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். யமுனைத் துறைவன் ஆசிரியருக்கு நடந்தவற்றைச் சொல்லிப், பல்லக்கில் அமர்ந்து, பார்த்திபன் சபைக்குச் சென்முன். சிறுவன் வரவை அறிந்த அரசன் மனைவி 'பண்டிதர் தோற்பது திண்ணம்' என்று, பார்த்திபனுக்குப் புகன்முள். அரசன் அதனை அங்கீகரிக்க வில்லை. அதனுல் அவ்விருவர்க்கும் பேச்சு வளர்ந்து 'சிறுவன் தோற்முல், அடிமைகளுக்கு அடிமை யாகிறேன்' என்று அரசியும், 'சிறுவன் வென்முல், அரசிற் பாதியை அவனுக்கு அளித்து விடுகிறேன்' என்று அரசனும், சபதம் செய்துகொண்டார்கள்.

பிற்பாடு, சபையில் பண்டிதனுக்கும் யமுனைத் துறைவனுக்கும் பிரபலமாக வாதம் நடந்தது. பண்டிதன் முதலில் சிறிது நேரம் வரையில் அலக்ஷ்ய புத்தியோடு வாதம் செய்து வந்தான். சற்றுச் சென்றதன்மேல், சாஸ்திரங்களினுல்

அந்தச் சிறுவனை வெல்ல முடியாதென்று அவனுக்குத் தீர்மான மாய்த் தெரிந்து போயிற்று. அதனை உணர்ந்து கொண்ட சிறுவன் "பண்டிதரே! ஐந்து நாழிகைக்கும் அதிகமாகத் தாங்கள் இப்பொழுது என்னுடன் வாதம் செய்து வந்திருக் கிறீர்கள்; நான் அவற்றுக்குச் சொல்லி வந்த விடைகளைக் கொண்டு என் புலமையைத் தாங்கள் நிதானித்துக்கொண் டிருக்கலாம்; இனி, என் வார்த்தையைக் கேளுங்கள்; நான் 'உண்டு' என்று சொல்கின்ற மூன்றைத், தாங்கள் 'இல்லை' யென்று சொல்லி மறுத்து விட்டால், நான் தோற்றுப் போனதாக ஒப்புக்கொண்டு விடுகிறேன்; இல்லையேல், தாங்கள் தோற்றதாக ஒப்புக் கொள்ள வேண்டும்" என்று சொன்னான். அதனை அரசன் அங்கீகரித்துவிட்ட படியினால், தனக்குச் சம்மதம் இராமற் போனாலும், பண்டிதனும் விதி யில்லாமல் ஒப்புக்கொள்ள வேண்டியதாய் முடிந்தது.

யமுனைத் துறைவன் "ஐயா! நான் 'தங்கள் தாய் புத்திர வதி; இவ்வரசர் 'புண்ணியவான்' பட்ட மகிஷி 'பதிவிரதை' என்று சொல்கிறேன்; தாங்கள் இம்மூன்றையும் அல்ல வென்று மறுத்து விடுங்கள்" என்று சொன்னான். வித்வத் ஜன கோலாகலனுக்குத் தலையில் இடி விழுந்ததுபோ லாய் விட்டது. அவனுக்கு ஒன்றும் தோன்ற வில்லை. தன் தாயை 'மலடி' யென்றும், அரசனைப் 'பாபி' யென்றும், அரசி யைக் 'கற்பிழந்தவள்' என்றும், எங்ஙனம் சொல்லத் துணி வான்? பலவிதமாய் முயன்றும் பயன் பெற்றா னில்லை. பின்னர் அந்தப் பண்டிதன் "இஃதொரு அகட விகட வினா; சிறுபிள்ளை யாதலால், பய மறியாமற் பேசிவிட்டாய்; உன் வினாவை இல்லையென்று மறுக்க, உன்னால்தான் முடியுமா? அவற்றை மறுத்தால், உலகப் பழியும் உலக நிந்தையும் ஒரு மிக்க வந்து சேரும் அல்லவா? வல்லமை யிருந்தால், நீயே அவற்றை மறுத்துக் காட்டு" என்று கூறினான்.

யமுனைத் துறைவன் "ஐயா! அப்படியே மறுக்கிறேன்; தங்கள் தாய் தங்கள் ஒருவரையே பெற்றிருக்கின்றபடியினால், அவளுக்கு வாழை மலடி யென்று பெயர். வாழை ஒரு குலை ஈன்றதும் அழிந்து போகின்ற தல்லவா! நேராய்ச் செய்யா விட்டாலும், நாட்டார் செய்யும் பாவங்கள் யாவும் நிருபனைச் சாருகின்ற படியினால், அரசர் பாவி யாவார்; குழந்தைப் பருவத்தில் சந்திரனுக்கும், விளையாட்டுப் பருவத்தில் கந்தருவனுக்கும், மங்கைப் பருவத்தில் அக்னிக்கும் உரியவளாகிப், பின்னரே மணமகனுக்கு ஒரு பெண் மனைவி யாகின்ற படியினால் பட்டமகிஷி பதிவிரதை யல்லள்" என்று, அம்மூன்றையும் யுக்தி வாதத்தினால் கண்டனம் செய்துவிட்டான். பின்னர்ப் பண்டிதன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு அவமான மடைந்து போனான்.

பட்டமகிஷி 'என்னை அடிமை யாக்காதபடி ஆட்கொள்ள வந்தனன்' என்று, யமுனைத் துறைவனுக்கு ஆளவந்தார் என்று அருமைத் திருநாமம் அளித்து மகிழ்ந்திருந்தாள். அரசனும் தன் சபதப்படி அரசிற் பாதியை ஆளவந்தாருக்கு அளித்து, ஆநந்தம் அடைந்திருந்தான். ஆதலால், அனைவரும் ஆளவந்தார்போலச் சபையைக் கண்டு அஞ்சாமல், விஷயங்களைப் பேசி வெற்றி கொள்ளவேண்டும்.

ஆளவந்தார் சரித்திரம்.

கற்றாருட் கற்றா ரெனப்படுவர்; கற்றார்முன்
கற்ற செலச் சொல்லுவார்.

## இரண்டாவது புத்தகம்

முற்றுப் பெற்றது.

Printed at Tirupati Sri Mahant's Press, Madras.